# தமிழ்ப் பெருமக்கள்

## வரலாறு

1. மாணிக்கவாசகர்
2. பட்டினத்துப் பிள்ளையார்



எஸ். அனவரத விநாயகம் பிள்ளை

எழுதியது

சென்னை

எம். ஆதி அண்டு கம்பெனி

1921

ரெஜிஸ்டர் செய்தது] [விலை ரூ. 1 அணா 4

உள்ளுறை

மாணிக்கவாசகர்:



பட்டினத்துப் பிள்ளையார்:

# குறிப்பு

92-ம் பக்கத்தில் 16-ம வரியில் 'வணாங்கி' என்பதை 'வணாங்ங்கி' எனப் படிக்க.

188-ம் பக்கத்தில் 15-ம் வரியில் 'உமாபதி சிவாசாரியர் அருளியதாக வழங்கும்' என்பதை 'திருக்கடவூர் உய்யவந்த தேவ நாயனர் திருக்களிற்றுப்படியார்' என மாற்றிப் படிக்க.

196-ம் பக்கத்தில் 14-ம் வரியில் 'எனக் கோச் செங்கட் சோழர்' என்பதை 'என மாவலிச் சக்கரவர்த்தி' என மாற்றிப் படிக்க.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 25 | 6 | தெய்விதமாய | தெய்விகமாய் |
| 84 | 17 | சிலேடயை | சிலேடையை |
| 95 | 6 | சொண்டன | கொண்டன |
| 130 | 13 | ஓர் | ஒரு |
| 157 | 12 | யது ! | ன ! |
| 167 | 11 | தான் | தாம் |
| 198 | 17 | முழுத்தில் | முழுததில் |

# மாணிக்கவாசகர்

## முன்னுரை

'திருவாசகத்திற்கு உருகார் ஒரு வாசகத்திற்கும் உருகார்' என்னும் பழஞ்சொல்லுக்கு இலக்காகிய திருவாசகத் திருமுறையைத் திருவாய்மலர்ந்தருளிய மாணிக்கவாசகர் சைவ சமயத்தைத் தமிழ் நாட்டில் நிலைநிறுத்திய பரமாசாரியர்களுள் ஒருவர். சமய குரவர் நால்வரையும் திருஞான சம்பந்தர், திருநாவுக் கரையர், சுந்தரமூர்த்தி, மாணிக்கவாசகர் என முறைப்படுத்திக் கூறுவது மரபாயினும் மாணிக்க வாசகரே அவருள் தலைமை வகிக்கத் தக்கார் என்பது பக்த சிரோமணிகள் சிலரது கொள்கை. இலக்கணக் கொத்துடைய ஈசான தேசிகர், 'மாணிக்க வாசகர் அறிவாற் சிவனே யென்பது திண்ணம்' என்றாரன்றோ! முத்துத் தாண்டவரும், 'மாணிக்கவாசகர் பேறெனக் குத் தரவல்லாயோ அறியேன்' என இவர் பெற்ற பேற்றையே பெரிதாக மதித்தனர்.

இத்துணைப் பெரியாரது சரித்திரம் பண்டை நாட் சைவப் பெரியார் வரலாற்றை யுரைக்கும் திருத் தொண்டர் புராணத்தில் கூறப்படுதலே நெறி. ஆயி னும் அஃது அங்குக் கூறப்படவில்லை. மற்று, அது

கடவுள் மாமுனிவர் இயற்றிய திருவாதவூரர் புராணத்தில் பூர்த்தியாக உரைக்கப்பட்டது. திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணத்திலும், பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணத்திலும், அவர் சரித்திரத்தின் முற்பகுதியாகிய மதுரையிலும் மதுரையையடுத்த இடங்களிலும் அவர் சம்பந்தமாக நிகழ்ந்த நிகழ்ச்சிகள் விரிவாக உரைக்கப்பட்டுள்ளன. இன்னும், அவர் சரித்திரம் திருப்பெருந்துறைப் புராணத்துச் சிறிது விரிவாயும் திருவுத்தர கோசமங்கைப் புராணத்துச் சிறிது சுடடமாயும் கூறப்பட்டுள்ளது.

ஒரு பெரியார் சரித்திர முரைத்தற்கு ஒரு நூலே அமையும். வேறு வேறு ஆதாரங்கள் கிடைக்குமிடத்து வேறு வேறு சரித்திரங்கள் தோன்றல் இயல்பு. மாணிக்கவாசகர் வரலாறுரைக்கும் நூல்களுள் பேதம் மிகச் சிறிதே. புராணம் என்னும் சொல்லின் பொருளாற்றலுக் கேற்ப நூலுடையார் தத்தம் கற்பனைத்திறத்தை வெளிப்படுத்தித் தமக்குக் கதாநாயகரிடத்திலுள்ள பேரன்பினைக் காட்டிப் போயினர். ஆதலால், இக்காலத்துச் சரித்திர மென்று வழங்குமதற்கும் புராண சரித்திரத்திற்கும் ஒப்புமை அதிகமில்லை. ஆராய்ச்சி முறையினின்று வரலாறு எழுதுவோர் புராணங்களிலோ பிறநூல்களிலோ காணும் கதைகளை வடித்து உலகிற்குக் காட்டுதலே நெறி. இது தமிழ்ப் பெருமக்கள் அனைவருடைய வரலாற்றுக்கும் ஒக்கும்.

# திருவாதவூரர் புராணம்

வையை யாறு பெருகும் பாண்டி நாட்டில், திருவாதவூரில், பிராமண வருணத்தில் ஆமாத்தியர் மரபில் மாணிக்கவாசகர் அவதரித்தார். திருவாதவூரர் என்பது இவர்க்குப் பிள்ளைத் திருநாமம். பதினாறாண்டு கழியு முன்னரே இவர் கல்வியறிவொழுக்கங்களாற் சிறந்திருந்ததைப் பெரியோர் சொல்லக் கேட்ட பாண்டிய மன்னன் இவரை வரவழைத்துத் தனக்கு முதன் மந்திரியாக்கி இவர்க்குப் பல சிறப்புஞ் செய்தான்; 'தென்னவன் பிரமராயன்' என்னும் பட்டப் பெயரும் அளித்தான். அக்காலத்து இவர்க்குச் சிவபெருமானது திருவருளால் உலகத்தினிடத்து விருப்பு நீங்க, மந்திரித்தொழிலை மாத்திரம் கைவிடாது முறைப்படி நடத்திவந்தார். நாள் ஏற ஏற, இவர் அதிதீவிர பக்குவியாய் ஞாநாசாரியன் மீது நாட்டமுற்றிருந்தார். இத்தகைய மனநிலையினராய் இவர் அரசவையில் வீற்றிருக்கும் நாளில் ஒரு நாள் ஒற்றர் சிலர் வந்து, 'சோழதேசத்தைச் சார்ந்த கடற்கரையில் ஆரிய தேசத்தார் அரிய குதிரைகளைக் கொண்டுவந் திறங்கி யிருக்கின்றனர், நாங்கள் பார்த்தோம்' என்றனர். இதனைக் கேட்ட பாண்டியன், மந்திரித் தலைவரை நோக்கி, 'நீர் சென்று அக் குதிரைகளைக் கொண்டுவாரும்' என்றான். திருவாதவூரரும் சமமதித்து அரசனோடு அரண்மனைக்குள்

திருவாதவூரர் மந்திரியாதல்

சென்று குதிரை கொள்ளும்பொருட்டு அபரிமித மான பொன்னைப் பெற்றுக்கொண்டு மதுரையினின் றும் புறப்பட்டார்.

திருப்பெருந் துறையில் உபதேசம் பெறுதல்

திருவாதவூரர் போகும் வழியில் திருப்பெருந் துறை யென்னும் ஊரில், அவரை யாட்கொள்ளக் கருதிய சிவபெரு மான் ஆசாரிய மூர்த்தங்கொண்டு தமது அடியார்களும சுணநாதர் களும் மானிட உருவந் தாங்கித் தம்மைச் சூழ்ந் திருக்க ஒரு சோலையின் நடுவே ஒரு குருந்த மரத்தின் கீழ் எழுந்தருளியிருந்தனர். ஆகம கோஷத்தைக் கேட்டு அவர் முன் வந்த திருவாதவூரர் அவரை மனத் தால் வணங்கியும் காயத்தால் வணங்காதவர்போல நின்று, 'ஐயரே, உமது திருக்கரத்திலுள்ள புத்த கத்தின் பெயர் என்ன?' என, அப் பெரியார் 'இதன் பெயர் சிவ ஞான போதம்' என்றார். அதனைக் கேட்ட திருவாதவூரர், 'சிவமாவது யாது? ஞான மாவது யாது? போதமாவது யாது? இவற்றை விளக்குவீராயின் அன்று கல்லாலின் கீழிருந்த பரம குரு நீரேயாவீர், யானும் நுமக்கு அடிமையாவேன்' என, அவரும், 'சிவம் என்பது ஒப்பற்ற மெய்ப் பொருள், ஞான மென்பது அதனை யறிதல், போத மென்பது அறிந்ததைத் தெளிதல்' என்றருளிச் செய் தார். இதனைக் கேட்டதும் திருவாதவூரர் மனமுருகி, சிவபெருமானே என்னை யாட்கொள்ளும் பொருட்டு இவ் வடிவங்கொண்டு வந்துள்ளார் என்று நினைத்து அவரை நோக்கி, 'அடியேனை இப்பொழுதே ஆட் கொள்ளவேண்டும்' என்று இரந்தார். அங்கிருந்து

அடியார்களி லொருவரும், 'இவர் ஆட்கொள்ளத் தக்கார்' என்று சொல்லி வணங்கி நின்றார். கருணையங் கடலாகிய கடவுளும், 'உன்னை ஆட்கொள்ளும் பொருட்டே யாம் இங்கு வந்தோம், நீ அஞ்சல்' என்று இவரைத் தேற்றி, அடியார் ஒருவரை நோக்கி, 'வேண்டுவன உடனே சித்தஞ்செய்க' என்று ஆஞைந தந்தார். அவரும் வேண்டுவனவற்றைச் சித்தஞ செய்ய, நள்ளிரவில் ஆசாரியர் தெற்கு முகமாக ஆதனத்து வீற்றிருந்து, திருவாதவூரர் அன்போடு செய்த பூஜைகளை ஏற்றபின் அவர்மேல் அருள்நோக்கம் வைத்து அவர்க்குப் பஞ்சாக்ஷரோபதேசம் செய்து பின் தமது திருவடிகளை அவர் சிரமீது சூட்டினார். திருவாதவூரர் அத் திருவடிகளைத் தமது இரண்டுகண்களிலும் ஒற்றிக் கொண்டு விம்மிதரானார். பின் விடியற்கால மாதலும் ஆசாரியர் திருவாதவூரரைத் தனியே யழைத்த திருத்தித் திவ்யாகமங்களின் சாரங்களை யெல்லாம் விளங்க அருளிச்செய்து, 'இந்த எம் உருவத்தை உன் மனத்தில் இருத்துவாய்' என்றார். இவ்வுபதேச மொழிகளைக் கேட்டு உளமகிழ்ந்த திருவாதவூரர் ஆசாரியரைப் பலபடத் துதித்துத் தாம குதிரை வாங்குதற்காகக் கொண்டுவந்த பாண்டியன்பொருளனைத்தையும் அவர் திருமுன் சமர்ப்பித்து வணங்கினார். ஆசாரியரும மகிழ்வோடு அதனை ஏற்றுத் தம் பழவடியாருள் ஒருவரை நோக்கி, 'இதனைச் சிவாலயத் திருப்பணிக்கும், தவத்தோர்க்கும, வறியார்க்கும் வழங்குக' என்று ஆஞ்ஞாபிக்க, அவரும் அவ்வண்ணமே செய்தார். திருவாதவூரரோ முத்தராயினார். குடைக்கீழ்ச சிவிகையில் பரிசனங்கள் சூழ அரசர்போல வந்த அன்பர் முழுநீறுபூசிய முனிவராய்க் குடுமி

டவிழ்ந்து கிடக்க ஆனந்த பேலிட்டால் கண்ணீர் விட்டுக் கொண்டே யிருந்தார்; தம்மை ஆட் கொண்ட பரமாசாரியரிடத்து அன்பு கரை புரண் டோடத் தொழுதலுமே அழுதலுமே திருப்பணியாய் உலகத்தை அறவே மறந்து, பாலர் பித்தர் பேயர் என்றிவர்கள் தன்மையை யெய்தினர். இவர் நிலை இவ் வாறாக, இவருடன் வந்த படைத்தலைவர் முதலியோர் பாண்டிய மன்னன் கோபங் கொள்வனோ வென்று அஞ்சி, இவரிடத்துத் தணிந்து நெருங்கி, 'ஐயரே! தாம் வந்த காரியத்தை மறந்தீர்' என விண்ணப்பம் செய்தலும், இவர் அவர்களை இன்னொரன் றுணராதவ ராய்ப், 'புறம்போமின்' எனப் புகன்றார். அவர்கள் இவர் நிலைக்கு இரங்கி, தாமதியாது புறப்பட்டுப் பாண்டிய மன்னனைச சார்ந்து, செய்தி இது வெனச் சொல்லி வணங்கினர். மன்னவனும் 'இம் மந்திரியைப் படைத்த எனக்கு என்ன குறை!' என்று ரோஷச் சிரிப்புச் சிரித்து, வன் சொற்கள் நிரம்பிய ஓலை யொன்றெழுதி அவர்கள் கையிற் கொடுத்து, 'நீவிர் சென்று இவ்வோ லையை அவர்க்குக் காட்டி அவரைப் பிடித்த பிடியாய்க் கொண்டுவருக' என ஆஞ்ஞாபிக்க, அவர்கள் உடனே சென்று அடிகட்கு அதனைக் காட்டினர். பரமசிவனது திருமுகத்தை யன்றி மறு முகத்தைப் பார்க்கப் பொறாத வாதவூரர் அரசன் திருமுகத்தை அங்கு வந்தாரில் ஒருவன் வாசித்தசொல்லக் கேட்டு, ஆசா ரியர் முன்போய், அரசன் எழுதியனுப்பிய செய்தியை விண்ணப்பம் செய்தனர். ஆசாரியரும், 'நீ அஞ்சல் வேண்டா; நாமே குதிரைகளைக் கொண்டுவந்து பாண் டியனுக்குக் கொடுப்போம். நீ தூதர்களோடு போய்ப் பாண்டியனைக் கண்டு, "தாம் எழுதிய ஓலையைப்

பார்த்து நான் வந்து விட்டேன்: ஆவணி மாசம் மூல நாளில் குதிரைகள் வரும்'' என்று சொல்' எனத் தேற்றி, அவருக்குத் திருநீறு தரித்து, முன்போல மந்திரிக்கோலஞ் செய்வித்து, ஒருயர்ந்த மாணிக்கத்தையளித்து, 'இதனைக் கையுறையாகக் கொடுத்து அரசனைக் காண்பாய்' என்று சொல்லியனுப்பினார். விடைபெற்றுச் சென்ற திருவாதவூரர் மதுரைக்குப் போய் அவ்வாறே பாண்டியனைக் கண்டார். பாண்டியனும் அகமிக மகிழ்ந்து அவரை இருக்கச்சொல்லி, மாணிக்கத்தை வியந்து நோக்கி, 'தாம போன திக்கில் நடந்ததென்ன?' என்று கேட்டான். திருவாதவூரர், 'இங்கிருந்து எடுத்துப்போன திரவியத்தைக் கொண்டு நல்ல குதிரைகள் பல வாங்கி, அவற்றை மதுரைக்குக் கொண்டுவருவதற்கு நல்ல நாள் எது என்று விசாரித்தபோது பிராமணர் ஆவணிமூலமென்று சொல்ல, அந்த நாள் வரட்டுமென்று திருப்பெருந்துறையில் தங்கினேன். சேனுபதி முதலியோர் இங்குவர விரும்பினராய்த் திரும்பிவந்து என்னைக் குறித்துச் சொல்லிய அபவாதங்களைக் கேட்டு நீர் கோபங்கொண்டு ஓரோலை எழுதியனுப்பினீர். அதனைக் கண்டு யான் முன்னே வந்தேன்; குதிரைகள் ஆவணி மூலத்தன்று வரும்' என்றார். மன்னவனும மந்திரித் தலைவரை நோக்கி, 'நமக்குள்ள நட்பைக் கெடுக்க எண்ணிய சிலர் சொல்லக் கேட்டுக் கோபங்கொண் டெழுதினேம்; அதனை மனத்தில் வைக்கவேண்டா' என்று சமாதான வார்த்தைசொல்லி, அவரை அரண்மனைக்கு அழைத்துச் சென்று உபசாரங்கள் செய்தனுப்பினன் குதிரை வருதற்குக் குறித்த தினத்துக்கு இரண்டு தினங்கள் முன். ஒரு மந்திரி அரசனை அந்தரங்கத்திற்

பார்த்து, 'திருவாதவூரர் இங்கிருந்து கொண்டுபோன பொருளை யெல்லாம் திருப்பெருந்துறையில் ஒரு சிவனடியார் கையில் கொடுத்துவிட்டார், குதிரைகள் வாங்கவில்லை. அவர் சொல்லிய அனைத்தும் பொய்' என்றான். அது கேட்ட பாண்டியன் உடனே சில தூதரை யனுப்பித் திருப்பெருந்துறையிலும் அதனை யடுத்த ஊர்களிலும் குதிரைகளில்லையென்று தெரிந்து, பெருங் கோபமடைந்து, திருவாதவூரரை வருத்திப் பொருள் வாங்கும்படி தண்டலாளருக்குக் கட்டளை யிட்டான். அவ்வாறே தண்டலாளர்கள் அவரைப் பலவகையில் வருத்தியும் அவர் பேசாதிருக்க அவரைச் சிறைச்சாலையில் வைத்தனர். அன்று பொழுதும் பட்டது. அன்றிரா முழுதும் அம் மதுரை யூரார் துக்கத்தால் கண்ணுறங்கிலர். காலையில் மீண்டும் தண்டலாளர் அவரை வெளிக்கொணர்ந்து பொருளைக் கொடுமென்று வெயிலில் நிறுத்தி வருத்தினர். அப்பொழுது திருவாதவூரர் தமது பரமாசாரியரை நினைத்து, 'இம்மாதிரிக் கஷ்டம் எனக்கு வருதல் உமக்கு ஏற்சன்றே!' என்றும், 'நீர் சொன்னசொல் பொய்யோ!' என்றும் சொல்லி இரங்கினர்.

சிவபெருமான் குதிரையிடுதல்

இவர் இவ்வாறு இங்கு வருந்த, சிவபெருமான் இவர் வருத்தத்தை நீக்க எண்ணி, நரிகள் பரிகளாகவும் தேவர்கள் அவற்றை நடத்தும் பாகர்களாகவும் திருவுளத்தில் சங்கற்பித்தார். அக் கணமே நரிகளும் தேவர்களும் அவ்வாறாக, தாம் ஆரிய தேசத்துக் குதிரை வாணிகர்போல வடிவங்கொண்டு, வேதமே குதிரையாக அதன்மீ தேறி, குதிரைப்

பாகர் தம்மைச் சூழ்ந்து வர, மதுரையை யடுத்தார். இதனைக் கண்டவர்கள் ஓடி அரசனுக்கு அறிவித்தனர். அரசனும் மகிழ்ந்து திருவாதவூரரை வரவழைத்துச் சிறப்புக்கள் செய்து அவரோடு அரண்மனைவிட்டுப் புறம்போந்து, வையாளி வெளியில் அப்போது அமைக்கப்பட்ட சிங்காதனத்திருந்து, சங்கு முதலிய வாத்தியங்கள் சப்திக்கவும், பூமியிலிருந்து மேலெழுகின்ற தூசிப்படலம் ஆகாயத்திற் பரவவும், கடல் பரந்துவருவதுபோல நெருங்கி வருகின்ற குதிரைக் கூட்டங்களின் தோற்றத்தைக் கண்டான். பின் குதிரைக்கூட்டங்களும்முன்வந்துசேர்ந்தன. குதிரைச் சேவகர் நடுவே சிவபெருமானும் வந்தார். பாண்டியன் விருப்பத்தைத் திருவாதவூரரால் அறிந்த சிவபெருமான் குதிரையைப்பலவிதமாகநடத்திக்காட்டிப் பிறகு அது நடனமிட்டுவர அரசனெதிர் வந்தார். அதனைக் கண்டு மகிழ்ந்த அரசன் அவர்க்கு விலையுயர்ந்த ஆடையொன்றைப் பரிசாக அளித்தான். அதனைக் குதிரைத் தலைவர் புன்னகையோடு செண்டினால் ஏற்றார். அது கண்டு பாண்டியன் பொருமுகை, திருவாதவூரர் அஃது அவர் நாட்டு வழக்கென்று தெரிவித்து அவன் கோபத்தை யாற்றினார். பின் அசுவலக்ஷண மறிந்தார் வந்து நோக்கி, இவை மிக நல்லனவென்று உரைத்தனர். தான் கொடுத்தனுப்பிய பொருள்போல எட்டுமடங்கு கொடுத்தாலும் இவற்றைப் பெறலரிது என்று அரசன் அறிந்தான். அக் குதிரைகளனைத்தையுங் கயிறு மாறிக்கொடுத்துவிட்டுச் சிவபெருமானும் விடைபெற்றுச்சென்றனர். அரசன் திருவாதவூரர்க்கு மிக்க மரியாதைகள் செய்து மகிழ்ந்தான். மறுநாள் உதயத்தில் சிவபெருமானது திருவருளால் அக்

குதிரைகளெல்லாம் நரிகளாகிக் குதிரைப்பந்தியி லிருந்த குதிரைகளைக் கொன்று, ஊரார் அஞ்சும் படி ஊளையிடத் தொடங்கின. இதனைக் குதிரைக் காரர் வந்து சொல்ல அறிந்த பாண்டியன் கடுங் கோபங் கொண்டான். நரிகள் திருவருளால் ஓடி மறைந்தன. உடனே அவன் தண்டலாளரை அனுப் பித் திருவாதவூரரை வரவழைத்து அருகில் நிறுத்திக் கொண்டு, 'இவர் இவ்வண்ணஞ் செய்தது நியாயமா? பிராமணர், தவத்தோர், மாதர், விருத்தர், பாலர் என்றின்னோர் என்ன குற்றஞ் செய்யினும் அவரை அரசன் தண்டிக்கலாகாதென்று நீதி சாத்திரங் கூறு தலின், யான் இவரைத் தண்டியேன்' என்று சொல் லித் தண்டலாளரை நோக்கி, 'நீங்கள் இவரைக் கொண்டுபோய் என் திரவியம் முழுதும் வாங்குதற்கு வழிபாருங்கள்' என்று ஆஞ்ஞாபித்தான். அவர்கள் இவரைக் கொண்டுபோய் வெயிலிலே நிறுத்திவைத் தார்கள். அப்பொழுது திருவாதவூரர் முன்போலவே, 'இந்தத் துன்பம் எனக்கு வரலாமா!' என்றிரங்கினர்.

சிவபெருமான் மண் சுமத்தல்

திருவாதவூரர் வருத்தத்தை பொழிக்க எண் ணிய சிவபெருமான் கங்கையாற்றை நோக்கி, 'நீ போய் வாதவூரன் துன் பத்தைத் தொலைப்பாய்' என்று சொல்ல, அவ் வாறும் பெருக்கெடுத்து வையையிற் கலந்து மதுரையில் வந்து பரந்தது. இதனைக் கண்ட ஊர் கவலைக்கடலில் ஆழ்ந்தது. அரசனும் நதியின் கோபந் தணித்தற்காகப் பூவும் முத்தும் பொன்னும் பிறவும் பலியாக நீரில் இட்டான். அப்பொழு தும் வெள்ளம் பெருக, 'இதற்குக் காரணம் யாதாக

லாம் ?' என அவன் மந்திரிகளை உசாவினன். அவர்கள் ஆலோசித்து, 'திருவாதவூரர் வருத்தம் நீங்குமாயின் இப் பெருக்கு ஒழியும்' என்று சொல்லி வணங்கினர். பாண்டியன் மனமகிழ்ந்து திருவாதவூரரை வரவழைத்து உபசரித்து, 'சிவனடியாருக்கு நீர் வழங்கியது என் பொருளேயாயின், அப் புண்ணியம் வேறு யாரைச் சேரும்! இஃதறியாமல் உம்மை வருத்தினேனே' என்று அனுதாபப்பட்டு, 'இவ் வையைப் பெருக்கு ஊரை யழியாதபடி தவத்தால் மிக்க நீரே உபாயஞ் செய்யவேண்டும்' என்று வேண்டினன். திருவாதவூரரும் சிவபெருமானை மனத்தில் சிந்தித்து வணங்கினர். உடனே வையைநீர் வேகங் குறைந்து அடங்கி உள்வாங்கிற்று. திருவாதவூரர் கரையில் நின்று, அங்கிருந்த தூதரை நோக்கி, 'நீங்கள் சென்று, "நகரிலுள்ளாரெல்லாம் வந்து இந் நதியில் அணையிடவேண்டும்" என முரசறைவியுங்கள்' என்று நியமிக்க, அவர்களும் முரசறைவித்து ஊராரெல்லாரையும் ஆற்றங்கரையிலே சேர்ப்பித்தார்கள். ஒவ்வொருவரும் தத்தமக்குக் காட்டப்பட்ட இடத்தை மண்வெட்டியிட்டு அடைக்க முந்தினர். அப்பொழுது சிவபெருமானிடத்து அன்புநிறைந்தவளும், பிட்டு விற்றுப் பிழைப்பவளும், பழுத்தகிழவியுமாகிய செம்மனச் செல்வி யென்பாள் தனக்குரிய இடத்தை யடைக்கமுடியலாமல் நிற்க, அதிகாரிகள் கடுஞ்சொற்கள்சொல்லினர். அவளும், 'நான் கொடுக்கும் பிட்டைக் கூலியாகப் பெற்று என் பங்கை யடைப்பவர் ஒருவரும் இல்லையே' என்று துக்கித்துச் சொக்கநாதர் ஆலயத்துக்குச் சென்று, தன் குறையைச் சொல்லினள். சொக்கநாதர் அவள் நிலைக்கிரங்கி, ஒரு கூலியாள்

வடிவங்கொண்டு அவள் முன் வந்து நின்று, 'என்னைக் கூலிவேலைக்கு வைத்துக் கொளவாருண்டோ' என்று புகல, செம்மனச்செல்வி மனமகிழ்ந்து அருகிற்போய், 'மகனே! எனக்குக் கூலியாளாக வா' என்ன, அவரும், 'கூலியை முன்னே கொடுத்தால் வருவேன்' என்றார். கிழவி, 'இப்போது வேண்டுமாயின் பசி தீர்தற்குத் தேவாமிர்தம் போன்ற இந்தப் பிட்டுத் தருவேன், சாயங்காலம் பிட்டு விற்றுக் கூலி தருவேன்' என்றாள். அதற்குச் சொக்கரும் இசைந்து, அவள் கொடுத்த பிட்டை வாங்கி யுண்டு, அவளோடு வையைக் கரைக்கு வந்து நின்று, 'அம்மையே, உன் பங்கைக் காட்டுவாய், இப்பொழுதே அடைத்துத் தருவேன்' என்று சொல்ல, கிழவி 'இதுதான்' என்றிடத்தைக் காட்ட, சொக்கரும் அடைக்கத் தொடங்கினார். மண்ணை வெட்டுவார், கூடையிலிடுவார், தலைமேலே சுமமாடு கோலிவைப்பார், நதிக்கரையிலே கொட்டுவார், திரும்புவார், வேர்ப்பார், உடம்பினைத் தவர்போலப் பிட்டினை மென்று நாவினுற் சுவைப்பார், பிட்டு நன்றாயிருக்கிறதென்று தலையை யசைப்பார், சிவபெருமானுக்குக் கண்ணப்பர் படைத்த மாமிசத்தினும் இஃது இனியது என்பார், மண்வெட்டியோடு கவித்த கூடையைக் கொண்டு கூத்தாடுவார், மண்ணை வெட்டிக் குவிப்பார், சீக்கிரமாய்க் காலாலே தாண்டித் திரும்புவார். இவர் இவ்வாறு செய்வதைப் பார்த்த பிட்டு வாணிச்சி பயந்து, அரசன் காரியஸ்தர் பார்த்தால் என்னகுமோ என்று நடுங்கி, இவரையும் ஒன்றும் சொல்லமாட்டாதவளாய் நின்றாள். இவள் மனநிலையை அறிந்த சொக்கர், 'நீ இங்கிருந்து கவலைப்படாதே, வீடு போய்ச் சேர், இதோ நான் அடைத்து

விடுகிறேன்' என்று அவளுக்குத் தைரியஞ் சொல்ல, அவளும் வீடு போய்ச் சேர்ந்தாள். சொக்கரோ கூடையே தலையணையாகவும், கொன்றை மர நிழலிலே குவிந்துகிடந்த மணலே பஞ்சணையாகவும் கொண்டு, வெகுநேரம் உழைத்து இளைத்தவர்போல நித்திரை செய்தார். அப்பொழுது திருவாதவூரர் பக்கத்தில் நிற்பவர்களைப் பார்த்து,'அவரவர்கள் பங்கை யடைத்த முறைமையை அறிந்து வாருங்கள்' என்று கட்டளையிட, அவர்களும் போய்ப் பார்த்து எல்லாருடைய பங்கும் அடைபட்டு ஒன்றுமாத்திரம் அடைபடாமலிருப்பதைக் கவனித்து, 'இது யாருடையது?' என்று அருகிலிருந்தாரை வினவினர். அவர்கள், அது பிட்டு வாணிச்சி பங்கென்றும் அதனை யடைத்தற்கு அவளால் ஏற்படுத்தப்பட்ட கூலியாள் ஆடிப் பாடிக்கொண் டிருந்துவிட்டுக்கொன்றை மரத்தடியில் உறங்கிக் கிடந்தானென்றும் சொல்ல, சூரியஸ்தருள் தலைவன், 'அவனை இங்குக் கொண்டுவருக' என்றான். கூலியாளைக் கொண்டுவர ஓடினவன், திடுக்கென்று விழித்துக்கொண்ட சொக்கரை நோக்கி, 'எங்கள் தலைவர் உன்னை அழைத்துவரச் சொன்னார்' என்று சொல்லி, அவரைக் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு வந்து தலைவன்முன் விட்டான். அவனும் சற்றும் இரக்கமில்லானாய், 'இவனை உதிரம் ஒழுகும்படி அடிப்பாயாக' என்று ஒருவனை ஏவினான். அவன் பிரம்பை எடுத்து ஓங்கியவுடனே சொக்கர் அங்குள்ளாரெல்லாம் திடுக்கிடும்படி மறைந்தார். ஆனால் அந்த அடியானது அரசன் அரசியர் மந்திரிமார் அனைவர்மேலும் பட்டது. திருவாதவூரர் மேலும் பட்டது. திருவாதவூரர் இஃது எம்பெருமான் செயலே யென்-

றுணர்ந்து இரங்கி நின்றபொழுது தூதர் வந்து நடந்த வரலாற்றையெல்லாம் சொல்லினர். அவர் புறப்பட்டுச் சொக்கநாயகர் கூலியாளாய் வேலைசெய்த இடத்தைப் போய்ப் பார்த்துப் பலவாறு புலம்பினர்.

வையை நதி விரைவில் வடிந்தது. பாண்டியனும் இவை யனைத்துஞ் சிவன் செயலென்று தெளிந்து திருவாதவூரரை வணங்கி, 'என் அறியாமையால் இதுவரை யான்செய்த குற்றங்களையெல்லாம் பொறுத்தருளவேண்டும். சொக்கப்பர் குதிரைமேலேறிவந்தது மன்றி திருமுடிமேல் பண்ணுஞ்சுமந்தாரே! அடியேன் நுமக்குத் தொண்டனாயிருந்து இட்ட பணிவிடையைச் செய்ய நீர் இவ்வுலகை ஆளவேண்டும்' என்று வேண்டினான். திருவாதவூரரோ 'திருப்பெருந்துறைக்கு என்னைப் போக விடுப்பதே எனக்குப் பூலோக ஆட்சியைக் கொடுத்ததாகும்' என்றார். பாண்டியனும் விடைகொடுத்துத் தன் அரண்மனையுட் புகுந்தான். திருவாதவூரர் மந்திரிவேடத்தை மாற்றித் தவவேடங் கொண்டு நேரே திருப்பெருந்துறைக்குச் சென்றார். சென்றவர் பரமாசாரியரைக் கண்டு வணங்கினர். அவரும் இவர்க்குத் திருநீறு தரித்துக் அருள் நோக்கம் செய்தபின் அடியார்களை நோக்கி, 'நாம் கைலாயத்துக்குச் செல்லவேண்டிய காலம் வந்தது, நீங்கள் இங்கு இன்பமாக வாழ்ந்திருங்கள்' என்றார். இதனைக் கேட்ட அடியார்கள் அவரைச் சூழ்ந்துகொண்டு, விட்டுப்பிரியமனமில்லாராய் அழுதார்கள். அவர், 'இக் குருந்தமரத்தின்நிழலிலே தெய்வபீடமொன்றுசெய்து அதன்மீது நம் திருவடிகளை வைத்து வணங்கியிருங்கள். என்று இப் பொய்கையிலே செழுமையாகிய

நெருப்புண்டாகுமோ அன்று நீங்கள் எல்லாரும் அதில் விழுந்து கவலையை ஒழிப்பீர்கள்' என்று சொல்லி அவர்களைத் தேற்றிக் கைலைநோக்கினர். அப்பொழுது திருவாதவூரர் மாத்திரம் பின்தொடர்ந்தார். சிவபெருமானும் அங்கொரு கொன்றை மரநிழலிலே தங்கி அவரை அருகழைத்து, 'நாம் எங்குமிருப்பினும் இக் குருந்த மரநிழலிலே அடியார்கள் வினையைத் தீர்த்தற் பொருட்டு நித்தியவாசம் பண்ணுவோம். நீ இவ்விடத்திலேயே அடியார்களோடு சேர்ந்திருந்து, அவர்கள் பொய்கையில் விழுங்காலத்து உடன்விழாமல், உத்தரகோச மங்கைக்குப்போய் அட்டமாசித்திகளையும் பெற்று, திவ்யஸ்தலங்கள் பலவற்றிற்கும் சென்று, ஆங்காங்கு இந்த ஒளியுருவை யாம் காட்டத் தரிசித்து, பின் சிதம்பரத்துக்குப் போய்ப் புத்தரை வாதில் வென்று, எமது சாயுச்சியபதவியை யடைவாய்' என்று சமாதானஞ் சொல்லினர்.

திருவாதவூரர் சிதம்பரத்தில் இருத்தல்

இவ்வாறு சிவபெருமான் சொலவியதைக்கேட்ட திருவாதவூரர், 'திருப்பெருந்துறையி லல்லாமல் சிதம்பரத்தில் தமியேன் சாயுச்சிய பதவியை யடைவேன் என்று பணித்ததென்ன?' என்று வினவ, அவரும் சிதம்பரத்தின் மகிமை யனைத்தையும் எடுத்து விளக்கி, திருவாதவூரர் நெற்றியில் விபூதிதரித்து, 'இவ்விடத்தில் நில்' என்று சொல்லிச் சிறிதுதூரம் போனர். திருவாதவூரர் நில்லாமல் உடன் சென்றார். கடவுள் அக்கணத்தே அந்தர்த்தான மாயினர். அதனைக் கண்ட அடியார் அச்சமும் இரக்கமும் அடைந்து சிவனை மனத்தால் வணங்கித் தலைமேல்

கூப்பிய கையோடு அடியார்கள் கூட்டத்தையடைந்து, அவர்களோடு குருந்த மரத்தடியில் தெய்வபீடத்தில் திருவடிப பூசை செய்திருந்தார். அப்படியிருக்கும் நாளிலே, 'நமச்சிவாய' என்று தொடங்கித் திருவாசகத்தைச் சொல்லத் தொடங்கி, அற்புதப்பத்து, அதிசயப்பத்து, குழைத்தபத்த, சென்னிப்பத்து, ஆசைப்பத்து, வாழாப்பத்து, அடைக்கலப்பத்து, செத்திலாப்பத்து, புணர்ச்சிப்பத்து, அருட்பத்து என்பவற்றை அருளிச் செய்து, பின்னர்த் திருவார்த்தை, எண்ணப்பதிகம், திருப்பள்ளி யெழுச்சி திருவேசறவு, உயிருண்ணிப்பத்து, பிரார்த்தனைப் பத்து, திருப்பாண்டிவிருத்தம் என்பவற்றையும் அருளிச் செய்து தெய்வத்திருவருளை வாழ்த்தியிருந்தார். ஒருநாள் சிவபெருமான் முன் அநுக்கிரகித்தபடியே பொய்கையில் நெருப்புத் தோன்றுதலும் அடியார்கள் பஞ்சாக்ஷரசெபம் செய்துகொண்டு அதில் மூழ்கினார்கள். மூழ்கினதும் சிவபெருமான் இடபவாகனத்தின்மேல் பார்வதி சமேதராய் அவர்கட்குக் காட்சியளிக்க, அவர்கள் சிவகணநாதர்களாய் வடிவுகொண்டு முன்வந்து நின்றார்கள். அப்பொழுது சிவபெருமான் அவர்களை நோக்கி, 'யாம் உங்களை இங்கு நிறுத்திப் போனதும், பொய்கையில் தோன்றும் நெருப்பில் மூழ்கச்சொன்னதும் எதற்காக வென்றால், வாதவூரனுக்குச் சிதம்பரத்தில் புத்தரை வெல்லவேண்டியிருக்கிறது, அவன் தனியே யிருந்தால் துன்பமடைவான், ஆதலால் உங்களைச் சிறிது காலத்திற்குத் துணையாக இருக்கச்சொன்னோம். மும்மலத் தொடர்பு நீங்கியவர்களும் இவ்வுலகில் மானுடவடிவு கொண்டிருப்பின் மலவாசனை சேருமென்று பொய்கையில் ஞானக்

கினியைத் தோற்றுவித்து, மாயாசரீரத்தை நீக்கி இச் சரீரத்தை உங்களுக்குக் கொடுத்தோம்' என்று சொல்லி, அவர்களோடு அந்தர்த்தானமாயினர். இக் காரியங்கள் நிகழும்பொழுது திருவாதவூரர் தனி யாக ஒரு கொன்றை மரநிழலில் சிவயோகஞ் செய் திருந்தார். சிவயோகத்திலேயே இந் நிகழ்ச்சிகளைக் கண்டு தாம் சிதம்பரத்திற் போய்ச்சேரும் விதத்தை யும் அறிந்து விழித்து, கடவுள் எழுந்தருளி மீண்டும் மறைந்தாரே என்றழுது மனம்நொந்து, என்னைவிட்டு அடியார்கள் பொய்கைத் தீயிற் புகுந்தனரே எனப் புலம்பி, குருந்த மரத்தடிக்கு வந்து திருவடியைப்பற்றி வீழ்ந்து திருச்சதகம் அருளிச்செய்தார். பின்பு கடவுள் தமக்கு ஆஞ்ஞாபித்ததை நினைந்து திருவுத்தர கோசமங்கைக்குச் சென்று, அங்குக் குருவடிவங் காணாராய் மூர்ச்சித்து, என்னைக் கைவிட்டாயோ என்று நீத்தல் விண்ணப்பஞ்சொல்லலும், அவ் வடிவந் தோன்ற அதனைக் கண்டு வணங்கினார். பின் அங்கங்கே யுள்ள ஸ்தலங்களுக்குச் செல்வாராயினார். திருவா ரூரில் தியாகராயருடைய திருவடிகளை வணங்கித் திருப் புலம்பல் அருளினார். சீகாழியில் பிடித்தபத்து அருளிச் செய்து, வேறு சில ஸ்தலங்களை வணங்கியபின் திரு வண்ணாமலைக்குச் சென்றார். அங்குத் தம்மை ஆண் டருளின கோலத்தைக் கண்டு பலவாறாகத் துதித்து இருந்தநாளில் மார்கழி நீராடுதற்கு விடியற்காலத்தில் மாதர்கள் போகின்ற முறையைக் கவனித்து அவர்கள் சொன்னதாகத் திருவெம்பாவையைப் பாடியருளி னார்; அம்மானையாடுகிற மங்கையரைப் பார்த்து அவர் கள் சொன்னதாகத் திருவம்மானையைப் பாடினார். பின் திருவண்ணாமலையை விட்டுக் காஞ்சியைத் தரிசித்துத்

திருக்கழுக்குன்றஞ் சார்ந்து திருக்கழுக்குன்றப் பதிகம் பாடிச் சின்னாள் அங்கே வசித்திருந்தார். பின் சிதம்பரத்துக்குப் போய்ச் சிற்சபையில் தமது ஞானசாரியரின் திருவுருவைக் கண்டு ஆனந்தக் கண்ணீரொழுக நின்று துதித்து, கண்டபத்து அருளிச் செய்து சிவானுபூதியில் சித்திரம்போல் அசைவற்று நின்றார். தம்மை இந் நிலையில் கண்ட காவலர் அஞ்சும்படி நெடுநேரம் பரவசப்பட்டு நின்றுவிட்டுப் பிறகு திருப்புலீச்சரத்திலும் திருநாகேச்சுரத்திலும் கடவுளுடைய திருவடியை வணங்கித் தில்லை மூவாயிரவர் வாழ்கின்ற வீதியிற் போகும்போது, குலாப் பத்து, கோயிற் றிருப்பதிகம், கோயின் மூத்த திருப் பதிகம், கீர்த்தித் திருவகவல், திருவண்டப் பகுதி, போற்றித் திருவகவல் என்பவற்றை யருளி, மாதர்கள் திருப்பொற் சுண்ணம் இடித்தலைக் கண்டு அவர்கள் சொன்னதாகத் திருப்பொற்சுண்ணம் பாடி, திருத் தெள்ளேணம், திருவுந்தியார், திருத்தோணோக்கம், திருப்பூவல்லி, திருப்பொன்னூசல், அன்னைப்பத்து, திருக்கோத்தும்பி, குயிற்பத்து, திருத்தசாங்கம், அச்சப்பத்து என்பவற்றையும் பாடிய பின்பு, அந் நகர்ப்புறத்தில் ஒரு பன்னசாலை யமைத்து அதிலே தங்கி, நாள்தோறும் சிற்சபையில் நடராஜமூர்த்தியைத் தரிசித்துவருவதே நியமமாகக் கொண்டார்.

**திருவாதவூரர் புத்தரை வாதில் வெல்லுதல்**

அக்காலத்தில் மஹா சிவபக்தி பூண்ட தவசியொருவர் பூமியெங்குஞ் சஞ்சரிப்பவர் சோழ நாட்டுக்கு வந்து தில்லை நகரைத் தரிசித்து ஈழநாட்டைப் பார்க்க விரும்பி அங்குச் சென்று அத் தேசத்தரசன் இருக்கும் ஊரைச்சேர்ந்தார். அவர்

தாம் உட்காரும்பொழுதெல்லாம் 'பொன்னம்பலம்' என்று சொல்லிக்கொண்டு உட்காருவார். இதனைக் கவனித்த புத்தர்கள் அரசனிடத்துச் சென்று சொல்ல, அரசன் அவரை யழைத்துவரச்சொன்னான். அத் தவசியும், அவர்களோடு சென்று அரசன் முன்னிலையில் 'பொன்னம்பலம்' என்று சொல்லி உட்காந்தார். அரசன், 'அஃதென்ன அப்படிச்சொல்லுகின்றீர்?' என்ன, தவசியும் சிதம்பர க்ஷேத்திரத்தின் பெருமைமுழுவதையும் எடுத்துச் சொல்லி, 'ஒருதரம் பொன்னம்பலம் என்று சொன்னவர் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை இருபத்தோராயிரத் தறுநூறுதரம் உச்சரித்த பலனை பெறுவர்' என்று முடித்தார். அரசனருகில் இருந்த புத்தகுரு மிகக் கோபித்து, 'திரிபிடகத்தை யருளிய தலைவனையன்றி வேறு தெய்வமுண்டோ? உண்டாயின் தில்லைக்குப் போய வாதுசெய்து அவரிருந்து நடனஞ் செய்கின்ற கோயிலைப் புத்தன் கோயிலாக விளங்கும்படி இன்று முதல் மூன்று தினத்திற்குள் செய்வேன்' என்று சபதங் கூறி, சிவிகையி லேறிப் பௌத்தர் சூழச் சிதம்பரத்துக்குச் சென்றான். அரசனும் தன் ஊமையப பெண்ணை உடன் கூட்டிக்கொண்டு பரிவாரங்கள் சூழச் சிவிகையிலேறி அங்குச் சென்றான். அரசன் வருதற்கு முன்பே வந்த புத்த குரு ஆலயத்துட் புகுந்து பொன்செய் மண்டபத்தில் உட்காந்தான். அரசனும் வந்து அக் குருவை வணங்கி அருகில் இருந்தான். அப்பொழுது, அவ்வாலயத்திலுள்ளார் மனம் நொந்து திரண்டுவந்து புத்த குருவை ஆலயத்தை விட்டுப் போகும்படி சொன்னார்கள். அவன், 'யான் சோழராஜனுக் கெதிரில் உங்கள் சைவ சமயம் தாழ்ந்ததென்று சாதித்துப் புத்தனை உயர்ந்த

தெய்வமென்று ஸ்தாபித்தல்லாமல் போகமாட்டேன்' என்றான். இதனைக் கேட்டவர்கள் விரைந்து போய்த் தில்லை மூவாயிரவர்க்குத் தெரிவித்தார்கள். அவர்கள் சபைக்கு வந்து, தம் வருகையைக் கண்டும் இறுமாந்திருந்த அப் புத்தகுருவைப் பார்த்து, 'நீ இவ்வாறு மதியாதிருத்தல் என்?' என்று கேட்டனர். 'நீங்கள் வேதசாஸ்திரப் பிரமாணங்களைக்கொண்டு உங்கள் தெய்வமே தெய்வமென்று நிரூபிப்பீர்களாயின், யான் அதனை மறுத்துப் புத்தனே தெய்வமென்று ஸ்தாபிப்பேன்' என்றான் புத்தகுரு. தில்லை மூவாயிரவர் கோபித்து, 'நீ தோற்றனையென்று கலைஞர் சொல்லும்படி உன்னை வெல்லுவோம். மற்று, இப்போது உன்னோடு வார்த்தையாடுதல் சேற்றில் கல்லெறிதலையொக்கும்' என்று கூறி, சோழராஜனுக்கு ஓர் ஓலை எழுதியனுப்பி, மற்றைத் தபோதனர் முதலியோர்க்கும் 'நாளை நடராஜ தரிசனத்துக்கு வரவேண்டும்' என்று ஓலை போக்கினார்கள். அப்பொழுது சூரியன் அஸ்தமித்தான். அவர்களும் தந்தம் வீடுசென்று கவலையோடு படுத்துறங்கினர். இறுதிச் சாமத்தில் நடராஜமூர்த்தி ஒவ்வொருவர் கனவிலும் வந்து, 'நீங்கள் வருந்துவதை ஒழியுங்கள். நமது தில்லையெல்லையில் திருவாதவூரன் வந்திருக்கின்றான். அவன் இந்தப் பௌத்தர்களைத் தர்க்கசாஸ்திர முறைப்படி ஒரு நொடியில் வெல்வான். ஆதலால் அவனை அழைத்து வாருங்கள்' என்று சொல்லினர். விழித்துக்கொண்ட தில்லை மூவாயிரவர் கோயில் மண்டபத்திலே வந்து சேர்ந்து, தாங்கள் கண்ட கனவை ஒருவரோடொருவர் சொல்லிக் கொண்டு, திருவாதவூரர் இருக்குமிடத்திற்குச் சென்று, சங்கதி தெரிவித்தார்கள்.

அதனைக் கேட்ட திருவாதவூரர் கடவுள் முன்னமே தமக்குச் சொல்லியதை நினைந்து, தில்லை மூவாயிர வருடனே சென்று நடராஜப் பெருமானை வணங்கி அவரநுக்கிரகம் பெற்று, புத்தர்களிருக்கும் மண்டபத்தையடைந்து, அவர்களுடைய முகத்தைப் பார்த்தலாகாதென்று திரை யிடுவித்து அதன் மறைவில் ஓர் ஆசனத் திருந்தார். சோழராஜனும் விரைவில் வந்து திருவாதவூரரை வணங்கி அருகில் அமர்ந்தான். அப்பொழுது ஈழத்தரசன் சோழனை வணங்கித் திறை கொடுத்து வாழ்த்தினான். சோழனும் மகிழ்ந்து திறைப் பொருள்களை மெச்சி அவனைப் பக்கத்திலிருத்திக் கொண்டான். ஆலோசித்தூர் சாட்சி சொல்பவர்களும அருகில் வந்தமர்ந்தார்கள் எல்லாரும் வந்து நிறைந்த சபையில் சோழன் திருவாதவூரரை வணங்கி, 'சுவாமி, சைவத்தை நிறுத்துவது தமது பாரம; பௌத்தரை உயிர் போக்குவது எனது பாரம' என்றான் இதனைக்கேட்ட திருவாதவூரர் புத்தகுருவைப் பார்த்து, 'நீ வந்த காரணமென்ன?' என்னலும், அவன் 'எங்கள் தெய்வ மல்லால் வேறு தெய்வமில்லை யென்று எல்லாரும் காண நிரூபித்து, இப்பொன்னம்பலத்தே எங்கள் புத்தரை வைத்தற்காக நேற்றே வந்து காத்திருக்கின்றேன். இது தான் நான் வந்த காரணம்' என்றான். திருவாதவூரர் புன்னகை செய்து, 'ஆயின் உன் தெய்வ ஸ்வரூபத்தையும் முத்தி நிலையையும இன்னவெனச் சொல்வாய்' என்றார். புத்தகுருவும் திரிபிடகத்தில் சொல்லியபடியே அவற்றை விளக்கினான். திருவாதவூரர் அவன் சொல்லியவற்றையெல்லாம் தருக்க முறைப்படியே பூர்வபக்ஷஞ் செய்தார். அதன்மேல் புத்தகுரு, 'சிவபெருமான் கையில்

செபமாலை வைத்திருப்பதும், சிதம்பரத்திலே நிருத்தம் பண்ணுவதும், திருமேனியில் விபூதி தரித்திருப்பதும், அவர் தம்மைவிட வேறு தெய்வ முண்டென்று கருதுவதாலும், பிறர் பார்த்து மெச்சவேண்டு மென்று விரும்புவதாலும், பரிசுத்த மல்லாததைப் பரிசுத்த மென்று நினைப்பதாலுமே யன்றோ' என்று குதர்க்கஞ் சொல்ல, திருவாதவூரர் இகழ்ச்சி நகை புரிந்து, 'இவற்றிற்குச் சமாதானம் நீ கேட்டற்கு அருகனல்லை. ஆயினும், சீடருக்கு ஆயுதப் பயிற்சி செய்விப்போர் தம் கையில் ஆயுதத்தைக் கொண்டிருத்தல் போல் சிவபெருமான் உலகினர் தவத்தைச் செய்ய வேண்டுமென்று தாமும் செபமாலையைக் கையில் பிடித்தார்; விறகில் தீயைப்போலச் சரீரத்திற் கலந்து உயிர்களையெல்லாம் ஆட்டுகின்ற ஒரு நட்டுவனைப் போல்வார் எம் பெருமான்; விபூதி ஆன்மாக்களுக்குத் துன்பத்தை யொழிப்ப தாகும், பிள்ளைகள் அடைந்த பிணியை நீக்குதற்குத் தாய்மார் மருந்துண்டல்போல எம்பிரான் செய்ததாகும் அது' என்று சமாதான முரைத்து, கலைமகளைநோக்கி, 'வேதங்களைச் சொன்ன நீ இப் பொய்கள் சொல்லுதற்கு எவ்வாறு இசைந்தாய்? பரமசிவன் திருவருள் இல்லை யென்று துணிந்துரைக்கும் மூடர்கள் நாவைவிட்டு, அச்சிவன் ஆணை, உடனே நீங்குவாய்' என்று கோபித்துச் சொல்லலும், பௌத்தர்களெல்லாம் ஊமைகளாயினர். அதனைக் கண்ட ஈழதேசத்தரசன் மனம் வருந்தித் திருவாதவூரரை வணங்கி, 'சுவாமி, பேசவல்லார் ஊமைகளாயினர்; என்னுடைய ஊமைப் பெண்ணைப் பேசும்படி அனுக்கிரகிக்க வேண்டும், யான் உம் அடிமை' என்று இரந்தான். திருவாதவூரர் அப் பெண்ணை அழைத்துவரச்

சொல்லி அவளுக்கு அனுக்கிரகஞ் செய்து, 'இப் புத்த குரு வினாக்கட்கு நீ விடை பகர்வாய்' என்றலும், அவள் கற்றறிந்தோர் மெச்சத்தக்க விடை கூறினாள். அதனைத் திருவாதவூரர் மங்கையர் பயிலும் சாழல் விளையாட்டாகப் பாடியருளினார். இந்த அற்புதத்தைக் கண்ட ஈழத்தரசன் அப்பொழுதே திருவாதவூரர்க்கு நற்றொண்டனாயினான். சோழனும் தில்லை மூவாயிரவரும் 'பொன்னம்பலம் வாழ்க' என்று சொல்லித் திருவாதவூரரைத் துதித்தார்கள். ஈழத்தரசன் திருவாதவூரரை நோக்கி 'இப் பௌத்தர்களுக்கு ஊமைத் தன்மை நீங்க அருள் செய்யவேண்டும்' என்று பிரார்த்தித்தான். அவர் அவ்வாறே அருள் செய்ய அவர்கள் வாக்கை மீண்டும் பெற்று, திருவாதவூரரை வணங்கி, 'அடியேங்களுக்குத் திருநீறும் உருத்திராக்க மாலையும் கல்லாடையும் அளித்தருள்வீர்' என்று வேண்ட, அவரும் அவ்வண்ணமே செய்து, அவர்களுடைய சீவர ஆடையை அவர்கள் விரும்பியபடியே சுட்டெரித்தார். பின்பு எல்லாரும் சென்று நடராஜ மூர்த்தியைத் தரிசித்தனர். அப்புறம் சோழன் ஈழத்தரசன் முதலியோர் திருவாதவூரரிடத்து விடை பெற்றுத் தத்தம் ஊர்க்கேகினர். பௌத்தர்களோ திருவாதவூரரையும் தில்லையையும் விட்டுப் பிரிய மனமில்லாராய் அங்கேயே தங்கினர்

**திருவாதவூரர் திருவடிபெறுதல்**

ஸ்ரீவாதவூரரும் தில்லைநகரிலேயே தமது ஆச்சிரமத்துத் தங்கி, திருப்படையாட்சி, திருப்படை யெழுச்சி, அச்சோப் பத்து, யாத்திரைப்பத்து என்பவற்றைப் பாடி ஆனந்தவாழ்வை யுடையராயினர். அந்நாளிலே சிற்றம்பலத்திலே திருத்தஞ் செய்கின்ற நட

ராஜப்பெருமான் ஒருவேதியருருக்கொண்டு திருவாத ஆூரர்க் கெதிரில் நின்றார். திருவாதவூராரும் அவரை யிருக்கச்சொல்லி, அவர் வந்த வரலாற்றை வினவினார். வேதியரும், 'நாம் இருப்பது பாண்டி நாடு. உம் மைக் காணும்பொருட்டே நாம் இங்கு வந்தோம். பிரமா, விஷ்ணு முதலிய தேவர்களாலும் காண்டற் கரிய பரமசிவனைக் குதிரை யேறிவரச்செய்த உம் முடைய பெருமையாலே பாண்டிநாடு முழுதும் வாழ்ந் தது. திருப்பெருந்துறையில் பேரின்பமுற்றிருந்து பின் சிதம்பரத்துக்கு வந்து புத்தரை வாதில் வென்றீர் என்பதைக் கேட்டு யாவரும் மகிழ்ச்சிகொண்டனர். சிவபெருமானை நீர் பாடிய பாடல் முழுதும் ஓத விரும்பி யான் இங்கு வந்தேன். அப் பாடல்களை எழு திக்கொள்ளவேண்டும். விளங்கச்சொல்வீர்' என்றார். திருவாதவூரரும் அதற்கு இசைந்து திருவாசகத்தை மனமகிழ்ச்சியுடனே சொல்லினார். அது முழுதை யும் கடவுள்தாமே ஏட்டில் எழுதிமுடித்தபின்பு திரு வாதவூரரை நோக்கி, 'சபாநாயகர்மீது ஒரு கோவை பாடுவீர்' என்ன, அவரும் சொல்லிவரக் கடவுள் அதனையும் எழுதிமுடித்துப் புத்தகத்தைக் கட்டிக் கொண்டு அங்கு நின்றும் மின்னலைப்போல மறைந் தார். திருவாதவூரர் மனம்வருந்தி எழுந்து எங்கும் தேடியும் வேதியரைக் காணாராய், ஆச்சரியமெய்தி, பின் இவ்வாறு தோன்றி மறைந்தவர் எம்பெருமானே யென்று தேறி, ஆனந்தவெள்ளத் தழுந்தியிருந்தனர். கடவுள் புத்தகத்தோடு சபைக்கு எழுந்தருளி அத னைத் தேவர்களுக்கெல்லாம்படித்துக்காட்டி மகிழ்ந்து, 'வாதவூரன் சொல்ல எழுதிய இந்தப் புத்தகம் அழ கிய திருச்சிற்றம்பலமுடையார் கையெழுத்து' என்று

திருக்கோவையார் முடிந்த இடத்தில் எழுதி மைக் காப்புஞ் செய்து, திருவாதவூரருடைய பெருமையை உலகிற்கெல்லாம் அறிவிக்க எண்ணி அத்திருமுறையை அம்பலத்தின் வாசற்படியில் வைத்துவிட்டு மறைந் தருளினர். அதனைப் பூசைசெய்யும் பிராமணன் கண்டு, 'இப் புத்தகம் தெய்விதமாய் இங்கு வந்தது. இதனை நகரத்தார்க்குச சொல்வேன்' என்று போய்ச் சொல்ல, அவர்களும் ஏது அதிசயமென்று ஓடிவந்து புத்தகம் படிமீதிருத்தலைப் பார்த்து, 'இஃது எம்பெருமான் அருளிய திவ்யாகமமோ தமிழ்நூலோ என்று அறிதல் வேண்டும்' என்றனர். அப்போது தில்லை மூவாயி ரவருள் ஒருவர் முன் சென்று அத் திருமுறையை மலர்கொண்டு அருச்சித்து வணங்கிப் பின் அதனை யவிழ்த்து அகவல் நான்கையும் படித்து, திருச்சதக முதலிய அறுநூறு பாடல்களையும் படித்து, அகப் பொருட் கோவை நானூறு பாடலையும் படித்து, முடிந்த இடத்தில், 'வாதவூரன் சொல்ல எழுதிய இந்தப் புத்தகம் அழகிய திருச்சிற்றம்பலமுடையார் கையெழுத்து' என்றிருப்பதையும் படித்து முடித்தார். இதனைக் கேட்டவர்களெல்லாம் மெய்புளகித்துக் குறு வேர்வைகொண்டு ஆனந்தக்கண்ணீர் சொரிந்து மனங் கசிந்துருகி, 'திருவாதவூரர் அருளிய இந் நூலையன்றி மோக்ஷமார்க்கத்துக்கு வேறு நூல்கள் உளவோ!' என்று வியந்து, இதன் பொருளை அத் திருவாதவூர ரைக்கொண்டே கேட்டறிவோ மென்று எல்லாரும் அவரிருந்தவிடஞ் சென்று வணங்கி, அம்பலத்தின் வாசற்படியில் திருமுறையிருந்தவிதம் சொன்னார்கள். அது கேட்ட திருவாதவூரர், 'அற்பமாகிய என் பாடலை எல்லாரும் ஏற்றுக்கொள்ளும்படி யான் பூர்

வத்தில் செய்த தவம் என்னே!' என்று அழுதார். வந்தவர்கள் அவரை வணங்கி, 'கடவுள் நும் பாடலைப் பெற இங்கு வந்து என்னசெய்தார்?' என்று ஆவ லோடு வினவ, திருவாதவூரரும் நிகழ்ந்ததை யெல் லாம் உரைத்தார். அவர்கள் அவரை மீட்டும் வணங்கி, 'இத் தமிழ்நூலுக்கு நீரே பொருள் சொல்லவேண்டும்' என்று பிரார்த்தித்தனர். திருவாதவூரர் 'கனகசபைக் கெதிரிற்போய்ப் பொருள்சொல்வேன்' என்று கனக சபையை நோக்கிச் செல்ல, எல்லாரும் பின்னே சென்றனர். முன்னே சென்ற திருவாதவூரர் கனக சபையையடைந்ததும், 'இத் தமிழ்நூலுக்கு பொருள் இவரே' என்று சபாநாதரைச் சுட்டிக்காட்டி, எல்லா ரும் காண அப்பொழுதே மறைந்தார். கடவுளும் அவருடைய அன்பின் பெருமையைக் காட்ட அவ ரைத் தம்மிடத்தில் ஐக்கியஞ் செய்துகொண்டார். இந்த அற்புதத்தைக் கண்ட தில்லை மூவாயிரவரும் மற்றோரும் மெய்புளகித்து நடுங்கிக் கண்ணீர்பெருக்கி மனமகிழ்ந்தார்கள்.

இவ்வாறு ஏழு சருக்கங்களில் திருவாதவூரர் சரித்திரத்தை யுரைக்கும் திருவாதவூரர் புராணம் என் னும் நூல், 545 விருத்தங்களா லியன்றது. சைவர் களாற் பாராட்டப்படும் நூல்களிலொன்று.

# திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்

வேம்பத்தூரார் புராணமென்றும் வழங்கும் இந் நூல் திருவாதவூரர் சரித்திரத்தைமட்டுமே கூற எழுந்ததன்று, மதுரையம்பதியில் சோமசுந்தரக் கடவுள் செய்தருளிய 64 திருவிளையாடல்களையும் கூற வந்தது. திருவாதவூரர்க்காகச் செய்த திருவிளையாடல்களைக் கூறுங்கால் அவர் சரித்திரத்தையும் சிறிது விரித்துரைத்தது. அத் திருவிளையாடல்கள் நான்காம்: ஞானோபதேசஞ் செய்த திருவிளையாடல், நரி குதிரையான திருவிளையாடல், குதிரை நரியான திருவிளையாடல், மண் சுமந்த திருவிளையாடல் என.

ஞானோபதேசஞ் செய்தது

பாண்டி வளநாட்டிலே, வாயுபகவானாற் பூசிக்கப்பெற்ற தன்மையால் ஸ்ரீ வாதபுர மெனப்பட்ட திவ்யக்ஷேத்திரத்திலே, மானமங்கலத்தார் மரபிலே, ஆமாத்தியர்குலத்து, சிவகணத்தலைவ ரொருவர் வாதவூரரென வந்துதித்தார். விட்ட குறையினாலே அவர் பதினாறாண்டு நிரம்புமுன்பே வேதவேதாங்கம் முதலிய சகல கலைகளும் கற்று மேதாவியாயிருத்தலைக் கேள்வியுற்ற பாண்டியன் அவரை வரவழைத்து அவர்க்குத் தென்னவன் பிரமராயரெனப் பட்டமளித்து, பல வரிசைகளுங் கொடுத்துத் தன்னிடத்து உத்தியோகத்தி லிருத்திக்கொண்டான். அவர் தம் கல்வி மிகுதியாலும் புத்திக்கூர்மையாலும் மந்திரிமார்களுள் தலைவ

ராய், போர்செய்தலும் திறைகொள்ளுதலும் முதலிய அரசர்க்கினிய காரியங்களைச் செய்துகொண்டு, ராஜ பாரத்தைத் தாமே வகித்துவந்தார். பத்தி மிகவுடையராய்ச் சொக்கநாதர்க்கு உவப்பன செய்தலோடு சிவனடியார்க்கும் தம்சுற்றத்திற்கும் வேண்டுவன செய்து மகிழ்ந்தார். அரசர் இவரே என்ன மிக்க சிறப்புடன் வாழ்ந்த அக்காலத்தும் தருமநெறியிற் பிறழாத வாதவூரரை அமைச்சராகப் பெற்ற மன்னவனுக்குச் செல்வம் மேலும் மேலும் பெருகிற்று. அது கண்டு அவனும் அளவிலா மகிழ்ச்சி யடைந்திருந்தான். ஒரு நாள் குதிரைப்பந்திக் காவலாளர் அரசன் முன்வந்து பணிந்து, 'பலபல வியாதிகளால் குதிரைகளிற் பெரும்பான்மைய மாண்டுபோயின; எஞ்சிய குதிரைகளும் நோயுற்று, பிழைக்குமோ பிழையாவோ என்று சொல்லும்படி யிருக்கின்றன. ஆதலால் புதுக் குதிரைகள் விரைவில் வாங்கவேண்டும். பூமண்டலத்தை யாள்கின்ற அரசர் பந்தியில் ஒரிலக்ஷங் குதிரைகளாவது இருக்கவேண்டாவோ?' என்று சொல்லினர். இதனைக் கேட்ட பாண்டியன் வாதவூரரை யழைப்பித்து, 'குதிரைப்பந்திக் காவலாளர் வந்து நங் குதிரைகளெல்லாம் மாண்டுபோயின என்று சொல்லிப்போயினர். நீர் வேண்டுந் திரவியம் எடுத்துக்கொண்டு குதிரைகள் வந்திறங்கும் பட்டினத்துக்குச் சென்று நல்ல பரிகள் பார்த்து வாங்கிவரல்வேண்டும்' என்றனன். வாதவூரரும் 'அங்ஙனமே யாகுக' என்று விடை பெற்றுக்கொண்டு, பொன்னறைக்குச் சென்று திரவியம் வேண்டுவன கொண்டு கணக்கிற் பதிவுசெய்து பெட்டகமுட்டக் கட்டிவைத்தார். நம்பிக்கைக்குப் பாத்திரர் சிலரைத் தெரிந்து அவர்களிடத்

துப் பெட்டகத்தை யொப்பித்துத் தாம் சொக்கரைப் பணிதற்குச் சென்றார். பொற்றாமரையில் ஆசமனஞ் செய்து விநாயகரை வழிபட்டு, மீனாக்ஷியம்மை கோயிலுட் புக்கு வணங்கி, பின் சொக்கநாதர் ஆலயத்துட் புகுந்து சுவாமி முன் நின்று, 'அரசனுடைய திரவியத்தைக் கொண்டுபோய்ச் செய்யும் காரியம் தீங்கு நேராமல் ஒழுங்காகப் பலித்தல்வேண்டும். உன்னையல்லால் உதவியில்லை' என்று விண்ணப்பஞ்செய்து நிற்கும் சமயத்தில் திருவருட்செயலால் வேதிய ரொருவர் விபூதி கொண்டுவந்து தர, அதனை வாங்கித் தரித்துக் கொண்டு, காரியம் பலிக்குமென்று மனமகிழ்ந்து வெளியே வந்து, சேனைகள் சூழ மதுரையைவிட்டுப் புறப்பட்டார். புறப்பட்டு விரைந்து செல்பவர் காளையார் கோயிலில் சிவபெருமானை வணங்கிப் பின் பல காதங்கள் கடந்து, பூர்வபுண்ணியவசத்தால் திருப்பெருந்துறையை யடைந்தார். அந் நகரைச் சாருமுன்னமே திரிகரணங்களும் தந்நிலையில் மாறுபட்டு, பேரன்பு மிகுதலால் கண்கள் நீரிறைப்பவும், மயிர் சிலிர்ப்பவும், கைகள் சிரத்தின்மேல் குவியவும் தீயைச் சேரும் மெழுகையொத்து உருகினார் வாதவூரர். முற்றவத்தினாலே செல்வத்தின் மேல் ஆசையொழிந்து பரந்துசெல்லும் மனம் ஒடுங்குதலைக்கண்டு அவர் பலமுறை அதிசயமடைந்து, 'இவ்வூரடையுமுன்பே பேரன்புண்டாயிற்று. சிவ ஸ்தலங்களுள் இதனைப் போன்ற தலம் ஒன்று இல்லை. இங்கு வருதற்கு என்ன புண்ணியஞ் செய்தோம்! கொண்டுவந்துள்ள திரவியத்தோடு இங்கேயே அமர்வோம்' என்று தம்முள் தீர்மானித்து, சேனைத்தலைவரையும் மற்றுமுள்ளாரையும் வரவழைத்து, 'ஆடிமாதத்தில் குதிரை

வருதல் இல்லை. ஆவணிமாதத்தில்தான் குதிரைகள கரையில் வந்திறங்கும். இதற்குச் சந்தேகமில்லை. நாம் கொண்டுவந்துள்ள திரவியத்திற்கெல்லாம் தக்க வாறு நல்ல குதிரைகள் நானே கொண்டுவருவேன். பாண்டியனுக்கு இச்செய்தியை உடனேபோய்த்தெரி வியுங்கள்' என்று சொல்லி அவர்களைப் போகவிடுத் தார். அவர்களும் மகிழ்ச்சியோடு சென்று அரச னுக்கு அவ்வண்ணமே உரைத்தார்கள். இங்கு வாத வூரரும் பொய்கையில் நீராடித் திருநீறணிந்து சிவ பெருமானைப் பணிதற்குத் தனியாக ஆலயத்துட் புகுந் தார். அவ்வாலயத்துள்ளிடத்தில் ஒரு குருந்தமரத் தின் நிழலிலே, நக்ஷத்திர கணங்களாற் சூழப்பெற்ற சந்திரனென்ன, மாணவர்கள் சூழ இப் பக்தர் வரவு நோக்கிச் சிவபெருமான் பெரிய ஆசானாய் வீற்றிருந் தார். கருணாமூர்த்தியாகிய தேசிகேசனைக் காணு முன்பே வாதவூரர் செயலழிந்து உடல்நடுங்கி, அஷ் டாங்க பஞ்சாங்க நமஸ்காரங்கள் செய்து பலமுறை வணங்கி நின்றார். நின்றவரைத் தேசிகர் சிரமுதல் பாதம்வரை மந்திரத்தால் நோக்கி, கண்பார்வையா லேயே உபதேசஞ்செய்து அருகில் வரவழைத்து, அவர்க்கு முறைப்படி தீக்ஷயாதி செய்து முத்தி பஞ்சாக்ஷரத்தைச் செவியி லோதினார். உடனே பரம ஞானம்வந்து அவரை யடைந்தது, வாக்கில் கலைமகள் வந்து தங்கினாள், ஆணவாதிமலங்கள் அகன்றுபோ யின. இறைவர் அவரை நோக்கி, 'நீ சிவபுண்ணியஞ் செய்துள்ளமையால் காணப்பேறு கண்டனை. நம் மைப் பாடுவாய்' என ஆணைதர, அவரும் அன்பினால் திருவாசக மோதுவாராயினார். அவர் அப்பொழுது உரைத்தவை அற்புதப்பத்து, சென்னிப்பத்து, அச்

சோப்பத்து. வாதவூரர்க்கு, முன் இருந்த அமைச்சர் கோலமெல்லாம் போய் முனிவர் கோலம் நன்றாக ஏற்பட்டது. பின் வேதபாராயணஞ் செய்யும் பிரமசாரிப் புதல்வர்களைச் சிவபெருமான் காட்டக் கண்டு, 'என்ன புண்ணியஞ்செய்தோ ஈசனிடத் தன்புபூண்டு அவனருகிருக்கப் பெற்றீர்கள், யானும் இதோ வந்தேன்' என்று அதிசயப்பத்துப் பாடினார். அப்பொழுது சிவபெருமான், 'மாணிக்கவாசக! இங்கு நில்' என்று சொல்லிவிட்டு அப் புதல்வரோடு மறைந்தார். வாதவூரர் அடைந்த துயர்க்கோ அளவில்லை. தங் குருவை நினைந்து கண்ணீர் ஆறாய்ப் பெருக, கோயிற்பத்து, புணர்ச்சிப்பத்து, செத்திலாப்பத்து, பிரார்த்தனைப்பத்து, ஆசைப்பத்து, உயிருண்ணிப்பத்து, திருப்புலம்பல், வாழாப்பத்து, எண்ணப்பத்து என்னும் வாசகங்களை உரைத்தார். நகருட் புகுந்தவர் அங்குத் திகழ்வன கண்டு, திருவம்மானை, திருப்பொற்சுண்ணம், திருக்கோத்தும்பி, திருத்தெள்ளேணம், திருப்பூவல்லி, திருவுந்தியார், திருத்தோணோக்கம், திருவெம்பாவை, திருச்சதகம் என்பவை யோதினார். உடல்வருந்தி ஊணுறக்கமின்றித் திருவாசகமோதிடக் கேட்ட தொண்டர் அதிசயித்து, 'இவை முன்கேட்டனவல்ல; புதுமை' என அவரைச் சூழ்ந்து போற்ற, வாதவூரர் குதிரைகொள்ளற்காகத் தாம் கொண்டுவந்த பொருளனைத்தையும் பின்வருங் காரியம் நோக்காராய் வாரிவாரிக் கொடுத்தார். சிறிதுநாளில் பாண்டியன் பொருளெல்லாம் செலவாயிற்று. இதனை யறிந்த அமைச்சர் திரண்டு அரசனிடத்துச் சென்று சொல்ல, அரசன் சினமிக்கானாய் ஓர் ஓலை எழுதி விடுத்தான்: 'தென்னவன் ஓலை தென்னவன் பிரமராயர் காண்க,

பொன்னறையிலிருந்து திரவியம் பல வாரிக்கொண்டு குதிரை கொள்ளும்படி போனவர் என்ன நினைத்து இன்னம் வராமலிருப்பது? மந்திரிக்கு இது அழகோ! உடனே குதிரைகளோடு வந்து சேர வேண்டியது'. இவ்வோலையை அங்குச் சென்ற தூதர் காட்ட அதனை முழுதும் படித்தறியுமுன்னமே அரசன் மனத்தை யறிந்தாராய் வாதவூரர் மிகக் கலங்கிப் புலம்பலுற்றார். 'யான் பாண்டியனுடைய அமைச்சனே. என்ன காரியம் செய்தேன்! இது என்னவாய் முடியுமோ? குதிரை கொள்வதற்காகவே வந்தேன். கொண்டுவந்த பொன்னை யெல்லாம் அழித்தேனே. ஐயோ! சொல்வதற்கென்ன இருக்கிறது. அரசனுக்குத் துரோகஞ் செய்யலாமா!' என்று புலம்பித் தம்மை யாண்டருளிய தம்பிரானுக்குச் சென்றுரைக்கலாம் என்று அச்சத்தோடு ஆலயத்துட் புகுந்து அழுதுகொண்டே தம் குறையைச் சொல்லி, விடியுமுன்னே திருப்பள்ளி யெழுச்சி பாடினார். அப்பொழுது, 'நினக்கு யாம் உண்டு, அஞ்சேல். பாண்டியனுக்குக் குதிரைவருமென்று ஓலை எழுதிவிடுப்பாய்' என்று விசும்பில் ஒரு வாக்கு எழ, அதனைக் கேட்டு மகிழ்ந்த வாதவூரர் அவ் வண்ணமே ஓலை எழுதிவிடுத்தார்: 'பாண்டியனுக்கு வாதவூரன் விண்ணப்பம். ஐந்தாறு நாளில் குதிரைகள் வந்துசேரும். பந்திகளும் நீர்த்தடங்களும் அமைத்து நகர் வீதிகளையும் வையாளியையும் அலங்கரிக்குமாறு ஏற்பாடு செய்யல்வேண்டும்.' இவ்வோலையைத் தூதரிடத்துக்கொடுத்துவிட்டு வாதவூரர் ஆலயத்துட்சென்று சிறிது துயில்கொண்டபொழுது, அன்பர் சுமையைத் தமதாகக் கொள்ளும் சிவபெருமான் அருகில் வந்து, 'இக் காரியத்தை யாம் முடித்தல் நிச்சயம். இன்னும்.

பாண்டியன் ஆள் அனுப்புமுன்பே நீ சென்று அவனுக்கு இதமானவற்றை உரைப்பாய்' என்று சொல்லி மறைந்தார். கனவு நிலை நீங்கியவுடனே, போரவேனென்று சிவபெருமானை வணங்கி வாழ்த்தி மதுரை போய்ச் சேர்ந்தார். இவர் போவதற்குமுன்னே இவர் அனுப்பிய ஓலை போயிருந்தமையால் அரசன் கோபமொழிந்திருந்தான். இவரைக் கண்டதும் அவன் அன்போடு வரவேற்று இவரை அருகழைத்து மற்றவர்களையெல்லாம் போகச்சொல்லித் தனியே இவரிடத்துப் பேசுவானாய், 'எவ்வளவு குதிரைகள் வாங்கினீர்? எந்தத் துறையில் இறங்கியிருந்தீர்? என்னென்ன நிறக் குதிரைகள் கொண்டீர்?' என்பனவாதி கேள்விகளைக் கேட்டான். வாதவூரரும் கடவுளை மனத்தில் நினைந்து அவற்றிற்குத் தக்க விடைசொன்னார். அரசன் மகிழ்ந்து அவர்க்குப் பல வரிசைகள் கொடுத்தனுப்பினான். வாதவூரர் விரைவில் விடைகொண்டு சென்று சொக்கநாதராயெந்தப் புக்கு, சுவாமியிடத்துக் காரியத்தைத் தனித்துரைப்பாராய், 'குதிரைகள் வருமென்று பாண்டியன் மகிழச் சொல்லிவிட்டேன். பொருளையெல்லாம் அடியார்க்கு வாரிக்கொடுத்தேனே. என்ன செய்வேன்? உன்னையல்லாமல் எனக்குக் கதி வேறியார்?' என்று சொல்லி வருந்தினார். இவர் இது சொல்லவும், வானத்து 'அஞ்சல் அஞ்சல்' என்று ஒரு பெருவாக்கு எழுந்தது. அவரும் மனந்தேறி வீட்டுக்குச் சென்று அமுதுசெய்து காரியம எப்படி முடியுமோ என்ற கவலையுடனே கண்ணுறங்கிய பொழுது, உறவினர்வந்து அவரை யெழுப்பி அவர் செய்தது தவறென்று புத்திகூறத் தொடங்கி, 'இதனால் என்னவருமோ, எங்களுக்கு இனி யார் கதி?' என்று

சொல்லினர். வாதவூரரோ, 'நிறுத்துங்கள். நீங்கள் யார் நான் யார்? எனக்கு உலகத்தில் வெறுப்புமில்லை விருப்புமில்லை. ஈசன் மனிதவுருவெடுத்துவந்து என்னை யாண்ட அப்பொழுதே பிறப்பொழிந்தது. அரச னுக்குத் தவறு செய்யக்கூடாதுதான். அதனாலேயே நான் இங்கு இப்பொழுது வந்தேன். அவனிடத்துப் பொருள்பெற்று நேர்ந்த கடனையெல்லாம் ஒருபாயத் தால் இன்றே தீர்த்துவிடப்போகிறேன். உங்கள் காரி யத்தைப் பார்த்துக்கொண்டு நீங்கள் போங்கள்' என்று சொல்லி அவர்களை அனுப்பினர். அவர்களும் மனம்வருந்தி அங்கிருந்து போயினர். மறுநாள் பாண்டியன் ஆட்கள் வந்து, குதிரைகள் வந்தனவோ என்று விசாரித்தனர். அவரும் 'குதிரைகள் மெய் யாகவே இப்போது வரும். அவசரப்படவேண்டாம். நகரை அலங்கரிக்கச்சொல்லுங்கள்' என்று சொல்லி யனுப்பினர். இதனைக் கேட்ட அரசனும் அவ்வண் ணமே நகரை யலங்கரிப்பித்தான். குறித்த காலம் சென்றும் குதிரை வாராமையால் அரசன் கோபித்து முறைசெய்வோரை யனுப்பிக் கேட்க வாதவூரர் முன் போலவே சொல்லிவிட்டார்.

நரி குதிரை யானது

அப்பொழுது அமைச்சர் திரண்டு அரசன் முன் நின்று, 'பித்தன் வார்த்தை யைக் கேட்டு நகரத்தை அலங்கரிப் பித்து நீரும் பெரும் பித்தராயினீர். வாதவூரன் பெருந்துறை போய்ச் சேர்ந்தவுடனே பித்துக் கொண்டு பணத்தையெல்லாம் வாரியிறைத்து செயல் மாறுபட்ட மாயினன். இரக்கமின்றி அவனை வருத்திப் பொன்னை வாங்குதலே நெறி' என்று

இடித்துரைத்தனர். இதனைக் கேட்ட மன்னன் நெட்டுயிர்ப் பெறிந்து கண்களில் நெருப்பெழ விழித்து, 'அந்தப் பாவியைப்போய் வளையுங்கள்' என்று பிரம்படிக்காரரை ஏவினான். வாதவூரரிடத்துச் சென்ற அவர்கள் அவருடைய பக்தி மிகுதியைக் கண்டு, அவரை வளைத்துக்கொண்டாரேயல்லாமல் அவர்க்கு ஒரு சிறு தீங்குஞ் செய்திலர். பின்னும் அரசன் சிலரை ஏவி, அவரைச் சிறைசெய்யச் சொன்னான். அவர்களும் வந்து வைதுகொண்டே அவரைக் கொடுஞ் சிறையி லிருத்தினர். துயர் பொறுக்கமாட்டாத வாதவூரர் சிவபெருமானை நோக்கித் தங்குறை யனைத்தும் கூறிப் புலம்பினர். 'நீ சொல்லிய உரை தப்பாதென்று வந்து யான் பாண்டியனுக்கு அதனைச் சொன்னேன். யான் இவ்வாறு துயரமடைந்தும் நீ இரங்காதது என்னே?' என்று அழுது, குழைத்த பத்தும் அருட்பத்தும் பாடினர். சிவபெருமான் இரங்கி, மிழலை நாட்டுக் காட்டிலேயுள்ள நரிகளை ஒன்றாகத் திரட்டி அவற்றுக்குப் போதனைகள் செய்து குதிரைகளாக்கி, தம்மைப் பிரியாதிருக்கும் கணநாதர்களையும உடன்கொண்டு மதுரை நோக்கினர். இதனைக் கண்ட சில தூதர் முன் ஓடி, புலம்பியழும் வாதவூரரிடத்துச் செய்தி சொல்லி, 'அரசனுக்கு இதைப்போய் உரைப்பீர்' என்றனர். அவர் போய்ச் சொல்லி அரசன் சீற்றந் தணிவித்தார். அவனும் மகிழ்ந்து சித்திர மண்டபத்திற்குச் சென்று சிங்காதனத்தின் மீது வீற்றிருந்து குதிரை வரவு நோக்கினான். அப்பொழுது சிவபெருமான் சங்கற்பத்தாலே குதிரை வரவு சற்றுத் தாழ்க்க, நான்கு பக்கமும் ஓடிப் பார்த்த தூதர்கள் வந்து குதிரை

கள் எங்குமில்லை யென்று சொன்னார்கள். அரசனுக்குக் கோப மிக்கது. 'என் பொருளை யெல்லாம் அழித்தது போதாதென்று குதிரைகள் வரும் வரும் என்று பொய் சொல்லி ஏமாற்றும் இவனைக் கொண்டுபோய், ஊரிலே யுள்ள புளிய மரங்களில் அகப்படும் மாறுகளை யெல்லாம் வெட்டி, அஞ்சாது இவன் முதுகிடைப் போக்குங்கள்' என்று ஏவலாளரை நோக்கிக் கடுகடுத் துரைத்தான். அவர்களும் கொண்டுபோய் அடித்தற்கு நெருங்குதலைக் கண்டு, வாதவூரர் அடைக்கலப்பத்து முதலிய திருவாசகங்கள் ஓதத் தொடங்கினார். சிறைக்கூடத் தருகாகப் பொழிலிற் சென்ற குயிலொன்றைப் பார்த்துக் குயிற் பத்து மொழிந்தார். அது சொல்லி முடியுமுன்னமே கடவுள் உள்ளத்து அருள் சுரந்தார், குதிரைகள் மதுரையை யணுகின. பாண்டியன் ஆச்சரிய மடைந்து வாதவூரரை அருகழைத்து உபசரித்துக் கண்ணீரைத் துடைத்துப் பொறுக்கவேண்டும் என்றான். பல கதிகளையுங் காட்டி நடந்துவரும் குதிரைகளை நடத்திக் கொண்டு சாத்தவர்கள் வந்த காட்சியைக் கண்டு வியவாதார் யாவர்! சொக்கர் பரிமேல் தோன்றிய கோலத்தைக் கண்டு மகிழ்ந்த மங்கையர் சொல்வது போல் வாதவூரர் அன்னைப்பத்து ஓதினார். பல வாத்தியங்கள் ஒலிப்ப, குடை நிழலைச் செய்ய, சாமரை யிரட்ட, சிவபெருமான் கணங்களோடும் வையாளி வீதியில் வந்தார். அரசன் சாத்தவர்களனைவரும ஆயுதம் பூண் பருவம் உருவமெல்லா மொத்திருத்தலால் பிரமித்து, 'தலைவர் யார்?' என்று வாதவூரரைக் கேட்டான். அவரும் 'இப்போது குதிரையில் முன் தோன்றுவர்' என்றார். சிவபெருமானும் ஒரு வெள்ளைக்.

குதிரை மீது முன்வந்து தோன்றி, 'பாண்டியனே, கொஞ்சநேரம் கண்ணிமையாதிருந்து கண்டிடு' என்று சொல்லிக் குதிரையின் பல நடைகளைத் தாமே தம் குதிரையைக் கொண்டு காட்டினர். அப்படியே கண நாதர்களும் தங் குதிரைகளைப் பல பல விதமாக நடத்திக் காட்டினர். அப்பொழுது 'தலைவர் யார்?' என்னக் கேட்ட பாண்டியனுக்கு, யார்க்கும் கடவுளர் இவர் என்று விரலாற் சிவபெருமானைச் சுட்டிக்காட்டினர் கணநாதர். அவரைக் காணும்போது அரசனுக்குத் தேகம் புளகித்தது, கைகள் தாமாகவே தலைமீது சென்றன. ஆயினும், அரசனுக்கு எழுந்திருத்தல் பாங்கன்று என்று உட்காந்திருந்தான். அங்கு நின்ற மனிதரெல்லாரும் விழுந்து தொழுதனர். அரசன் மந்திரிகளை நோக்கி. 'மந்திரிகளே, குதிரைச்சாத்தவர் நம் சொக்கநாதரைப்போலவே எனக்குத் தோன்றுகின்றார். வந்த குதிரையைப் பாருங்கள், காலந் தாழ்த்ததாயினும கொண்டுவந்த மந்திரத்தலைவரைப் பாருங்கள்' என்று பலமுறை வியந்தான். குதிரைச சாத்தவர் அரசன் முன் நின்று, 'உன் மந்திரி கொடுத்த பொருளனைத்தும் குதிரைகள் தருவதாகச சொல்லி நம்மவர்கள் கைக்கொண்டனர். குதிரைகளின் இயல்பைக் கேள் இவை தீபாந்தரத்திலும இமயமலைக்கு அப்புறத்திலுமிருந்துவந்து பெருந்துறையிலேயிறங்கி இங்குக் கொண்டு வரப்பட்டுள்ளன. உயர்ந்தசாதிக குதிரைகள், நல்ல சுபாவங்கள் உடையன, நல்ல சுழிகளை உடையன, நல்ல நிறங்களை உடையன, அங்கப்பழுதில்லாதவை. இக் குதிரைகளை அறிஞர் முன்னே அறப் பேசிக் கைக்கொள். அவை உனது குதிரைகளாகும்படி கயிறு மாறிவிட்ட பிற்பாடு

நன்மை தீமை எம்மைச் சாரா, உன்னையே சாரும்" என்று சொல்லவும், அரசன் அது சரியென்று ஒப்பினான். அப்பொழுதே சிவபெருமான் அழகிய குதிரைகளை அவன் கையிற் கொடுத்தார். அரசனும் நம்மிடத்துள்ள பொன்னையெல்லாம் கொடுத்தாலும் அவை இக் குதிரைகளுள் ஒன்றுக்கு விலையாகாவென்று மனத்தில் வியந்துகொண்டே அக் குதிரைகளை ஏற்றான். குதிரைப்பாகர் வந்து அக் குதிரைகளை அவ்வவற்றிற்குரிய இடத்துக்குக் கொண்டுபோயினர். மிக்க மகிழ்ச்சிகொண்ட அரசன் இராவுத்தராகிய சிவபிரானுக்கு நல்ல ஆடையை வரிசையாகக் கொடுக்க, அவர் அதனைக் கையிலிருந்த செண்டி லேற்று முன் கொம்பிற்சேர்த்து அடியார் களிக்க வேண்டிச் சடைமீதணிந்துகொண்டார். அவர் ஆடையைச் செண்டி லேற்றதைக் கண்டு சினந்த அரசனுக்கு வாதவூரர் அஃதவர் தேசாசாரம் என்று சொல்லினர். அவனும் சரியென்றொப்பி, மற்றைச்சாத்தவர்களுக்கு ஆடைகள் வழங்க அவர்கள் அவற்றை வாங்கிச் சூடிக்கொண்டார்கள். அப்பொழுது வாதவூரர் பிடித்தபத்துப் பாடினார். அன்று குதிரையீடு கண்டவரெல்லாம் ஆனந்தக் கடலுள் மூழ்கினர். அரசனும் வாதவூரர்க்குப் பொற்பட்ட முதலிய வரிசைகள் ஈந்து விடைகொடுத்தனுப்பிவிட்டுத் தன் பரிவாரங்களோடு அரண்மனை போய்ப் புகுந்தான். சிவபெருமானும் கணங்களோடு மறைந்தார்.

**குதிரை நரி யானது**

மதுரையிலே வந்த மாயக் குதிரைகள் ஒன்றன் முகத்தை யொன்று பார்த்து, 'இஃதென்ன! நேற்று நன்றாக அடிபட்டது போதாதென்று கழுத்தும்

காலும் கயிற்றால் கட்டுண்டோமே. இனி நிற்போமாயின் இரத்தம் ஒழுகப் புண்படவேண்டியதுதான். நமக்கு இங்கு உணவு இல்லை. கொள்ளும் புல்லும் இடுவர். மனிதரும் நம்மேல் தொத்துவர். கஷ்டம்! கஷ்டம! விடியுமுன்னே நம் உருவத்தைக்கொண்டு நழுவி விடவேண்டும்' என்று சொல்லிக்கொண்டு, கழுத்திலிருந்த கயிற்றை இராத்திரியே கடித்தெறிந்து நரிகளாகி, கடைத்தெரு முதலான பல இடங்களிலும நுழைந்து, பசிமிகுதியால் ஒன்றோடொன்று போர் செய்து, ஊராரையெல்லாம் எழுந்திருக்கச் செய்து, அங்குமிங்கும் ஓடிக்கொண்டு ஊளையிடத் தொடங்கின. குதிரைகாவலர் மனங்கலங்கி அரசனிடத்துச் சென்று, 'மாயக் குதிரைகள் நாங்கள் பிரியமாக வைத்த உணவொன்றையும் உட்கொள்ளாது, குதிரை, மான், ஆடு, கோழி, பன்றி முதலியவற்றின் குடல்களைப் பிடுங்கின' என்று உரைப்ப, அரசன் மனம் புழுங்கி, 'இஃதென்ன மின்னும விடித்ததே! நான் யாருக்கு என்ன பாவஞ் செய்தேன்' என்று வாடி, வந்த அமைச்சரிடத்துச் சங்கதியைச் சொல்லினன். எல்லாரும் நெட்டுயிர்த்துச் சொல்லுதற்கு ஒன்றுந் தோன்றாமல் தலைகவிழ்ந்து நின்றனர். அப்பொழுது வாதவூரர் ஏதொன்றும் அறியாராய் நகைத்துக் கொண்டே அரசன்முன்னே வந்தவர், தீயிற்றோய்ந்த தாமரைபோல் முகம் மிகவாடியிருந்த அரசனைப் பணிந்து, 'என்ன நேர்ந்தது?' என்றார். அரசனும், 'உன்னைப்போல மதியுள்ள மந்திரி எனக்கு எங்கே அகப்படுவான்? நல்ல குதிரைகளைத் தேடிக் கொண்டு வந்தாயே!' என்ன, வாதவூரர், 'நான் எவ்வளவோ சிரமப்பட்டுத் தேடிக் கொண்டு வந்த குதிரைகளுக்கு

என்ன தோஷம்? நேற்றே அறிந்தோரால் பரீக்ஷித்து மகிழ்ச்சியோடு நீர் அவற்றைக் கைக்கொண்டது உலகமெல்லாம் அறியுமே' என்றார். அரசனுக்குக் கோபம் பொங்க, அவன் வாதவூரரை நோக்கி, 'அஞ்சாமல் நீ இவ்வாறு சொல்லுவதென்? நேற்று நீ கொண்டு வந்த குதிரைகளெல்லாம் நரிகளாகி ஊளையிட்டு ஊரை அல்லோலகல்லோலப் படுத்திக்கொண்டு திரிகின்ற சங்கதி அறியாயா! பித்தனே! குரு, அரசன், அந்தணர், தோழர், தவத்தோர் என்றிவரை வஞ்சிப்பார்க்குத் தண்டனை கொலையையன்றி வேறில்லை. நரிகளையெல்லாம் குதிரைகளாகப் பண்ணிக் குதிரைப் பந்தியிற் கட்டப்பண்ணினாய். உன் ஜாலவித்தைகளைக் காட்டுவது என்னிடத்திலா? நீயோ ஜாதியில் பிராமணனாயிருக்கின்றாய். உன்னை என்ன சொல்லுவது! குதிரைச்சாத்தவர் எங்கேயுள்ளவரோ? உன்னைச் சித்திரவதைசெய்யினுந் தகுமே. நீ வேதமோதியது இக் காரியஞ் செய்யத்தானோ!' என்று கோரமொழிகள் கூறி, முறைசெய்வோரை அழைத்து, 'இவனைக் கொடுஞ் சிறையில் வைத்து நம் பொருளனைத்தையும் தண்டித்து வாங்குங்கள்' என்று ஆஞ்ஞாபித்தான். அவர்களும் வாதவூரர் பக்திக்கு மனமுருகி அவரை வருத்தப் பின்வாங்கினராயினும், அரசன் சொற்படி செய்யாவிடில் நமக்குத் தீங்குவருமே என்று அவரைச் சிறையில் வைத்தனர்.

மண் சுமந்தது

அரசன் அமைச்சரைப் போகச் சொல்லிவிட்டு, துன்பமொழியா மனத்தோடும் தன் அறையிற் புகுந்தான். சிறையில் வைக்கப்பட்ட வாதவூரரோ திருவேசறவு பாடினார். பாடி முடிதற்குள் கருணைக்கடலாகிய சிவபெருமான்

வருணனை நினைத்தார். வருணன் முன்வந்து பணிய, 'நம் பக்தன் கொடுஞ்சிறையில் வருந்துவதை அறிவாய். இராத்திரிப்பொழுது வைகையில் கரைகடந்த வெள்ளம்பெருகிவரச் செய்' என்று ஆஞ்ஞாபித்தார். அப்படியே மேகங்கள் காலூன்றி மழைபொழிய வைகையில் பெருவெள்ளம் வந்தது. நீர் கரையுள் அடங்காமல் மதுரைநகருள் புகுதலைக் கண்டு பறையறையும் ஒலியைக்கேட்டுத் திடுக்கிட்டெழுந்த பாண்டியன், 'இஃதென்ன காலமல்லாக் காலத்தில் வைகை கடலெனப் பெருகலுற்றதே! இன்றே ஊழிக்காலம் வந்தடுத்ததோ!' என்று மனமழிந்து, அதிகாரியை யழைத்து, 'வாதவூர் முனிவரைச் சிறைசெய்ததனால் வந்த தீங்கோ இது! ஈசுவர சங்கற்பத்தை யார் அறிய வல்லார்! ஒவ்வொரு மனைக்கும் கோலறையிட்டுக் கரையை விரைவில் அடைக்கச் செய்வாய்' என்று சொல்லி அவனைப் போகவிடுத்தான். பொழுதும் புலர்ந்தது. அவ்வதிகாரி கணக்கரை உடன்கொண்டு ஊரில் கிழவர் சிறுவர் முதலியோர் நடுங்கத் தண்டஞ்செய்து ஒருவரையும் விடாது திரட்டிக் கரையிடத்துக் கொண்டுபோய் அவரவர்க்குரிய பாகத்தை யளந்துகொடுப்ப, அவர்களும் தத்தம் கோலறையை மகிழ்ந்து பண்ணிட்டடைக்கத் தொடங்கினர். மதுரையில் தென்கீழ் மூலையில் ஒரு வீட்டிலிருந்த பிட்டுவாணிச்சி தனக்கு இட்ட கோலறைக்கு ஆளில்லாமல் அழுது விழுந்து தண்டத்துக்கு அஞ்சி அலையுங்கால் அதனைக் கண்ட சிவபெருமான் பதினாறாண்டு முற்றாத கூலியாள்போல் வடிவங்கொண்டு அவள் முன் நின்று, 'ஏனம்மா அழுது விழுந்து அலைகின்றாய்! என்னைப் போல உனக்குக் கூலியாள் அகப்படாது. வேண்டு

மானல் சொல். யாராரெல்லாமோ விரும்பி யழைத்தார்கள். போகாது இங்கு வந்தேன்' என்றார். அவளும், 'நல்ல சமயத்தில் வந்தீர் ஐயா, உம்மைப் பார்த்தால் சொக்கரைபபோலவே யிருக்கிறது. விரைவில் மண்சுமவாவிட்டால் தண்டஞ்செயவோர் மெய்ந் நோவ அடிப்பார்களே' என்றிரங்கினள். சிவபெருமான் 'அதைப்பற்றி உனக்குக் கவலை வேண்டா. விறகு சுமப்பேன், தண்ணீர் சுமப்பேன், மண் சுமக்கமாட்டேனா! கூலியென்ன? சொல்' என்றார். அவள், 'ஐயா, என்னிடத்தில் பணமில்லை. மனோரம்மியமான பிட்டுண்டு, தருவேன்' என்றாள். அவர், 'சொக்கரிடத்துப்பக்திகொண்டவள் நீ. எனக்குப் பிட்டென்று வேண்டியதில்லை, பிட்டுதிருங்கூடத் தின்பேன்' என்றார். அவள் 'அங்குள்ள மனிதர் பொல்லாதவர்கள். சீக்கிரமாகக் கரையை யடைந்து இதைத் தின்றுவிட்டு மண்வெட்டிச் சுமந்து என் கோலறையை யடையும்' என்று அன்போடு பிட்டுச் சுட்டுக் கொடுத்தனுப்பினாள். அவரும் அதை வாங்கி மடிநிறையக் கட்டிக்கொண்டு, கரையை யடைந்து, நல்லது பெற்றால் நாலு பேரோ டுண்ணவேண்டுமென்னும் பழமொழிப்படி தாம் கொண்டுபோன பிட்டைப் பிட்டுப் பிட்டு அங்குள்ள கூலியாட்களுக்குங் கொடுத்தார். பிட்டெல்லாந் தீர்ந்ததும் அவர் கிழவியிடத்துப் போய், 'நான் வேலைசெய்து களைத்தேன். பசி வருத்துகின்றது. உனக்கு அளந்த கோலறையில் கொஞ்சந்தான் மிச்ச மிருக்கின்றது, சொக்கனா ராஜா' என்றார். பிட்டுக்கு அலந்து சுமவாமலே சுமந்தேனென்று சொன்ன அவர் மேல் மண் படிந்திருந்ததைக் கண்டு மகிழ்ந்த அவள், 'இதோ கொடுக்கிறேன் ராஜா' என்று

இன்னும் பிட்டுச் சுட்டுக் கொடுத்தாள். அவர் மீண்டுந் துறையை யடைந்து முன்போலவே கூலியாட்களுக்குக் கொடுத்துத் தானும் தின்று, அவர்களிடையி லிருந்து வேடிக்கை பேசி, அடைப்பது போலச் சில இடங்களில் உடைத்து விட்டார். கணக்கர் அப் பக்கம் வந்து நன்றாக அடைக்கக்கூடிய ஆள் தேடினர். இவர் விரைவாக அவர்கள் முன் சென்று, 'என்னை ஒப்பவர் இல்லை. முன் என்னைத் தெரிந்து கொள்ளுங்கள்' என்றார். அங்கிருந்த பெரிய கூலியாட்கள் 'இவன் சும்மாவாவது மருட்டிக் கொண்டிருக்கின்றான். இவனையா முன் தெரிவது! கூடாது' என்ன, 'இவர்களில் ஒரு கூடைமண் சுமந்தவர் கிடையாது, யானே நின்று எல்லாம் சுமந்தேன்' என்றார் கூலியாளாக வந்த சிவபெருமான். 'இவன் வேலையொன்றுஞ் செய்திலனாயினும் வார்த்தையாலே யாரையும் மழுப்பிவிடுகிறான். நமக்கும் ஏதாவது சொட்டு வைக்கப் போகிறான்' என்று இவரையே அவர்கள் நல்ல ஆள் எனத் தெரிந்தார்கள். கணக்கர் அப்புறம் செல்லலும் இவர் கூடையைத் தலைக்கணையாக வைத்துக் கால் மேற் கால் போட்டுப் படுத்துக் கொண்டு பாட்டுப் பாடுதலுற்றார். கரை பார்க்க வந்த அரசனுட்கள், 'இவன் யார், மண்சுமவாது கிடப்பவன்?' என்ன, கூலியாட்கள் 'இவன் பிட்டுவாணிச்சி ஆள்' என்றனர். 'அப்பா, லக்ஷணமாகப் படுத்துக்கொண்டாயே. உன்னைக் கூலியாளென்று எல்லாரும் சொல்லுகின்றார்களே. உனக்குக் குறித்த கோலறையில் ஒரு கூடை மண் தானும் இட்டாயில்லை. வா, அதிகாரியிடத்தில் உன்னை ஒப்பிப்போம்' என்றனர் அவ்வரசனுட்கள். இவரும் அது நல்ல காரியந்தானென்று அவர்களோடு

செல்ல, 'கொல்லு, அடி, குத்து' என்று தண்டம் விதித்துக்கொண்டிருந்த அதிகாரி கண்டு அதிசயித்து, 'நீ யாரப்பா? சுகுமாரமான சரீரத்தையுடையவனாயிருக்கின்றாயே' என்றனன். 'தந்தை, தாய், சகோதரர், உற்றார், நண்பர் யாரும் எனக்கில்லை. எனக்குச் சொத்துங் கிடையாது. இந்தப் பெரிய பட்டணத்திலே ஒரு மூலையில் இருந்து பிழைத்துவரும் கொற்றாள் நான். எப்பொழுதும் மற்றவர்க்காக உழைப்பதே என் வேலை. என்னைக் கொண்டு அதிகாரிக்கு என்ன காரியம்!' என்றார் கொற்றாளாகிய சிவபெருமான். அதிகாரிக்குச் சீற்றம் மிக, 'மகா குணாளிபோலப் பேசிவிட்டாய். உனக்குப் பகுந்து கொடுத்த கோலத்தையில் ஒரு கூடை மண்கூட இட்டாயில்லை. பதில் மாத்திரம் பயமில்லாமற் பேசுகிறாய். உன்னைப்போல யாரையும் நாங்கள் பார்க்கவில்லை. உன்னை நூறு அடி அடித்தாலும் அடிக்கலாம், அடிக்கப்படாதென்றில்லை. உன்னுடைய சரீரத்தைப் பார்த்தால் அடிக்கக் கை வரவில்லை. போய்ச் சீக்கிரமாக மண்வெட்டுத்துக் கொட்டிக் கரையை அடை' என்று சொல்லி அனுப்பினான். இவரும் போய்ப் பழையபடியே படுத்துக்கொண்டார். அப்பொழுது அரசன் ஏவலால் தண்டஞ்செய்வோர் கரையை நோக்கி வருபவர் பிட்டுவாணிச்சி கோலத்தை தாழ்ந்து அடைபடாமல் நீர் பாய்ந்து செல்வதைக் கண்டு, அங்கு நின்ற சிற்றாள்களை இது யாரதென்று வினவ, அவர்களும் பிட்டுவாணிச்சியதென்று, இவர் செய்ததையெல்லாஞ் சொன்னார்கள். தண்டஞ் செய்வோர் மிகக்கோபித்து, 'நீ கொஞ்சங்கூட அஞ்சாது மண் சுமவாமல் விளையாடி நிற்கின்றதற்கு என்ன காரணம்?' என, இவர் 'காரணம் ஒன்றுமில்லை. கழுத்து

நோவச் சுமப்பேன்' என்றார். 'இப்பொழுது விரைவாக எழுந்து சுமக்கவில்லையானால் நன்றாக அடிப்போம்' என்று அவர்கள் பயமுறுத்த, இவர் பயப்பட்டவர் போல் எழுந்து ஒரு கூடை மண் வெட்டியெடுத்துத் தலைமேல் வைத்து அடிமேல் அடி வைத்து நடந்தார். 'இவன் முழுச் சோம்பேறி, கரையை எப்போது அடைக்கப்போகிறான்!' என்று அவர்கள் இவரைப் பிடித்து நடு முதுகிற் சிவக்க அடித்தார்கள் இவரும அந்தக் கூடை மண்ணைக் கொட்டிவிட்டு 'என்னை ஏன் அடிக்கின்றீர்கள்?' என்று சொல்லிக்கொண்டே கொற்றாட்கள் நடுவில் மறைந்தார். தண்டஞ்செய்வோர் 'இவன் எங்கே ஓடினான்? என்று தேடித் தேடிப் பார்த்தும அகப்படாமையால் பிட்டு வாணிச்சியைப் போய்ப் பார்த்து அவளைத் தண்டிக்க எத்தனித்தாகள். இவர்கள் போன சமயத்தில் அவள் மாறா இளமையடைந்து தேவசரீரத்தோடு சிவலோக யாத்திரைபி விருந்தாள். அடித்த புளி மாறோ அரசன் முதுகிலும், அரசி முதுகிலும், தேவா முதுகிலும், பாலர், பார்ப்பார், பெண்டிர், மூத்தோர், என்றிவரின் முதுகிலும், நிற்பன நடப்பன பறப்பன ஊர்வன என்றிவற்றின் முதுகிலும் பட்டுப் புடைப்பு உண்டாயிற்று. தலத்தார் நகரத்தார் நாட்டார் அனைவரும் பாண்டியனிடத்துச சென்று இது யாதென்று அறிவோ மென்று வந்து, 'ஒருவன்மே லடித்த அடி யாவர்மேலும் பட்ட தென்ன!' என, அவனும் தன் முதுகைக் காட்டி இதன் உண்மை சொக்கரே யறிவார் என்றிருந்தான். அப்பொழுது எல்லாரும் கேட்ப ஆகாசத்தில் ஒரு வாக்கு எழுந்தது. 'பாண்டியனே! நீ பாக்கியவான். வாதவூரன் நமக்கு உகந்த

தொண்டன். உன்னுடைய பொருள் தருமவழியாகச் சம்பாதித்த தாதலால் இவன் முகமாக அதனை நம்மவர்க்கு வாங்கிக் கொடுத்தோம். வேண்டிய குதிரையுங் கொண்டுவந்து கொடுத்தோம். அவனை விடுவித்தற்காகக் கொற்றாளாக மண் சுமந்து பிட்டுந் தின்று அடியும் பட்டோம். அவனைச் சிறைநீக்கி இச்சைப்படியே திரிய விடு. அஃது உனக்கு நன்மை. ஒன்றுக்கும் கவலைப் படாதே' என்ற திருவாக்குத் தோன்ற எல்லாரும் அதிசயித்து அரசனை நோக்க, அரசன் அச்சமெய்தி உடல் புளகிப்ப இஃது எம்மையுடைய கடவுள் வாக்கென்று கொண்டு வாதவூரரைச் சிறைநீக்கித் தன் அருகழைத்துப் பல வித உபசாரஞ் செய்து வணங்கினன். 'யான் அறியா மையாற் செய்தனவற்றைப் பொறுத்து இங்கு எழுந் தருளியிரும், அன்றேல், போம். திருவுளப்பாங்கு எப்படியோ அப்படிச் செய்யும். எம் சொக்கர்க்கு உம்மீதுள்ள அன்பு வேறெங்கும் கிடையாது' என்று அரசன் புகழ, எல்லாரும் வியந்து துதித்தார்கள். 'ஆகாசவாணியைத் தெய்வ வாக்கென்றே தெளிந்தாய். அஃது உண்மையே. உன்னை யடைந்ததனால் இப் பேற் றைப் பெற்றேன். நீங்காத பாசம் என்னைவிட்டு நீங்கி யது. இனி என்வழியே போவேன். இன்று கடவுள் உண்டென்று சந்தேகமற உணர்ந்த உணர்ச்சியால் உனக்குச் செல்வம் மிகும், இனி உனக்குத் தீங்கில்லை' என்று அரசனுக்குச் சொல்லிவிட்டு, வாதவூரர் 'நமச் சிவாய வாஅழ்க' என்றெடுத்துச் சிவபுராணத்திருவக வலை ஓதிக்கொண்டே சென்றனர். பாண்டியனும் சிறிது தூரம் பின்சென்று வழிவிட்டு அவரிடத்து விடை பெற்று அரண்மனைக்குத் திரும்பினன். சென்ற வாத

ஆரார் ஆலயத்துக்குப் போய்ச் சிவன் செயலை வியந்து வாழ்த்தினர். பின் உத்தரகோசமங்கை கழுக்குன்றம் என்னும் தலங்களில் தமது ஞாநாசாரிய ருருவங் கண்டு மகிழ்ந்து, திருக்கோவையார் பாடி, 'தில்லையம்பலத்துக்கு வா' என்று ஆகாசவாணி யுரைப்ப, அவ் வண்ணமே போய்த் திருவாசகப் பாட்டுக்கள் அநேகஞ் சொல்லி, புத்தரையும் வாதில் வென்று, எல்லாரும் புகழத்தக்க முத்தியை யடைந்தார்.

# திருவிளையாடற் புராணம்

திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் தோன்றிய பின் பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணம் தோன்றிற்று இரண்டு புராணங்களும் கூறுவது சோமசுந்தரக் கடவுள் திருவிளையாடல்களேயாயினும் ஆங்காங்கே பேதம் காணப்படுகின்றது. மாணிக்கவாசகர் சரித்திரத்தைக் கூறும் இப் புராணம் அதனை நாலுபடலத்திற் கூறுகின்றது. கற்பனை நயம் அதிகம் வாய்ந்த இப் புராணத்தில் கூறப்படும் வரலாற்றுக்கும திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்தில் கூறப்படும் வரலாற்றுக்கும் பேதம் அதிகம் இன்மையால், உள்ள சில பேதங்களைமாத்திரம் எடுத்துக்காட்டின் அமையும்.

திருவாதவூரடிகளுக்கு உபதேசித்தது

திருவிளையாடற் புராணம் திருவாதவூரார் வாதவூரிற் பிறந்து வளர்ந்தகாலத்தில் மதுரையை யாண்ட மன்னன் அரிமர்த்தன பாண்டியன் என்னும். அவர் முதன் மந்திரியாய் முறை செய்துகொண் டிருந்த நாளிலே மோக்ஷ அவாவுற்று ஞானசாரியர் எப்போ தகப்படுவார் என்னும் தேட்டமுற்றிருந்தார். பாண்டியன் குதிரைகள் வாங்கி வரும்படிசொல்லலும் அவர் பண்டாரத்தைத் திறந்து வேண்டிய பொன்னெடுத்துப் பொற்சுமைகளை ஒட்டகங்களி லேற்றுவித்து முன் செல்ல விடுத்துத் தாம் சோமசுந்தரக் கடவுள் முன்சென்று நின்று, 'எம்பெரு,

யானே, இப்பொருள்க ளெல்லாவற்றையும் தேவரீ
ருக்கும் தேவரீருடைய அடியார்களுக்கும் உரியன
வாகச் செய்தல்வேண்டும். அடியேனுடைய குறை
இதுவே' என்று வேண்டுதல்செய்தார். அப்பொழுது,
சோமசுந்தரக் கடவுளுடைய திருவருள்போல, அருச்
சகராகிய ஆதி சைவரொருவர எதிரே வந்து விபூதி
கொடுத்தார அதனைத் திருவாதவூரர், 'நமக்கு இது
போலும் நன்னிமித்தமில்லை. இது நன்னெறிக்கு
ஏதுவே' என்று இரு கரங்களினாலும் வாங்கித் தரித்
துக்கொண்டு பிரயாணப்பட்டுச் சென்று திருப்பெருந்
துறையிலே ஆசாரிய கோலங்கொண்டு வீற்றிருந்த
சிவபெருமானிடத்தில் ஞானோபதேசம் பெற்று
ஞானஸ்வரூபி யாயினார் அவருடைய நாவில் ஞானக்
கலைமகள் வந்து தங்கினாள். அப்பொழுது அவர,
உள்ளத்திலே நிறைந்த பேரின்பவெள்ளம் தேங்கிப
புறத்தே வழிதல்போல, கைகள் அஞ்சலிக்க, சிரம்
கம்பிக்க, கண்கள் ஆனந்த பாஷ்பஞ் சொரிய, திரு
மேனி உரோமாஞ்சங் கொள்ள, நாத் தழுதழுத்த
அன்புரையினராய், தம்வச மிழந்து, பரமாசாரியரை
வணங்கித் தோத்திரஞ் செய்வாராயினார். பழுதில்
லாத சொற்களாகிய மணிகளை அன்பாகிய வடத்தாற்
கோத்த பாமாலையை அழுதழுது சாத்துகின்ற மெய்யன்ப
ராகிய திருவாதவூரருக்கு மாணிக்கவாசகன் என்
னும் திருநாமத்தை ஞானாசாரியராகிய சிவபெருமான்
கொடுத்தருளினார்.—மற்றுள்ள வரலாற்றில் எடுத்துக்
காட்டத் தக்க பேதம் ஒன்றும் இல்லை.

நரி பரியாகியது

வாதவூரர் குதிரைகள் கொண்டுவாராமைக்காகச்
சினந்த அரசனது ஏவலின்மேற்
சென்ற தண்டலாளர்கள் அவர்

மேற் கல்லேற்றினார்கள். அப் பாரத்தைச் சிவபெருமான் தாங்கியருள, வருந்தா திருந்த வாதவூரர் நிலைமையைக் கண்ட அன்னார் 'இது மாயம்போலும்' என்று மிகுந்த கோபங்கொண்டு அவருடைய கரங்களிலும் பாதங்களிலும் கிட்டியை மாட்டி நெரித்தார்கள். அன்றிரவு, அவரைச் சிறைச்சாலையி லிட்டு விலங்கு மாட்டி மிக்க துயரஞ் செய்தார்கள்.

ஆவணி மூலத்தன்று சிவபெருமான் நரிகளைப் பரிகளாக்கிச் சிவகணங்களைக் குதிரைச்சேவகராக்கித் தாமும் வேதப் பரிமீதேறித் தலைவராய்ப் பாண்டியன் முன் வந்தார். அவன் அக் கடவுளுடைய கிருபா நோக்கத்தைப் பெற்று, மனமயங்கித் தன்னை மறந்து, இருக்கைவிட் டெழுந்து, கைகளைச் சிரசின்மேற் குவித்துக்கொண்டு நின்றான். பின்பு சிவபெருமானுடைய ஆணையினாலே மறைப்புண்ட அறிவு தன் உள்ளத்திலே தோன்ற, 'இன்றைக்கு ஒரு குதிரைவீரனைக் கண்டு நாம் எழுந்து கைகுவித்து அஞ்சலிசெய்து நின்றதென்ன!' என்று வெட்கித் திரும்ப ஆசனத்திலிருந்தற்கு நாணி நின்றான்.

குதிரை வீரராகிய கடவுளுக்குப் பாண்டிய ராசன் வெண்பட்டை வரிசையாகக் கொடுத்தபொழுது அவர் குதிரையினின் றிறங்கி அதனை யேற்றுத் திருமுடியின்மீது தரித்தருளினார். பாண்டிய ராசன் குதிரை வீரர் எல்லார்க்கும் பட்டாடைகள் கொடுத்தான். அவைகளைச் சிவபெருமானாகிய குதிரை வீரர் வாங்கிக்கொண்டு வேதமாகிய குதிரையோடு மறைந்தருளினார்.

பரி நரியாக்கியது

பரிகளெல்லாம் அர்த்த ராத்திரியில் நரிகளாகி, பக்கத்தில் நின்ற குதிரைகளையுங் கடித்துத் தின்று மனிதர்க்கும் இடர் விளைத்து, ஊரைக் கலங்கச்செய்து காட்டில் ஓடிப் போக, மிக வெகுண்ட பாண்டிய மன்னன் மாணிக்க வாசகரைப் பலவாறு வைது, அவரை வருத்திப் பொருள்வாங்கும்படி தண்டலாளரை ஏவினான். அவர்கள் அவரைக் கொண்டுபோய், உச்சிப்பொழுதிலே சூரியனைப் பார்க்கும்படி நிறுத்தி, நெற்றியிலும் கைகளிலும் கல்லேற்றி வருத்தினார்கள். அவர் அதனைச் சகிக்கக் கூடாதவராய்ச் சோமசுந்தரக் கடவுளை அழைத்து அழ, கடவுளும் மனமிரங்கி வைகையைப் பெருக்கெடுத்து வரும்படி செய்தார். அப்பொழுது ஊர் அல்லோல கல்லோலப்பட்டுக்கொண் டிருந்தது. மாணிக்கவாசகரை ஒறுத்த தண்டலாளரும் தம்முடைய பொருள்களைப் பேணுதற்காகத் தம் வீட்டுக்குப் போனார்கள். போகவே, அவர் ஆலயத்திற் சென்று சோமசுந்தரக் கடவுள் பாதங்களைத் துதித்து வணங்கிக்கொண்டு ஆனந்தத்தில் மூழ்கியிருந்தார்.

மண் சுமந்தது

சோமசுந்தரக் கடவுள் வந்தி யென்னும் பிட்டு வாணிச்சிக்குக் கூலியாளாய் வைகைக் கரைக்குச் சென்று தம்மை வந்தி யுடைய கூலியாளென்று எழுதுவித்துக்கொண்டாரே யன்றிக் கரையை அடையாது ஆடிப்பாடிக் குதித்து விளையாடிக் கொண்டு நின்றார். அரசன் ஏவலாளர், வந்தி பங்கு அடைபடாமையைக் கண்டு வெகுண்டு விசாரிக்க, ஒன்றும் பேசாது இறுமாந்திருந்த கூலியாளரைப் பார்த்து, 'இவன் யார்? பித்தனோ, பேய் கோட் பட்டவனோ ஒன்றுந் தெரியவில்லை. வந்தி

யுடைய கூலியாளென்று தன்னை எழுதுவித்துக் கொண்டான். இவனுடைய மேனியானது இவன் முன் கூலிவேலை செய்தவனல்ல னென்பதை விளக்கு கின்றது' என்று, அடிக்க அஞ்சி, இதனை நாம் அரசனுக்கு விண்ணப்பம் செய்வோம் என்று போனார் கள். இவர்கள் விண்ணப்பத்தைக் கேட்ட அரசன் மந்திரிமாரோடு கரைகாணப் போய், வந்தியுடைய பங்குக் கரையை அழித்து வெள்ளம் பெருகுவதைக் கண்டு கோபித்து, 'இக் கரையை அடைப்பவன் எங்கே?' என்று வினவ, ஏவலாளர்கள் கூலியாள ரைக் கைபிற் பிடித்து இழுத்துவந்து, 'இவன்தான்' என்று காட்டினார்கள். அரிமர்த்தன பாண்டியன் கோபமிகுந்து, பொற்பிரம்பைக் கைபினால் வாங்கி, அவருடைய திருமுதுகில் அடித்தான். கடவுளும் கூடையோடு மண்ணை உடைப்பிலே கொட்டிவிட்டு உடனே மறைந்தருளினார்.

பின் பாண்டியன் அரசியால் மாணிக்கவாசகர் பெருமையை யுணர்ந்து கோயிலிற்போய் அவரைக் கண்டு வணங்கினான். அவரும் அவனுக்கு உபசார மொழிகள் சொல்லி விடைகொண்டு மதுரையினின் றும் புறப்பட்டார். புறப்பட்டவர் பல திருப்பதிகளை யும் வணங்கிக்கொண்டு சிதம்பரத்தை அடைந்து சபா நாயகரை வழிபட்டுச் சிலநாளிருந்து பின் அவ ராஞ்ஞையாலே சிதம்பரத்துக்குக் கிழக்கேயுள்ள தபோவனத்தையடைந்து சிவானந்தத்தில் அமிழ்ந்திச் சிவயோகஞ் செய்துகொண்டிருந்தார். அந் நாளிலே ஈழமண்டலத்தினின்று புத்தர் சிலர் வாதுசெய்தற்கு வர, சபாநாயகர் தில்லை மூவாயிரவருக்குச் சொப்ப

னத்திலே தோன்றி, 'வாதவூரனை அழைத்துவந்து புத்தரோடு வாதுசெய்யும்படி விடுவீராயின் வெற்றி உங்களதாகும்' என்ன, அவர்கள் நித்திரைதெளிந்து தபோவனத்துக்குப் போய் அவரை யழைத்தார்கள். அவர் மறுத்தனர். வருத்தமுற்ற தில்லை மூவாயிரவர் கனவில் சபாநாயகர் மீளவுந் தோன்றி, திருப்பெருந் துறையிலே குருந்தமரத்தடியிலே தாம் ஆட்கொண்ட முறைமையினையும மாணிக்கவாசகனென்று இட்ட நாமத்தினையும் அறிவித்து, 'இனி அவனை மாணிக்க வாசகனென்று அழையுங்கள், வருவான்' என்னலும், அவர்கள் போய் அழைத்தார்கள். மாணிக்கவாசக ரும் புறப்பட்டு வந்து புத்தரை வாதில் வென்று, பிறவியூமையா யிருந்த சோழராஜன் மகளை ஊமை தீர்த்தருளினார். பின்னும் சிலகாலம் திருவாசகம் பாடித் துதித்துக்கொண்டு அத்தலத்திலேயே யிருந்து சிவபெருமானுடைய திருவடி நீழலை அடைந்தார்.

# திருப்பெருந்துறைப் புராணம்

மாணிக்கவாசகர் திருப்பெருந்துறையில் பரமசிவனிடத்து ஞானோபதேசம் பெற்றார் என்று முன் வந்த நூல்களிலெல்லாம் கூறப்பட்டதன்றோ! அத் தலத்தினுடைய வரலாறு சிறிது காலத்தின் முன் மஹா வித்துவானாய்ப் பிரக்கியாதி பெற்றிருந்த மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையாற் பாடப்பட்டுளது. அதில் இடையில் மாணிக்கவாசகர் சரித்திரம் திருவாதவூரர் திருவவதாரப் படலம், அமைச்சுரிமை பூண்ட படலம், திருப்பெருந்துறை யடைந்த படலம், உபதேசப் படலம், மதுரையை யடைந்து விடைபெற்ற படலம், தில்லையை யடைந்த படலம் என்னும் ஆறு படலங்களில் விஸ்தாரமாக உரைக்கப்பட்டது. கற்பனைகள் மிகுந்த இந் நூல் சரித்திரத்தில் மற்றைய நூல்களினின்றும் அதிகமாகப் பேதப்படவில்லை. சரித்திர பேதங்களை எடுத்துக் காட்டுவதே இங்கு அவசியமாதலின், அவைமாத்திரம் காட்டப்படும்.

திருவாதவூரர் திருவவதாரம்

திருவாதவூரர் திருவாதவூரிலே பிராமண ஜாதியிலே ஆமாத்தியர் குலத்திலே யுதித்த சம்புபாதாசிரிதர் என்னும் உத்தமருக்கும் சிவஞானவதி யென்னும் உத்தமிக்கும் புதல்வராய்த் தோன்றினார். சம்புபாதாசிரிதர் நெடுநாளாகச் சிவாலயத்திற் சென்று வழிபட்டுப் பரசமயக் குறும் பொழிக்கும் பிள்ளை யொன்று வேண்டிக்கொண் டிருந்தார். அக்காலத்திலே புத்த சமயம் எங்கும் பரந்தோங்கியிருந்தது.

முனிவரும் தேவரும் கூடிக் கைலைக்குச் சென்று சிவ பெருமானை நோக்கிப் புத்தர் கொடுமைகளை விரித்துக் கூறிக் குறையிரந்தார்கள். சிவபெருமானும் 'சாக்கியர் வலியை யொழிப்போம், போங்கள்' என அவர்கட்கு விடை கொடுத்து இந்தக் காரியத்தை மனத்தில் எண்ணிக் கொண்டிருந்தார். ஒருநாள் கணநாதர் ஆயிரவர் அதிதீவிர பக்குவமுடையார் சிவபெருமானை யடுத்து, 'எங்கட்கு ஆசமந் துண்மை யுரைக்கவேண்டு' மென்று வணங்கினார்கள். கடவுளும் இரங்கி, 'இது பெற வேண்டுமாயின் நீங்களெல்லாம் உத்தரகோச மங்கைக்குச் சென்று நம்மைத் தொழுது பணிவிடை செய் திருங்கள். நாம் அங்குவந்து உங்கள் விருப்பத்தை நிறைவேற்றுவோம்' என்றார். அவர்கள் அவ் வண்ணமே பாண்டிநாட்டில் உள்ள உத்தரகோசமங்கைக்குச் சென்று இரவு பகல் ஓயாது சிவனை வழிபட்டு வந்தனர். சிவபெருமான் பிராமண வடிவங் கொண்டு அங்கு எழுந்தருளினார். அவர்களும் சென்று வணங்க, கடவுள் அவர்களை ஓரிடத்தில் இருத்தித் திவ்யாகமத்தின் தத்துவத்தை உபதேசிக்க ஆரமபஞ் செய்தார். அப்போது சர்வாடம்பரந்தோடும இந்திரன் பவனி வர, அக் கோலாகலத்தைக் கண்டு ஒரு கணநாதர் தாம் கேட்கும் உபதேசத்தை மறந்திருந்தார். அதனை யுணர்ந்த சிவபெருமான், 'நாம தத்துவோபதேசஞ் செய்யத் தொடங்குங்காலை, நீ இது சிறந்த தென்றெண்ணி வேறொரு காரியத்தில் மனத்தைச் செலுத்தினாய். ஆதலால் நீ இப் பூமியிற் பிறந்து இச் செல்வமெலாம் பெற்றனுபவித்துப் பின் நம்மை அடை' என்றார். என்றதனைக் கேட்ட கணநாதர் நடுநடுங்கி என்செய்கேன் என்று கதற, அவரை நோக்கிப்

பெருமானார் 'அஞ்சல், நாமே திருவடி தீக்ஷை செய்து உன்னை ஆட்கொள்வோம்' என்று சொல்லித் தேற்றினார். கணநாதர் உடனே சம்புபாதாசிரிதர்க்குப் புத்திரராய்த் திருவாதவூரிற் போய்ப் பிறந்தார். அதனால் சம்புபாதாசிரிதர் வேண்டிய வரமும் கிடைத்தது, புத்தர் ஒழிதற்கு ஏதுவும் பிறந்தது.

திருப்பெருந்துறையை யடைந்தது

திருவாதவூரர் திருப்பெருந்துறையை யடைந்து அங்குத் தங்கியிருந்த பொழுது ஒருநாள் இரவு அவர் உணவுண்டு படுக்கைக்குச் சென்றார். சென்றவர் ஆதிநாதர் அருளால் சிறு துயில் கொண்டார். கனவிலே ஆதிநாதர் மானிட வுருவந் தாங்கி மாணாக்கர் பலர் சூழக் குருந்த நீழலிலே அமர்ந்திருக்கவும் தாம் விழுந்து விழுந்து வணங்கவும் கண்டார். இக் கனைக் கண்டவர் அருகமுதிரங்கி இஃது என்ன காணக்காட்சி யென்று வியந்து, இது பொய்யாதலில்லை, இவரே என்னையாட்கொள்ளப் போகின்றார் என்று துணிந்து, விடிவதை எதிர்பார்த்திருந்தார். விடிந்ததும் காலைக் கடன்களை முடித்து ஆலயத்திற்குச் சென்று தாம் கனவிற் கண்டவாறே சிவபெருமான் மாணக்கர் பலர்சூழக் குருந்தமரத்தினீழலிலே வீற்றிருக்கக் கண்டு வீழ்ந்து வணங்கி ஞானோபதேசம் பெற்றுக் கிருதார்த்தராயினர்.

இவ்விரண்டு படலங்களை யொழிந்த படலங்களுள் எடுத்துக் காட்டத்தக்க பேதம் ஒன்றுமில்லை.

இத் திருப்பெருந்துறைப் புராணத்தை யன்றி வேறொன்று பழமையான துண்டு அதில் திருவாசகச் சிறப்பு உரைக்கப்பட்டுளது.

# திருவுத்தரகோச மங்கைப் புராணம்

திருவுத்தரகோச மங்கை என்னும் சிவ ஸ்தலத்தின் மாஹாத்மியத்தை உரைப்பது திருவுத்தரகோச மங்கைப் புராணம். அச்சிட்டுக் காணும் புஸ்தகத்தில் இதனை இயற்றினர் பரிமளமணி ஞானசம்பந்த தேசிகர் சிஷ்யர் என்றுள்ளது. இந்நூலில் எட்டாவது அத்தியாயமாகிய பார்ப்பதி தவம் புரிந்த அத்தியாயத்தில் மாணிக்கவாசகர் வரலாறு ஒரு சிறிது கூறப்பட்டது.

ஒரு காலத்து, முருநமர்த முனிவரர் ஆயிரவர் தவஞ் செய்தற்குத் தக்க தலமொன்றை நாடிச் சென்று சிவாலயத்திற்கு நிருதி திசையிலிருந்து பல்காலம் தவஞ் செய்திருந்தனர். சிவபெருமான் ஒருநாள் அவர்களைப் பார்த்து, 'நாம் மண்டோதரி பொருட்டு இலங்கை செல்லல வேண்டும். நீங்கள் இங்கேயே இருங்கள்' என்று சொல்லித் தெய்வத் திருமுறையை அறிஞர் கையிற் கொடுத்தார். அவர்கள் 'எப்பொழுதும் தீத்தொழிலே புரிந்துவரும் இராக்கதர் நிறைந்த தேசத்தை சேர்தல் தகுமோ?' என்னவும், கடவுள் 'இலங்கை மன்னனாகிய இராவணன் நம் உருவைத் தொட நேரும்பொழுது இத் தடாகத்தின் நடுவில் தீப்பிழம்பு தோன்றிக் கொழுந்துவிட்டெரியும்' என்று சொல்லி, இலங்கையில் மண்டோதரியிருக்கும் மாளிகையிற் போயிருந்து அவள் செய்த உபசாரங்களைப் பெற்று மகிழ்ந்திருந்தார். அப்பொழுது இராவணன் வருதலும் அவர் பச்சைக்

குழவியாக உருமாறி யிருந்தார். அழகு நிறைந்த இத் தெய்வக் குழந்தையைக் கண்ட இராக்கத ராசன் மன நெகிழ்ந்து 'குழந்தை எங்கிருந்து வந்தது?' என, மண்டோதரி 'ஒரு தவப்பெண் கொடுத்துப் போயி னுள்' என்றுரைத்தாள். அரசனும் குழந்தையைப் பிரியமாக எடுத்து மடியில் வைத்துக் களித்தான். அவன் தொட்ட அளவிலே முன் சொன்ன படியே தடாகத்தில் அக்கினி எழுந்தது. அதனைக் கண்ட முனிவரர் எல்லாரும் அந்நுட் குதித்தனர். அங்கு ஒருவர் இருந்தார்: கல்வியில் முதியர், வயதில் இளையர், வேதியர் குலத்தவர், கேள்வி மிக்கவர், வணங்கும் வாயினர், ஒடுங்கும் உள்ளத்தினர், மாணிக்க வாசகர் என்பார். அவர் திருமுறையை நிலத்தில் வைத்தல் தவறு இதனை நாம் ஓம்புதல் கடன் என்று குறித்து அத் தீயிற் குதித்தாரில்லை. அத் திருமுறையைக் கையிலேயே நீங்காது வைத்துக் கொண்டு அப் பொய்கைக் கரையிலேயே நெடுநாள் தங்கினர். உமாதேவியார் வயதுமுதிர்ந்த தவப்பெண் போல் வடிவங் கொண்டு மண்டோதரி யிடத்துப் போய்க் குழந்தையைப் பெற்றுக்கொண்டு போயினர். திருமுறையைப் போற்றல் குறித்து அங்குப் பொய் கைக் கரையில் வீற்றிருந்த மாணிக்கவாசகரைச் சிவ பெருமான் நோக்கி, 'நீ இப் பூவுலகில் யாம் வாழ் கின்ற தலந்தோறுஞ் சென்று செய்யுளால் எம்மை ஸ்துதித்த பின் நாமே உன்னை ஒரு தலத்தில் ஆட் கொண்டு பேரின்ப முத்தியிற் 'சேர்ப்போம்' என் றருளினர்.

## ஆராய்ச்சி

மாணிக்கவாசகர் சரித்திரத்தைக் கூறும் நூல்கள் இவைகளை யன்றி வேறிருப்பதாகப் புலப்படவில்லை. வடமொழியில் ஸ்ரீவாதபுர மாஹாத்மிய மென ஒன்றிருப்பதாகத் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராண முகவுரையிற் குறிக்கப்பட்டுளது. தமிழ் நூல்களுள் திருவாதவூரர் புராணம் மாணிக்கவாசகர் சரித்திரத்தை மாத்திரமே விரித்துக் கூற எழுந்ததாகலின் அதிலுள்ள வரலாறு முதலாவது கூறப்பட்டது. அந் நூல் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்திற்கு முந்திய தென்று சொல்வதற்கு ஆதாரமில்லை; இதுவே முந்தியதா யிருக்கலாம். இத் திருவிளையாடற் புராணம் பழைமையினை தாகலின் இதிலுள்ள வரலாறு அடுத்துக் கூறப்பட்டது. இதற்குப் பின் தோன்றியதும் இதனை யனுசரித்துத் தோன்றியதுமான பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராண வரலாறு அதனையடுத்துக் கூறப்பட்டது. மாணிக்கவாசகர் சரித்திரத்தை முழுதுமே கூறுமாயினும் பிற்பட்டுத் தோன்றி முன்னூல்களிலுள்ள கதையையே யுரைக்கும் திருப்பெருந்துறைப் புராண வரலாறு அதற்குப் பின் உரைக்கப்பட்டது. மாணிக்கவாசகர் முற்பிறப்பை ஒருவாறு விளக்கும் திருவுத்தரகோசமங்கைப் புராணம் அதற்கு முந்தியதாயினும் அதிற் சரித்திரமொன்றும் இல்லையாகலின் இறுதியில் அம் முற்பிறப்பு வரலாறு மாத்திரம் எடுத்துக் காட்டப்பட்டது.

## மாணிக்கவாசகர் சரித்திரத்திற்கு அவர் அருளிய நூல்களில் ஆதாரம்

மாணிக்கவாசகர் கணநாதரா?

இனி, மாணிக்கவாசகர் தமிழில் திருவாசகம் திருக்கோவையார் என்னும் இரண்டு நூல்களையும் செய்தருளி யிருக்கின்றார் என்று முன்னமே குறிக்கப் பட்டதன்றோ. அந் நூல்களில் அவர் சரித்திரத்திற்கு எவ்வளவு ஆதார முண்டென்று நோக்குவோம். திருவுத்தரகோச மங்கைப் புராணத்தும் திருப்பெருந் துறைப் புராணத்தும் சொல்லியபடி அவர் சிவகண நாதராயிருந்தவர் வாதவூரில் வந்தவதரித்தனர் என்று சொல்லுவதற்கு அவர் நூல்களில் ஆதாரமில்லை. அவரைச் சிவகணத் தலைவராகிய நந்தீசுவரரென்றும், திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரத்தில் 'குடமுழ நந்தீசனை வாசகனைக் கொண்டார்' என்றமை இதற்கு ஆதாரமா மென்றும் சொல்வர் சிலர். மாணிக்கவாசகரென்று விவரமாகக் குறிப்பிடாமல் வாளா 'வாசகனைக் கொண்டார்' என்றது சிவபெருமான் நந்தீசுவரரைத் தம் காரியத் தலைவராகக் கொண்டா ரென்பதையே காட்டும். அவர் கணநாதர்க்கெல்லாந் தலைவராய்க் கைலை காவல் பூண்டு தேவர் முனிவராதியர் அகத்துச் செல்லவேண்டின் கடவுளுக்கு அதனை யறிவித்து அவர்களை அகத்துச்செல்ல விடுவதும் கடவுள் கட்டளையை எப்போதும் பிறர்க்குஅறிவிப்பதும் முதலிய தொழில்களையுடையவரன்றோ! இன்னும் பரஞானம் சிவனிடத்திருந்து அவர் மூலமாகவன்றோ வெளிப்பட்டது! ஆதலால் வாசகன் என்பது மாணிக்கவாசகரைக் குறித்த தென்றல் பொருந்தாது.

மாணிக்கவாசகர் வாதவூரில் அவதரித்தார் என்பதற்கும் அவர் நூல்களில் ஆதாரமில்லை. திருவாசகம் கீர்த்தித் திருவகவலில் பல தலங்களையுஞ் சொல்லுங்கால்,

அவர் வாதவூரிற் பிறந்தமை

வாத வூரினில் வந்தினி தருளிப்
பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்

என்றதை, சிவபெருமான் பரிமேற்கொண்டு வருங் காலத்து வாதவூரடைந்த வுடனே மாணிக்கவாசகர் தம் பாதச் சிலம்பொலி கேட்கச் செய்தார் என்று கதையொடு பொருத்தித் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் விளக்கிற்று.

மாணிக்கவாசகர் காலத்துப் பாண்டிநாட்டை யரசாண்ட மன்னன் அரிமர்த்தனன் எனத் திருவிளையாடற் புராணங் கூற, அவர் செய்த நூலாகிய திருக்கோவையாரில் வருகுண பாண்டியன் பிரஸ்தாபமே வந்திருக்கின்றது.

அவர் காலத்துப் பாண்டியன்

திருப்பெருந்துறையில் அடிகள் உபதேசம் பெற்றார் என்பதற்குத் திருவாசகத்தில் ஆதாரம் நிறைய உண்டு. திருப்பெருந்துறைப் பிரஸ்தாபம் அடிக்கடி வருகின்றது. மற்றைத் தலங்களைப் பாடும் பொழுதும் அவர் இத் தலத்தின் பெயரை யுரைத்திருக்கின்றார்:

திருப்பெருந் துறையில் உபதேசம் பெற்றமை

திருவார் பெருந்துறைச் செல்வ னாகிக்
கருவார் சோதியிற் கரந்த கள்ளமும் (கீர்த்தித் திருவகவல்)

திருவார் பெருந்துறை வரையில் ஏறி (திருவண்டப்பகுதி)
தென்னன் பெருந்துறையின் மேயானை (திருவெம்பாவை)
தென்னன் பெருந்துறையான் (திருவம்மானை)
சீரார் திருவடித்திண் சிலம்பு சிலம்பொலிக்கே
ஆராத ஆசையதாய் அடியேன் அகமகிழத்
தேரார்ந்த வீதிப் பெருந்துறையான் (திருப்பூவல்லி)
திருப்பெருந் துறையுறை சிவனே (கோயிற்றிருப்பதிகம்)
பெருந்துறைக் கொண்டலே (திருக்கழுக்குன்றப் பதிகம்).

திருப்பெருந்துறைத் திருவாசகம்

திருவாசகத்தில், சிவ புராணம், திருச் சதகம், திருப் பள்ளியெழுச்சி, செத்திலாப் பத்து, அடைக்கலப் பத்து, ஆசைப் பத்து, அதிசயப் பத்து, புணர்ச்சிப் பத்து, வாழாப் பத்து, அருட் பத்து, பிரார்த்தனைப் பத்து, குழைத்த பத்து, உயிருண்ணிப் பத்து, திருப்பாண்டிப் பதிகம், திருவேசறவு, அற்புதப் பத்து, சென்னிப் பத்து, திரு வார்த்தை, திரு வெண்பா, பண்டாய நான்மறை என்னும் பகுதிகள் திருப்பெருந்துறையில் அருளிச் செய்யப்பட்டனவாகக் காட்டப்பட்டுள. முன் வந்த புராண வரலாறுகளோடு இதனை ஒப்பு நோக்குவோர் பேதம் உண்மையை அறிவர். புராணங்களில் கூறும் முறை யொன்றும் திருவாசகத் திருமுறையிற் காணும் முறை வேறொன்று மாதற்குக் காரணம் புலப்படவில்லை. புராணங்களுள்ளும் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்துக்கும் திருவாதவூரர் புராணத்துக்கும் பேதம் உண்மை கவனித்து நோக்கியோர் அறிந்திருப்பர்.

அவர் சிவனிடத்து உபதேசம் பெற்றார் என்பதற்கு,

நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி (சிவபுராணம்)
ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தை பெருமானே (ஷ)
அந்தண னாகி யாண்டுகொண் டருளி (கீர்த்தித் திருவகவல்)
என்னே யனையோர் கேட்கவந் தியம்பி
அறைகூவி யாட்கொண் டருளி
மறையோர் கோலங் காட்டி யருளலும் (திருவண்டப்பகுதி)
பேணு பெருந்துறையிற்
கண்ணார் கழல்காட்டி நாயேனை யாட்கொண்ட
(திருவம்மானை)
சீரார் பெருந்துறையில்
எளிவந் திருந்திரங்கி எண்ணரிய இன்னருளால்
ஒளிவந்தென் னுள்ளத்தி னுள்ளே யொளிதிகழ
அளிவந்த அந்தணனை (ஷ)
அருவாய் மறைபயி லந்தணனா யாண்டுகொண்ட
(திருக்கோத்தும்பி)
உருநாம் அறியவோர் அந்தணனா
யாண்டுகொண்டான் (திருத்தெள்ளேணம்)
பூவா ரடிச்சுவடென் தலைமேற் பொறித்தலுமே
தேவான வாபாடி (ஷ)
பாரிடைப் பாதங்கள் காட்டிப்
பாச மறுத்தெனை யாண்ட (குயிற்பத்து)
முன்னே எனையாண்ட பார்ப்பானே (புணர்ச்சிப்பத்து)
திருப்பெருந் துறையுறையும்
பனவனெனைச் செய்தபடிறு (உயிருண்ணிப்பத்து)
கருணையினால்
பெரியோ னொருவன் கண்டுகொள் ளென்றுன்
பெய்கழ லடிகாட்டிப்
பிரியே னென்றன் றருளிய அருளும்
பொய்யோ (எண்ணப் பதிகம்)

என்பனவாதி வாக்கியங்கள் பிரமாணமாகும். இவற்றில் சிவபெருமானே பூலோகத்தில் பிராமண வடிவங்கொண்டு வந்து திருவடி தீக்ஷைசெய்து மாணிக்க

வாசகரை யாட்கொண்டார் என்று தெளிவாக ஓதப் பட்டுள்ளது. உபதேசம் பெற்ற இடம் திருப்பெருந் துறை யென்பதும் ஒருவாறு குறிக்கப்பட்டுளது.

இனி, மாணிக்கவாசகர் சிவனடியாரோடு சிறிது காலம் ஆனந்தமாக இருந்தபின் சிவபெருமானேவ லால் அவர்களெல்லாம் பொய்கையில் வீழ்ந்து சிவ லோகஞ் சென்றனரென்றும் இவர் மாத்திரம் சிதம் பரத்துக்குப் போகும்படி ஆஞ்ஞாபிக்கப் பட்டாரென் றும் புராணங்கள் உரைத்ததற்கும் பிரமாணம் திரு வாசகத்தேயே காணப்படும்:

உடையானே நின் றனையுள்கி
யுள்ள முருகும் பெருங்காத
லுடையார் உடையாய் நின்பாதஞ்
சேரக் கண்டிங் கூர்நாயிற்
கடையா னேன்னெஞ் சுருகாதேன்
கல்லா மனத்தேன் கசியாதேன்
முடையார் புழுக்கூ டிதுகாத்திங்
கிருப்பதாக முடித்தாயே (திருச்சதகம் 6)

அடியா ரானா ரெல்லாரும் வந்துன் தாள்சேர்ந்தார்
செடிசே ருடலமிது நீக்க மாட்டேன் (ஷை 9)

அருள்செ யன்பரும்
நீயு மங்கெழுந் தருளி யிங்கெனை
இருத்தி னாய்முறை யோ (ஷை 10)

கலந்து நின்னடி யாரோடு
அன்று வாளா களித்திருந்தேன்
புலர்ந்து போன காலங்கள்
புகுந்து நின்ற திடர்பின்னாள் (பிரார்த்தனைப்பத்து)

நாயினேனை நலமலி தில்லையுட்
கோல மார்தரு பொதுவினில் வருகென
ஏல என்னை யீங்கொழித் தருளி
அன்றுடன் சென்ற அருள்பெறு மடியவர்
ஒன்ற ஒன்ற உடன்கலந் தருளியும் (கீர்த்தித் திருவகவல்).

இவ் விறுதிவாக்கியத்தை யடுத்து வரும்

எய்தவந் திலாதார் எரியிற் பாயவும்
மாலது வாகி மயக்க மெய்திடும்
பூதல மதனிற் புரண்டுவீழ்ந் தலறியுங்
கால்விசைத் தோடிக் கடல்புக மண்டி
நாத நாத என்றழு தரற்றிப்
பாத மெய்தினர் பாத மெய்தவும்
பதஞ்சலிக் கருளிய பரமநா டகஎன்
றிதஞ்சலிப் பெய்த நின் றேங்கின ரேங்கவும்

என்னும் அடிகள் அடியார்களுட் சிலரே முத்தி பெற்றன ரென்றும், அம் முத்தி யிடைப் பக்குவமில்லார் சிலர் நீப்பாய்ந்தன ரென்றும், சிலர் அச் சாகசச் செயல் துணியாது அழுதரற்றித் திருவடிகளை யடைந்தன ரென்றும் குறிப்பிப்பது போலத் தோன்றுதலால், புராண கதை சிறிது மாறுபடுகின்றதென் றுரைக்கலாம்.

மாணிக்கவாசகர்க்காகச் சிவபெருமான் நரிகளைப் பரிகளாக்கித் தாம் ஒரு பரிமேற்கொண்டு மதுரைப்பதிக்கு வந்தனர் என்னும் கதைக்கும் பிரமாணம் திருவாசகத்தில் உண்டு:

நரியைக் குதிரை யாக்கிய நன்மையும்
ஆண்டுகொண் டருள அழகுறு திருவடி
பாண்டியன் றனக்குப் பரிமா விற்று
ஈண்டு கனக மிசையப் பெறாஅ

தாண்டா னெங்கோ னருள்வழி யிருப்பத்
தூண்டு சோதி தோற்றிய தொன்மையும்
அந்தண னாகி யாண்டுகொண் டருளி
இந்திர ஞாலங் காட்டிய இயல்பும்
மதுரைப் பெருநன் மாநக ரிருந்து
குதிரைச் சேவக னாகிய கொள்கையும்
(கீர்த்தித் திருவகவல்).

நரியைக் குதிரையாக்கிய நன்மையும் என்று பின் வருவதினின்று அதனைப் பிரித்த ஏது புலப்படவில்லை. பாண்டியனுக்குக் குதிரை விற்றுப் பொன்னைப் பெற வில்லை யென்று குறித்தது போலத் தோன்றுகின்றது. இதன் பின் அந்தணனாய்க் கடவுள் ஆண்டுகொண்டன ரென் றுரைத்ததும், பின்னும் ஒருமுறை மதுரையில் இருந்து குதிரைச் சேவகனாயினார் என்றதும் முறைப் பிறழ்வோ அன்றிப் புராணகதைகள் சிறிது பொருந்தா என்று காட்டுவனவோ ? இன்னும்,

ஞால மிகப்பரிமேற் கொண்டு நமைபாண்டான்
(திருப்பொன்னூசல்)

வெள்ளைக் கலிங்கத்தர் வெண்திரு முண்டத்தர்
பள்ளிக் குப்பாயத்தர் அன்னே யென்னும்
பள்ளிக் குப்பாயத்தர் பாய்பரி மேற்கொண்டென்
உள்ளங் கவர்வரால் அன்னே யென்னும் (அன்னைப்பத்து)

பரிமேற் கொண்ட சேவகனார் (திருப்பாண்டிப் பதிகம்)

கழுக்கடை கைப்பிடித்துக்
குதிரையின் மேல்வந்து கூடிடுமே ற்குடி கேடுகண்டீர் (ஷை)

நரிகளெல்லாம்
பரிமேற்கொண்ட பாண்டியனார் (ஷை)

பெருங்குதிரை யாக்கியவா றன்றேயுன் பேரருளே
(திருவேசறவு)

சிந்தனை செய்தடி யோங்க ளுய்ய
ஆடை லமர்ந்த பரிமாவேறி
ஐயன் பெருந்துறை யாதியந்நாள்
ஏடர் களையெங்கும் ஆண்டுகொண்ட
இயல்பறி வார் (திருவார்த்தை)

நரியைக் குதிரைப் பரியாக்கி
ஞாலமெல்லாம் நிகழ்வித்துப்
பெரிய தென்னன் மதுரையெல்லாம்
பிச்சதேற்றும் பெருந்துறையாய் (ஆனந்தமாலை)

என்பனவாதி வாக்கியங்களும் உள்ளன. 'வெள்ளைச் கலிங்கத்தர்' என்னும் வாக்கியம் சிவபெருமான் பரி மேற் கொண்ட கோலத்தைத் தெரிவித்தது போலும். 'கழுக்கடை கைப்பிடித்து' என்றதும் அது.

பரிகள் மீண்டும் முன்போல நரிவடிவை யடைந் தன என்னுங் கதைக்கு ஆதாரம் திருவாசகத்தில்லை.

சிவபெருமான் பிட்டு வாணிச்சிக்கு ஆளாக மண் சுமந்து பிரம்படிபட்ட கதைக்குப் பிரமாணம் திருவாசகத்தில் உண்டு:

ஆங்கது தன்னி லடியவட் காகப்
பாங்காய் மண்சுமந் தருளிய பரிசும் (கீர்த்தித் திருவகவல்)

மண்சுமந்து கூலிகொண் டக்கோவான் மொத்துண்டு
புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்கா ணம்மானாய்
(திருவம்மானை)

மண்பால் மதுரையிற் பிட்டமுது செய்தருளித்
தண்டாலே பாண்டியன் றன்னைப் பணிகொண்ட
புண்பாடல் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ (திருப்பூவல்லி)

பிட்டு நேர்பட மண்சு மந்த
பெருந்து றைப்பெரும் பித்தனே
(திருக்கழுக்குன்றப்பதிகம்).

இவ்வாறு மாணிக்கவாசகர் சரித்திரத்தில் காணும் முக்கிய கதைகளுக்குத் திருவாசகத்தில் ஆதாரம இருப்பதாக ஏற்படுகின்றது. கதைகளின் விஸ்தாரங்கள் புராணமுடையார் மனோதருமப்படி விரித்தனவாகும். மாணிக்கவாசகர் மதுரைக்கடுத்த இடங்களில் இளமையில் தங்கி, திருப்பெருந்துறையில் சிவபெருமானால் உபதேசிக்கப் பெற்று, பாண்டியனுக்குக் குதிரைகள் ஒப்பித்தற்காக நரியைப் பரியாக்கிய திருவிளையாடலைச் சிவனால் நிகழ்வித்து, தமக்கு அரசனால் நேர்ந்த துன்பந் தீரும்படி மண் சுமந்த திருவிளையாடலையும் அக் கடவுளாலேயே நிகழ்வித்து, பின் பல தலங்களைத் தரிசித்துச் சிதம்பரத்துச் சென்று முத்தி பெற்றார் என்பதே அவர் சரித்திரமாகும். அவர் முதன்மந்திரியா யிருந்தாரென்று சொல்வதற்கு ஆதாரமில்லையாயினும் அவருக்கும் பாண்டியனுக்கும் சம்பந்தமிருந்த தென்பதற்குத் தடையில்லை. திருவாசகத்தில் பாண்டியனது பிரஸ்தாபம் வந்துள்ளது:

நரகொடு சுவர்க்கம் நானிலம் புகாமற்
பரகதி பாண்டியற் கருளினை போற்றி

(போற்றித் திருவகவல்)

பாண்டியற் காரமு தா மொருவரை (திருப்பாண்டிப் பதிகம்) அவர் பல தலங்களுக்குச் சென்றமை திருவாசகப் பதிகங்களினின்றே புலப்படும். நீத்தல் விண்ணப்பம் திருவுத்தரகோச மங்கையில் அவர் அருளிச்செய்ததாகக் கூறப்பட்டிருக்கிறது. ஆயினும் அந்தத் தலத்துப் பிரஸ்தாபம் இதர பதிகங்களிலும் வந்துள்ளது. தில்லையிற் பாடிய திருத்தசாங்கத்தில் நாடு தென் பாண்டியென்றும் ஊர் உத்தரகோச மங்கையென்றும்

உரைக்கப்பட்டது. திருவெம்பாவையும் திருவம்மானையும் திருவண்ணாமலையிற் பாடியதாகக் கூறப்பட்டிருக்கின்றன. பிடித்தபத்து திருத்தோணிபுரத்தில் அருளிச்செய்யப்பட்டது. திருப்புலம்பல் அருளிசசெய்தது திருவாரூரில். திருக்கழுக்குன்றப்பதிகம் திருக்கழுக்குன்றத்திலே அருளிச்செய்யப்பட்டது. இப் பதிகங்களும் மேல் திருப்பெருந்துறையிற் பாடியதாகக் கூறிய திருப்பாடல்களும் ஒழிந்த மூன்று அகவல்களும திருப்பொற்சுண்ணம் முதல் அச்சோப்பதிகம் ஈறுக உள்ள இருபத்திரண்டு பதிகங்களும் தில்லையில் அருளிச்செய்யப்பட்டன. இத்தனை திருப்பாடல்கள் தில்லையில் அருளிச்செய்ததாக இருத்தலால் மாணிக்கவாசகர் தம் இறுதிக்காலத்தை அத் தலத்திலே கழித்தாரென்னும் கதை ஒக்கும்.

மற்று, தலங்களின் பெயர்கள் பல திருவாசகத்தில ஓதப்பட்டுள்ளன. மகேந்திரமலை, கல்லாடம், மஞசப்பள்ளி, நந்தம்பாடி, வேலம்புத்தூர், சாந்தம் புத்தூர், பூவணம, பூவலம், பட்டமங்கை, ஓரியூர், பாண்டூர், தேவூர், இடைமருது, ஏகம்பம், திருவாஞசியம், கடபூர், ஈங்கோய்மலை, ஐயாறு, துருத்தி, திருப்பனையூர், புறமபயம், குற்றாலம் முதலியன கீர்த்தித் திருவகவலில் காணப்படுவன.

## மாணிக்கவாசகர் வயசு, திருநக்ஷத்திரம்

மாணிக்கவாசகர் சரித்திரங்கூற எழுந்த புராணங்களி லொன்றும் அவர் இன்னகாலத்திருந்தாரென்றுதல் அவர் இத்தனையாண்டு பூவுலகில் வாழ்ந்தாரென்றுதல் உரைத்திலது. அவர்கால ஆராய்ச்சி மேல் எடுத்துக்கொள்ளப்படும்.

அப்பருக் கெண்பத்தொன் றருள்வாத வூரருக்குச்
செப்பிய நாலெட்டிற் றெய்வீகம்—இப்புவியிற்
சுந்தரர்க்கு மூவாறு தொன்ஞான சம்பந்தர்க்
கிந்தம் பதினா றறி

என்னும் வெண்பா மாணிக்கவாசகர் முப்பத்திரண்டா மாண்டில் முத்திபெற்றனர் என்றுரைத்தது. சைவ சமயிகளுக்கு அடியார்கள் இருந்த காலம் தெரிந்து கொள்ளல் அத்துணை யவசியமன்று, அவர்கள் முத்தி பெற்ற மாச நக்ஷத்திரங்கள் அதி முக்கியமாம். சாமானியர் இறந்த தினத்தைச் சிராத்த தினமென்று ஆண்டுக்கொரு முறை கொண்டாடுதல் போலவே, அடியார்கள் முத்திபெற்றநாளைக் குருபூஜைநாளென்று அன்று மகேசுரபூஜையாதி செய்து கொண்டாடுதல் வழக்கம். ஆதலால் அடியார்கள் இருந்த காலம் சந்தேகத்திற் கிடமாயிருப்பினும் அவர்கள் அடைந்த நாள் நிச்சயமாயிருக்கும்.

சித்திரைச் சதய மப்பர் சிறந்தவை காசி மூலம்
அத்தரைப் பணிசம் பந்தர் ஆனிமா மகத்தில் அந்த
முத்தமிழ் வாத வூரர் முதியநல் ஆடி தன்னில்
சுத்தமாஞ் சோதி நாளிற் சுந்தரர் கைலை சேர்ந்தார்.

என்னும் விருத்தம் மாணிக்கவாசகர் ஆனிமாசம் மகநக்ஷத்திரத்தில் முத்திபெற்றனரென்று குறித்தது.

## தேவாரப் பிரமாணம்

இனி, நரி குதிரையானதற்கும், மண் சுமந்ததற்கும் பிரமாணமாகத் திருநாவுக்கரசு நாயனார் தேவாரத்தில் காணப்படும்

நரியைக் குதிரை செய்வானும் (திருவாரூர்)

மணியார் வைகைத்
திருக்கோட்டி னின்றதோர் திறமுந் தோன்றும்
(திருப்பூவணம்)

என்னும் வாக்கியங்களை முறையே காட்டுவதுமுண்டு. அவை பிரமாணமாயின் மாணிக்கவாசகர்க்குப் பின் இருந்தவர் திருநாவுக்கரசு நாயனாரென் றேற்படும். இஃது அவர் காலமாராயும் பொழுது ஆராயப்படும்.

## மண்டோதரி கதை

திருவுத்தரகோசமங்கைப் புராணத்து மண்டோதரி பிரஸ்தாபம் வந்ததன்றோ! திருவாசகத்தில்

ஆர்கலி சூழ்தென் னிலங்கை அழகமர் வண்டோ தரிக்குப்
பேரரு ளின்ப மளித்த பெருந்துறை மேய பிரானை
(குயிற்பத்து)

உந்து திரைக்கடலைக் கடந்தன் றோங்குமதி லிலங்கையதனிற்
பந்தணை மெல்விரலாட் கருளும் பரிசறிவார் எம்பிரா னாவாரே
(திருவார்த்தை)

என்பன அதற்குப் பிரமாணங்களாம்.

## கண்ணப்பர், சண்டேசுரர்

மாணிக்கவாசகர் பழவடியாரைப் பொதுப்பட வணங்கியதோடு கண்ணப்ப நாயனாரையும் சண்டேசுர நாயனாரையும் அவர்கள் பெருமையைக் கூறி வணங்கினர்.

கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை கண்டபின்
(திருக்கோத்தும்பி)

பொருட்பற்றிச் செய்கின்ற பூசனைகள் போல்விளங்கச
செருப்புற்ற சீரடி வாய்க்கலசம் ஊனமுதம்
விருப்புற்று வேடனார் சேடறிய மெய்குளிர்ந்தங
கருட்பெற்று நின்றவா தோணோக்க மாடாமோ
(திருத்தோணோக்கம்)

என்பன கண்ணப்ப நாயனாரையும்

தீதில்லை மாணி சிவகருமஞ் சிதைத்தானைச்
சாதியும் வேதியன் தாதைதனைத் தாளிரண்டுஞ்
சேதிப்ப ஈசன் திருவருளால் தேவர்தொழப்
பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம் (ஏ)

என்பது சண்டேசுர நாயனாரையும் தெளிவாகக் குறித்தன.

வரகுணபாண்டியன், மதுரைச் சங்கம்

திருக்கோவையாரில் மாணிக்கவாசகர்,

வரகுணனாந் தென்னவ னேத்துசிற் றம்பலத்தான் (306)

என்றும்,

மயலோங் கிருங்களி யானை வரகுணன் வெற்பின்வைத்த
கயலோங் கிருஞ்சிலை கொண்டு (327)

என்றும் வரகுண பாண்டியனைப் பற்றிக் கூறினார்.

உயர்மதிற் கூடலி னாய்ந்தவொண் டீந்தமிழின்
றுறைவாய் நுழைந்தனையோ (20)

என்று முற்காலத்து மதுரைச் சங்கத்துத் தமிழாராய்ந்த வரலாற்றையுங் குறிப்பித்தார்.

மாணிக்கவாசகர் பெருமை

மாணிக்கவாசகர் சைவசமய குரவர் நால்வருள் ஒருவரென்பதும், அவர் 'அறிவாற் சிவனே என்பது திண்ணம்' என்று இலக்கணக் கொத்துடைய சுவாமிநாத தேசிகர் வியந்தாரென்பதும் முன்னமே யுரைக்கப்பட்டன. அவர்க்குப் பின் வந்த சைவப் பெரியாருள் அவரைத் துதியாதார் யாவர்? பட்டினத்தடிகள் திருவிடை மருதூர் மும்மணிக் கோவையில்

வித்தகப் பாடன் முத்திறத் தடியருந்
திருந்திய அன்பிற் பெருந்துறைப் பிள்ளையும்

என்று அவரை மூவரோடு சேர்த்து வாழ்த்தினர். நம்பியாண்டார் நம்பிகள் சைவத் திருமுறை வகுத்த

போது மூவர் திருமுறைகளையும் ஏழு திருமுறைகளாக் கித் திருவாசகம் திருக்கோவையாரை எட்டாந்திருமுறை யாக வகுத்தார். பிற்காலத்துச் சிவப்பிரகாச சுவாமி கள் நால்வர் நான்மணி மாலை என்னும் பிரபந்தத்தில் மாணிக்கவாசகரைப் புகழ்ந்த விதம் அதனை வாசித் தன்றித் தெளியலாகாது. அதில் சுவாமிகள் திருவாச கம் வேதத்தினுஞ் சிறந்த தென்றும், அஃது எல்லா வருணத்தாராலும் ஓதப்படுதலிற் பொற்கலம் நிகர்க்கு மென்றும், அதனை ஓதுவோர் மனங்கரைந் தன்ப ராகுவரென்றும் சொல்லினர்.

செய்ய வார்சடைத் தெய்வ சிகாமணி
பாதம் போற்றும் வாதவூ ரன்ப
பாவெனப் படுவ துன்பாட்டுப்
பூவெனப் படுவது பொறிவாழ் பூவே

என்றது அந் நூலி னிறுதிப் பாட்டு. 'பாவெனப்படுவ துன்பாட்டு' என்றது திருவாசகத்தின் பெருமையை நன்கு உணர்த்தியது. பெரியார் பலர் அருளிய இதர வாசகங்களும் உளவாயிருப்ப, மாணிக்கவாசகர் திருப் பாட்டுக்கே 'திருவாசகம்' என்னும் பெயர் வந்த தன்றோ

சில ஆண்டுகள் முன்னிருந்த திருவனந்தைச் சுந்தரம் பிள்ளையும் தமது மனோன்மணீயம் என்னும் நாடகநூற் பாயிரத்தில் திருவாசகத்தின் பெருமையை

மனங்கரைத்து மலங்கெடுக்கும் வாசகத்தின் மாண்டோர்கள்
கனஞ்சடையென் றருவேற்றிக் கண்மூடிக் கதறுவரோ

என்று குறிக்குமுகத்தால் வேததினும் திருவாசகம் உயர்ந்ததென் றுரைத்தார்.

மாணிக்கவாசகரை 'மணிவாசகர்' என்றும் வழங்குவர். 'திருவாதவூரர்' என்னும் பெயர் அவர்க்

குண்மை முன்னமே உரைக்கப்பட்டது. அவரைத் ‘திருவாதவூரடிகள்’ என்றும் ‘அடிகள்’ என்றும் வழங்குவது முண்டு. ‘அடிகள்’ தவப்பெரியார்க்கு வழங்கும் பெயர். இன்னும் நால்வர் குரவர்க்கும் அவரியற் பெயரோடு ஆளுடைய பிள்ளையார், ஆளுடைய அரசுகள், ஆளுடைய நம்பிகள், ஆளுடைய அடிகள் என்றும் பெயர்கள் வழங்குதலுண்டாகலின், மாணிக்கவாசகர்க்கு ‘ஆளுடைய அடிகள்’ என்னும் பெயருண்மையும் அறியற் பாலது.

## மாணிக்கவாசகர் காலம்

மாணிக்கவாசகர் கி. பி. முதல் நூற்றுண்டாகிய கடைச்சங்க காலத்தை யடுத்திருந்தா ரென்பாரும், அக்காலத்துக்கு இரண்டு மூன்று நூற்றுண்டுகளின் பின் இருந்தா ரென்பாரும், சுந்தரமூர்த்தி நாயனுருடைய காலமாகிய ஒன்பதாம் நூற்றுண்டுக்குப் பின் இருந்தா ரென்பாரும் எனக் கால வாராய்ச்சி செய்வார் பல கொள்கை யுடையராயினர். கடைச் சங்கமிருந்த காலம் முதல் நூற்றுண்டென்பதை மறுப்பார் இக்காலத்துச் சிலர் தோன்றியிருக்கின்றனர். ஆதலால் கடைச் சங்கத்தோடு மாணிக்க வாசகரைப் பிணைத்தல் பொருந்தாதாகும். அன்றியும் திருக்கோவையாரிலிருந்து முன் எடுத்துக் காட்டப்பட்ட வாக்கியம் அவர் சங்க காலத்துக்குப் பின் இருந்தாரென்பதைத் தெளிவுபடுத்தும். இனி, அவர் நாலாம் நூற்றுண்டிலிருந்தாரென்பார், ‘அவர் நூல்களின் பாஷை நடை பழைமையா யிருக்கின்றது, அவர் தேவார முதலிய திருமுறை யருளினார்க்கெல்லாம முன் இருந்தவராவர்’ என்றுரைக்கின்றனர். மற்று, தேவார ஆசிரியர்க்குப்

பின்னேதான் அவர் இருந்தார் என்றுரைப்போர், 'நால்வர் என்றுவழங்கும்பொழுது மாணிக்கவாசகரை இறுதியில்வைத்து வழங்குகின்றனர், அவர் திருமுறையும் மூவர் திருமுறைகளாகிய ஏழு திருமுறைகட்கும் பின்னே எட்டாந் திருமுறையாக வகுக்கப்பட்டது' என்பர். இதற்கு மாறாக, 'திருமுறை வகுப்புப் பிரமாணமாகாது; சரியை கிரியை யாதிகளையும் கூறுதலால் வேதங்களோடு சமத்துவம் பெற்றுத் தமிழ் வேத மெனப்படும் தேவாரத்தை முன் வைத்தலே நெறி, ஞானபாத மொன்றையே விரித்துக் கூறி வேதாந்தத்தையே நிகர்க்கும் திருவாசகம் பெருமை மிகுதியால் அதன் பின் வைக்கப்பட்டது, இதுவும் தமிழ் வேதமெனவே சொல்லப்படினும் வேதாந்தமே யாகும்' என்றுரைப்பர் வேறு கொள்கையுடையார். மாணிக்கவாசகர் சுந்தரமூர்த்தி நாயனருக்கு முன் இருந்தவராயின் அவரை இவர் அருளிய திருத்தொண்டத் தொகையில் கூறாது விட்டதென் என்பார்க்கு மாணிக்கவாசகர் சிவனே யாயினு ராகலின் அடியார்களோடுவைத் தெண்ணத்தக்கவ ரல்லர் என்றுரைப்பர் அன்னூர். திருத்தொண்டத் தொகையில் அவர் பெயர் வராது போகவே நம்பியாண்டார் நம்பிகள் அருளிய திருத்தொண்டர் திருவந்தாதியிலும் சேக்கிழார் அருளிய திருத்தொண்டர் புராணத்தும் வாரா தொழிந்தது. இன்னும், 'மாணிக்கவாசகர் வீரசைவ சமயத்தினர், அவர் திருவாசகத்தில்

இறைவனே நீயென் னுடலிடங் கொண்டாய்
(கோயிற்றிருப்பதிகம்)

என்றும்,

எந்தையே யீசா வுடலிடங் கொண்டாய் (ஷை)

என்றுங் கூறலே அதற்குச் சான்று' என்றும், 'சைவ வீரசைவ அடியார்களைப்பற்றி யுரைக்கும் சென்னபசவ புராணத்தில் வீரசைவ அடியார்களைப்பற்றி யுரைக்கும் பகுதியில் மாணிக்கைய ரென்றொரு பெயர் வருகின்றது, அது மாணிக்கவாசகரே. ஆதலால் அவர் வீர சைவரென்பது நிச்சயம், சைவ அடியார்கள் பெயரைக் கூற வெழுந்த திருத்தொண்டத் தொகை அவர் பெயரைக் கூறுதொழிந்தது இயல்புதானே' என்று முரைப்பர் சிலர். மாணிக்கவாசகர் சுந்தரமூர்த்தி நாயனர்க்குப் பின் இருந்தாரென் றுரைப்போர்க்கு முக்கிய ஆதாரமாவது அவர் திருக்கோவையாரில் வரகுண பாண்டியன் பெயரை யுரைப்பதே யாகும். வரகுண பாண்டியன் கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டி லிருந்தானென்று சிலாசாஸந ஆராய்ச்சியா லேற்படுகிறது. ஆதலால் அவன் காலத்திலேயோ அவனுக்குச் சற்றுப் பின்னோ அவர் இருந்திருத்தல் வேண்டுமென்பது அன்னார் சித்தாந்தம்.

இங்ஙனம் கொள்கைகள் மாறுபட்டிருப்பினும் உண்மை மாணிக்கவாசகர் சுந்தரமூர்த்தி நாயனர்க்குப் பின் இருந்தவரென் றுரைப்பதே யென்று தோன்றுகிறது. அதற்கு நியாயங்கள் வருமாறு:

1. சைவசமய குரவர் நால்வருள் மாணிக்கவாசகரை இறுதியில் வைத்தல். சிலர் சொல்லுவது போல அவர் சிவனேடொப்பவர், எனின் அவரை முதலில் வைக்கவேண்டும், அல்லது அவரை ஆசாரியராக எண்ணப்படாது. மாணிக்கவாசகர் முற்பிறப்பைக் கூறும் புராணங்கள் அவரைக் கணநாதரென்றும்

கணநாதருள் தலைமைபெற்றவரென்றுமே சொல்லிப் போந்தன. திருஞானசம்பந்தரைச் சிவபெருமானுடைய செல்வப்பிள்ளை யென்றும் சுப்பிரமணியக் கடவுளுடைய அவதாரமென்றும் புராண முதலியன கூறுதல் பிரசித்தம். அன்றியும் மாணிக்கவாசகர் தயருழந்ததுபோல அவர் தயருழந்தா ரென்று புராணத்தி லெங்கும் படிக்கப்படவில்லை. திருநாவுக்கரசு நாயனாரும் கயிலாயத்திலிருந்த வாகீசமுனிவரின் அவதார மென்பர். சுந்தரமூர்த்தி நாயனார் சிவபெருமான் தம் அழகைக் கண்ணாடியிற் பார்த்தபொழுது அவ்வழகே மூர்த்தியாய் வெளிப்போந்தவர் என்பது புராணங்கூறுவது. ஆதலால் நால்வருள்ளும் ஏற்றத்தாழ்வு கூறுவதற்கில்லை. திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரையரும் ஒரேகாலத்தவர். சுந்தரர் பின் வந்தவர். ஆதலால் மூவருள் முறை கிரமமாயிருத்தல் போலவே மாணிக்கவாசகர் அவர்க்கெல்லாம்பின்னோராய் நாலாவதாகவைத் தெண்ணப்பட்டார் என்றலே பொருத்த முடைத்து.

2. சுந்தரமூர்த்தி நாயனார் தமது திருத்தொண்டத் தொகையில் மாணிக்கவாசகர் பெயரைக் கூறாமை. இதற்கு உரைக்கும் சமாதானங்கள் ஏற்பன வல்ல. சுந்தரர் தம் காலத்தும் தம் காலத்துக்கு முன்னும் இருந்த அடியார்களனைவரையும் பெயரால் எடுத்துரைத்துள்ளார். பெயர் புலப்படாதாரைத் தொகையடியா ரென்று கூறியுள்ளார். மாணிக்கவாசகரைப் பெயர் புலப்படாதவரென்றல் பொருந்தாது. ஆதலால் அவர் சுந்தரர்க்குப் பின் இருந்தவரென்றலே பொருந்துவது. மற்று, அவர் வீரசைவ அடியாராதலால் திருத்தொண்டத் தொகையில் அவர் பெயர்

வந்தில தென்பதும் அமையாது. துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் வீரசைவ சமயாசாரியராக எண்ணப்படுபவர். அவர் அருளிய பிரபுலிங்கலீலை யில் கடவுளர்க்கு வணக்கஞ்சொல்லிய பின், அல்ல மாப் பிரபு தேவர், வசவேசர், சென்னவசவேசர், மடிவாலமாச்சையர் என்னும் வீரசைவப் பெரியார்க் குத் தனித்தனி வணக்கஞ்சொல்லி, சைவசமயாசாரி யர் நால்வருக்கும் ஒரு கவி சொல்லி, பின் சிவனடி யார்க்கு ஒரு கவி சொல்லினர். இவ்விறுதிக் கவியில் அடியார் என்றும் சரணரென்றும் இருவகுப்பினரைப் பற்றிச் சொல்லினர். அடியார் சைவ சமயத்தினர் சரணர் வீரசைவ சமயத்தினர். மாணிக்கவாசகரைச் சைவ சமயாசாரிய ரென்றே தெளிவாகக் கூறுத லால் அப்பெரியா ரபிப்பிராயம் மாணிக்கையருக்கும் மாணிக்கவாசகர்க்கும் யாதொரு சம்பந்தமு மில்லை யென்பதே. மாணிக்கவாசகரைச் சைவசமயிகள் நால் வர் பெருங்குரவருள் ஒருவராய்க் கொள்ள, வீரசைவ சமயிகள் மாணிக்கையரை அடியாருள் ஒருவராகவே கொள்வர். ஆதலால் மாணிக்கவாசகர் வீர சைவ ரல்லர்; அவர் 'என் உடலிடங்கொண்டாய்' என்ற தும் வீரசைவாசாரத்தைக் குறித்தன்று.

3. திருக்கோவையாரில் ஒன்பதாம் நூற்றாண்டி லிருந்த வரகுணபாண்டியன் பிரஸ்தாபம் வருதல். வரகுணபாண்டியன் என்னும் பெயர்பூண்ட இரண்டு மன்னரும் ஒன்பதாம் நூற்றாண்டுக்கு முன் இருந்தவ ரல்லரென்றேற்படுதலாலும், அதற்கு முன் வரகுணப் பெயர்மன்னன் ஒருவன் இருந்தானென்றேற்படாமை யாலும், மாணிக்கவாசகர் ஒன்பதாம் நூற்றாண்டி னிறுதியிலாதல் பத்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தி

லாதல் இருந்தாரென்றலே அமைவுடைத்து. திரு விடைமருதூர் மும்மணிக்கோவையில் மாணிக்கவாச கரைப் பெருந்துறைப்பிள்ளை யென்று தேவார ஆசிரி யரை யடுத்து உரைத்த பட்டினத்துப் பிள்ளையாரும் அவ்வகவலிலேயே வரகுணபாண்டியன் அருஞ்செயல் பலவும் கூறி,

பெரிய அன்பின் வரகுண தேவரும்

என்று அவனைப் புகழ்ந்தார். பட்டினத்தடிகள் பிர பந்தம் நம்பியாண்டார் நம்பிகள் தொகுத்தருளிய திருமுறைகளுட் சேர்ந்ததாகலானும், நம்பியாண்டார் நம்பிகள் காலம் பதினொராம் நூற்றாண்டி னிடைக்கால மென்பது பிரசித்தமாகலானும் பட்டினத்தடிகள் காலம் பத்தாம் நூற்றாண்டாகும் அவர்க்குப் பின் மாணிக்கவாசகர் இருந்திருத்தல் கூடாது.

4. தேவாரமுடையார் பெயர்களும் மற்றை நாயன்மார் சிலர் பெயர்களும் பதினொராம் நூற்றாண் டுக்கு முற்பட்ட தென்னாட்டுச் சிலாசாஸநங்களிற் காணப்படுதலும் மாணிக்கவாசகர் பெயர் காணப் படாமையும். இது நன்கு கவனிக்கவேண்டிய ஏது. மன்னரும் செல்வரும் தான தருமங்கள் செய்த பொழுது தங் காலத்துக்கு முன்னிருந்த பெரியார் பெயர்களையும் தங் காலத்துப் பெரியார் பெயர்களையும் அடிக்கடி வழங்கியிருக்கின்றனர். தேவாரமோதுதற் கென்று ஏற்பாடுகள் செய்யப்பட்டதாகச் சிலா சாஸ நங்கள் கூறுகின்றன. மாணிக்கவாசகர் முற்பட்ட வரா யிருந்து அவர் அருளிய திருவாசகத்தின் பெருமை புலப்பட்டதாயிருந்ததாயின், இவ்விதமாக அவர் பெயர் ஒரு சாஸநத்திலும் தோன்றுதிராது.

தேவாரப் பிரமாணம்

இனி, திருநாவுக்கரசு நாயனார் தேவாரத்தில் 'நரியைக் குதிரை செய்வானும்' என வருதலால் மாணிக்கவாசகர் அவர்க்கு முற்பட்டவர் என்று சொல்வாருண்டென்று முன்னமே குறிக்கப்பட்டது. அத் தேவாரத்திலேயே, 'மணியார் வைகைத் திருக் கோட்டி னின்றதோர் திறமுந் தோன்றும்' என்றொரு வாக்கியம் மாணிக்கவாசகர்க்காகச் சிவபெருமான் மண்சுமந்த வரலாற்றைக் குறிக்குமென்று அவரே சொல்வரென்பதும் குறித்ததொன்றே. 'மார்க்கண்டர், அர்ச்சுனன், தருமி முதலியோர்க்காகச் சிவபெருமான் செய்த திருவிளையாடல்களைப் பெயர்கூறிக் குறிப்பவர் மாணிக்கவாசகர் பெயரை ஒருவழியும் குறியாமையால், அது மாணிக்கவாசகர்க்கு மிக முற்பட்ட காலத்தில் நிகழ்ந்த திருவிளையாடல், அவர் திருவாசகத்து இவ்வற்புதத்தை யுரைக்குமாறும் அஃது அவர்க்காக நிகழ்த்திய தன்றெனக் காட்டும்' என்று கூறுவர் மாணிக்கவாசகர் திருநாவுக்கரசு நாயனார்க்குப் பிற்பட்டவர் என்றுரைப்போர். திருவாசக வாக்கியங்களை நோக்குவோமாயின், மாணிக்கவாசகர் சிவபெருமான் தமக்கு ஞானோபதேசஞ் செய்த வரலாற்றையும் தம்மைத் தில்லைக்கு வருமாறு பணித்து அடியார்களோடு மறைந்த வரலாற்றையும் தம்மொடு புணர்த்துக் கூறுவதுபோல, நரி பரியாக்கியதையும் மண்சுமந்ததையும் கூறினாரல்லர். திருவார்த்தையில் 'அடியோங்களுய்ய' என்பதே சிறிது அவர்க்குக் கதையோடு பொருத்தமுண் டென்பதைக் காட்டும்; பொதுவாக அடியார்கள் என்று வைத்துக்கொண்டால் அப் பொருத்தந்தானும் கெடுகின்றது. ஆயின்

அவர் திருவாசகத்தில் கூறின அளவு அவ் வற்புதங் களைத் தேவாரமுடையார் அறிந்திருந்தனராயிற் கூறாத தென்? மாணிக்கவாசகர்க்கு மிக முற்பட்டகாலத்து அவை நிகழ்ந்து, தேவாரமுடையாரும் அவர்க்கு முன் இருந்தனராயின், அவர்களுக்கு அவை தெரிந்திருக்க வேண்டும். எத்தனையோ கதைகள் தேவாரத்தில் சொல்லப்படுகின்றனவே ஆதலால் இது நமக்குக் கிட்டியுள்ள ஆதாரங்களைக்கொண்டு நிச்சயிக்கத் தக்க தன்று.

மற்று, மாணிக்கவாசகர் தேவார முடையார்க் குப் பிற்பட்டவராயின் அவர்களைப் பற்றி ஏன் கூறா தொழிந்தனர்? கண்ணப்பரையும் சண்டேசுரரையும் திருவாசகத்திற் குறித்தனரே பன்னிரு திருமுறைப் பதிப்பில் திருவாசகத்திற்குத் திரிசொற் பொருள் விளக்க மெழுதியவர் 'செந்நாவலர் பரசும் புகழ்' (உயிருண்ணிப் பத்து) என்ற விடத்துச் செந்நாவலர் திருநெறித் தேவார மருளிச் செய்தவர் என்றெழுதி வைத்தார். 'பண்சுமந்த பாடல்' (திருவம்மானை) தேவாரத்தையே குறித்ததுபோலும். 'கழுமல மத னிற் காட்சி கொடுத்தும' என்றது திருஞான சம்பந் தர்க்கு உமாபதி காட்சி கொடுத்ததைக் குறித்ததோ? 'தேனமர் சோலைத் திருவாரூரின் ஞானந்தன்னை நல் கிய' தன்மையும்' என்றது சுந்தரமூர்த்திகளைச் சிவ பெருமான் ஆட்கொண்ட வரலாற்றைக் குறிக்குமென் றுருமுளர்.

தேவாரத்திற்கும் திருவாசகத்திற்கும் வாக்கிய ஒற்றுமை ஏகதேசத்துக் காணப்படுகின்றது. 'குற்றா லத்துறை கூத்தன்' என்னுந் தேவாரத்தையும்

'குற்றாலத்தெங் கூத்தா' என்றும் 'குற்றாலத் தமர்ந் துறையுங் கூத்தா' என்றும் வரும் திருவாசகத்தையும், 'கூத்தர் குற்றாலம்' என்னும் திருக்கோவையாரையும் ஒப்பு நோக்குக. 'அன்னம் பாலிக்குந் தில்லை' என்னுந் தேவாரத்தையும், 'அன்னந் திளைக்கு மணிதில்லை' என்னுந் திருவாசகத்தையும் நோக்குக. அஃதியல்பே. அதனால் இவர் முற்பட்டவர் இவர் பிற்பட்டவர் என்று துணிந் துரைத்தற் கில்லை.

## திருவாசகம்

மாணிக்கவாசகர் அருளிய நூல்கள் திருவாசகமும் திருக்கோவையாரும் என்பது இதற்கு முன் பல முறை கூறப்பட்டதே. அவற்றின் இயல்பென்ன? திருவாசகமென்பது ஒரு பெரியார் செய்த தோத்திரக் கொத்துப் போன்ற நூல். நமக்குக் கிட்டி யிருக்கும் நூலிலுள்ள பகுதிகள் பாடிய முறைபற்றியாதல், தல முறை பற்றி யாதல், பாமுறை பற்றி யாதல் வகுக்கப் படவில்லை யென்பது வெளிப்படை. அடிகள் பொன்னம்பலவருக்கு இறுதியில் ஒப்பித்த முறைபற்றி வகுக்கப்பட் டிருக்கலாம். திருவாசகத்தை ஐம்பத்தொரு பதிகங்கள் அடங்கிய திருமுறையென்றல் மரபு. அதில் நான்கு அகவல்களும், அறுநூற்றைம்பத்து மூன்று திருப்பாடல்கள் அடங்கிய நாற்பத்தேழு பாடற் றெகுதிகளும் உள்ளன. 'பதிகம்' 'பத்து' என்னுங் குறியீடுடைய தொகுதிகளில் பத்துப் பாடல்களுக்குக் குறைவாயும் அதிகமாயு மிருக்கின்றன. அவை யனைத்தும் முன் சொல்லியபடி தோத்திரங்களே. பெரும்பான்மை பாட்டுக்களைத் தனித்தனி எடுத்துப் பார்த்தாலும் பொருள் தெளிவாக விளங்

கும். பதிகங்களனைத்திற்கும் முன்னிருந்த ஆன்றோர் கருத்தின்னதென விளக்கித் திருவுள்ளக் கிடையென்றொரு விளக்கமெழுதி யுபகரித்திருக்கின்றனர். வெளித் தோற்றத்திற்கு உலக இயல்பைத் தழுவிச செய்யப்பட்ட திருவம்மானை, திருப்பொன்னூசல் திருத்தசாங்கம், குயிற்பத்து முதலியன வெல்லாம் சிவ ஸ்தோத்திரங்களே, அரும்பொருள் அமைந்தனவே.

திருவாசகத்தின் நயங்கள்

திருவாசகத்தின் இனிமையை இவ் வண்ணமென்று எடுத்துக் காட்ட இயலாது. பதந்தோறுங் காணப்படும் அதி திப்பிய குணத்தினை அனுபவித்தே அறியவேண்டும். அதன இதர நயங்களை ஒருவாறு உதாரணங்கொண்டு காட்டலாம். மாணிக்க வாசகர் பழமொழிகள் வழங்குவதில் கொஞ்சம் பிரிய முடையவர் என்று தெரிகின்றது. நீத்தல் விண்ணப்பத்தில், 'செழிகின்ற தீப்புகு விட்டிலின்', 'இருதலைக் கொள்ளியினுள் எறும்பொத்து', 'கடலினுள் நாய் நக்கியாங்கு' 'வெள்ளத்துள் நாவற்றியாங்கு', 'கொம்பரில்லாக் கொடிபோல் அலமந்தனன்', 'ஆனைவெம் போரிற்குறுந்தூறெனெ', 'மெள்ளெனவே மொய்க்கும் நெய்க்குடந்தன்னை எறும்பெனவே', 'எறும்பிடை நாங்கூழென', 'பெருநீரறச் சிறுமீன் துவண்டாங்கு', 'சுழல்வன் தயிரிற் பொருமத்தெனவே', 'பலாப்பழத் தீயினொப்பாய்' என்று வருவனவற்றை நோக்குக. பெரு நண்பினனாயவனை ஒருவன் பரிகசிப்பதுபோல மாணிக்கவாசர் நிந்தாஸ்துதியாகக் கடவுளைப் பாடியிருக்கின்றார்:

தாரகை போலுந் தலைத்தலை மாலைத் தழலரப்பூண்
வீரஎன் றன்னை விடுதிகண் டாய்விடி லென்னைமிக்கார்
ஆரடி யானென்னி னுத்தர கோசமங் கைக்கரசின்
சீரடி யாரடி யானென்று நின்னைச் சிரிப்பிப்பனே
(நீத்தல் விண்ணப்பம்)

சிரிப்பிப்பன் சீறும் பிழைப்பைத் தொழும்பையும்
ஈசற் கென்று
விரிப்பிப்பன் என்னை விடுதிகண் டாய்விடின் வெங்கரியி
னுரிப்பிச்சன் தோலுடைப் பிச்சன் நஞ் சூண்பிச்சன்
ஊர்ச்சுடுகாட்
டெரிப்பிச்சன் என்னையு மாளுடைப் பிச்சனென்
றேசுவனே (ஷை)

வேலை நஞ்சுண்
மழைதரு கண்டன் குணமிலி மானிடன் தேய்மதியன்
பழைதரு மாபரன் என்றென் றறைவன் பழிப்பினையே
(ஷை).

இறுதிச் செய்யுளிலுள்ள சிலேடையைக் கவனிக்க. மேற்கூறிய இப் பாட்டுகளிற் போலப் பரிகாசமின்றி நயமாத்திரம் தோன்றும்படி அவர் கூறிய பாட்டுக்களும் உண்டு:

நான்தனக் கன்பின்மை நானும்தா னும்அறி வோம்
தான்என்னை ஆட்கொண்ட தெல்லாருந் தாம்அறிவார்
(திருக்கோத்தும்பி)

தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச
சங்கரா ஆர்கொலோ சதுரர்
அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன் "
யாதுநீ பெற்றதொன் றென்பால்
(கோயிற்றிருப்பதிகம்).

வேறுவித நயங்களும் ஆங்காங்கே காணப்படுகின்றன:

வெளியாய் கரியாய்
பச்சைய னேசெய்ய மேனிய னே (நீத்தல் விண்ணப்பம்),
தமியேன் தனிநீக்குந் தனித்துணையே (ஷை).

பழங்கதைகள்

திருவாசகத்திலே பழங்கதைகள் பல கூறப்பட்டுள்ளன. அவற்றுட் சில மதுரையிற் சொக்கநாதர் புரிந்த திருவிளையாடல்களென்று தெரிகின்றது.

பதஞ்சலிக் கருளிய பரமநாடக (கீர்த்தித் திருவகவல்)

என்பதனால் பதஞ்சலிக்கு நடஞ் செய்ததையும்,

மீன்வலை வீசிய கானவன் (திருப்படையாட்சி)

முதலியவற்றால் வலைவீசியதையும்,

மெய்க்காட் டிட்டு வேண்டுருக் கொண்டு
தக்கானொருவ னாகிய தன்மையும் (கீர்த்தித் திருவகவல்)

என்பதனால் மெய்க்காட் டிட்டதையும்,

பட்ட மங்கையிற் பாங்கா யிருந்தங்
கட்டமாசித்தி யருளிய வதுவும் ( ஷை )

என்பதனால் அட்டமாசித்தி பகர்ந்ததையும்,

தண்ணீர்ப் பந்தர் சயம்பெற வைத்து
நன்னீர்ச் சேவக னாகிய நன்மையும் ( ஷை )

என்பதனால் தண்ணீர்ப்பந்தர் வைத்ததையும்,

பூவண மதனிற் பொலிந்திருந் தருளித்
தூவண மேனி காட்டிய தொன்மையும் ( ஷை )

என்பதனால் பொன்னனையாளுக்கு அருள்புரிந்ததையும்,

புலிமுலை புல்வாய்க் கருளினை போற்றி
(போற்றித் திருவகவல்)

என்பதனால் புலிமுலை புல்வாய்க் கருளினதையும்,

ஏனக் குருளைக் கருளினை போற்றி ( ஷை )

முதலியவற்றால் பன்றிக்குட்டிகளுக்குத் தாயானதையும்,

கருங்குருவிக்கன் றருளினை போற்றி ( ௸ )

என்பதனால் கரிக்குருவிக் கருள் புரிந்ததையும் மாணிக்கவாசகர் குறிப்பித்தார். கீர்த்தித் திருவகவலில் வரும் கதைகள் பல. அவற்றுட் சிலவே திருவிளையாடல்களென்று தெரிவன. மற்றையவும் திருவிளையாடல்களே யென்று ஊகிக்க வேண்டியிருப்பினும் அவை இன்ன நூலிற் கூறப்பட்டன வென்று தோன்றாமையால் ஒருவழியுந் துணிந் துரைத்தற்கில்லை.

திருவாசகம் சாஸ்திரமன்றாயினும் சைவசித்தாந்த உண்மைகளைத் தெளிவாக விளக்கும் ஒரு தோத்திர நூல். மாணிக்கவாசகர் அவ் வுண்மைகளை விளக்க வேண்டுமென்னும் நோக்கத்தோடு அந் நூலைச் செய்திலர். அவர் சிவபெருமானைப் பல தலங்களினும் துதிக்கும்பொழுது உண்மைகள் தாமாகவே வெளிப்பட்டுள்ளன. தேவாரத் திருமுறைகளில் அவை வெளிப்பட்டதைக் காட்டினும் இங்கு அதிக விளக்கமாக வெளிப்பட்டுள்ளன வென்று சொல்லலாம். சைவசித்தாந்த உண்மைகளென்பன என்ன? திரிபதார்த்தங்க ளெனப்படும் பதி பசு பாசங்களின் இயல்புகள், பசு பாசங் களைந்து பதியை யடையும் நெறி, பதியை யடைந்த அவசரத்தில் பசு அனுபவிக்கும் முத்தியின்பம் என்பவையே அவை. இவ் வுண்மைகளைப் பற்றித் திருவாசகத்திற் காணப்படும் வாக்கியங்களை யெல்லாம் இங்கு எடுத்தெழுதுதல் அநாவசியகம். திவ்யாகமங்களிற் கூறப்படும் உண்மைகட்கும் மாணிக்கவாசகர் கூறும் உண்மைகட்கும்

திருவாசகம் சைவசித்தாந்தக் கருத்து அமைந்தது

பேதமில்லையென்று காட்டுவதற்கு எத்துணை வேண்டுமோ அத்துணையே இங்குக் குறிக்கப்படும்.

சங்கார கர்த்தாவாகிய சிவபெருமானே தலைமைக் கடவுள் என்று கூறும் சைவசித்தாந்தக் கொள்கையை,

முழுவதும்
படைப்போற் படைக்கும் பழையோன் படைத்தவை
காப்போற் காக்குங் கடவுள் காப்பவை
காப்போன் (திருவண்டப்பகுதி)

என்று குறித்தார் மாணிக்கவாசகர். எல்லாச் சமயங்களிலும் அவரே யிருந்து முத்திகொடுப்பரென்பதனை,

அறுவகைச் சமயத் தறுவகை யோர்க்கும்
வீடுபே றாய் நின்ற விண்ணோர் பகுதி (திருவண்டப்பகுதி)

என்று குறித்தார். இனிக் கடவுளியல்பை,

பூவில் நாற்றம் போன்றுயர்ந் தெங்கும்
ஒழிவற நிறைந்து மேவிய பெருமை (திருவண்டப்பகுதி)

நள்ளுங் கீழுளும் மேலுளும் யாவுளும்
எள்ளும் எண்ணெயும் போல்நின் றெந்தையே
(திருச்சதகம் 5)

கரணங்க ளெல்லாங் கடந்துநின்ற கறைமிடற்றன்
(திருக்கோத்தும்பி)

தாயிற் பெரிதுந் தயாவுடைய தம்பெருமான்
(திருப்பூவல்லி)

அருவமு முருவமு மானாய் போற்றி
துரியமு மிறந்த சுடரே போற்றி (போற்றித் திருவகவல்)

முந்திய முதல்நடு இறுதியு மானாய் (திருப்பள்ளியெழுச்சி)

பரமன் காண்க பழையோன் காண்க
பிரமன்மால் காணாப் பெரியோன் காண்க
அற்புதன் காண்க அநேகன் காண்க
சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க
சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் காண்க

* * *

ஒருவ னென்னு மொருவன் காண்க
விரிபொழில் முழுதாய் விரிந்தோன் காண்க
அணுத்தருந் தன்மையில் ஐயோன் காண்க
இணைப்பரும் பெருமையி லீசன் காண்க
அரியதி லரிய அரியோன் காண்க

* * *

நூலுணர் வுணரா நுண்ணியோன் காண்க
மேலொடு கீழாய் விரிந்தோன் காண்க
அந்தமு மாதியு மகன்றோன் காண்க

* * *

பெண் ஆண் அலியெனும் பெற்றியன் காண்க

(திருவண்டப்பகுதி)

ஊனா யுயிராய் உணர்வாயென் னுட்கலந்து
தேனா யமுதமுமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்

* * பல்லுயிர்க்கும்

கோனாகி நின்றவா கூறுதுங்கா ணம்மானாய் (திருவம்மானை)

முன்னானை மூவர்க்கும் முற்றுமாய் முற்றுக்கும்
பின்னானை (ஷை)

ஓங்காரத்துட் பொருளை (அச்சோப்பதிகம்)

என்பனவாதி வாக்கியங்களில் விரித்தனர். சைவ சித்தாந்த சாஸ்திரங்கள் கூறுவன இன்ன குணங்களே என்பது வெளிப்படை.

கடவுளுருவத்தைச் சொல்லும்பொழுது சிவ பெருமான் கொண்ட கோலங்களையே பலமுறையும் சொல்லுகின்றார். ஓரிடத்தில் உமையோடு கூடிய கோலத்தை,

தோலுந் துகிலுங் குழையுஞ் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமுந் தொக்க வளையுமுடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ

(திருக்கோத்தும்பி)

என்று குறித்தார். சக்தியோடு சேர்ந்த சிவன் உபாசித்தற்கு மிகவும் இயைந்த மூர்த்தமென்பது ஆன்றோர் நூல்களால் விளங்குவது.

கூறுடை மங்கையுந் தானும்வந் தருளி
(கீர்த்தித்திருவகவல்)

பெண்ணாளும் பாகனை (திருவம்மானை)

மையலோர் பங்கினர் (அன்னைப்பத்து)

தையலிடங் கொண்டபிரான் (அச்சோப்பதிகம்)

என்னும் வாக்கியங்களையும் நோக்குக.

இன்னும், பரம்பொருளாயுள்ள சிவபெருமான் உயிர்கள் உய்யவேண்டிப் பல்வித கோலங்கொண்டு பல தலங்களில் கோயில்கொண் டருளுவரென்றும், திரிபுரமெரித்தல், பிரம விஷ்ணுக்களுக்குப் புலப்படா தொளித்தல், விஷ்ணுவுக்குச் சக்கரமளித்தல், தக்கன் யாகத்தில் தேவர் பலரையும் இம்சித்தல், பிரமன் தலையைக் கிள்ளல், தேவரைக் காத்தற்காகக் கடலி லெழுந்த நஞ்சுண்டல் முதலிய அற்புத காரியங்களைப் புரிந்தாரென்றும் மாணிக்கவாசகர் திருவாசகத்தில் ஆங்காங்கே காட்டியுள்ளார். பக்குவ முதிர்ச்சியில் லாத உயிர்களுக்கு இவ்விதமாகக் கடவுளைக் கண்டு வழிபடுதலே நெறியென்பது சைவசித்தாந்த சாஸ்திரங் கூறுவதே.

திரிபதார்த்தங்களுள் இரண்டாவதாகிய பசுவைப்பற்றித் திருவாசகத்தில் பிரஸ்தாபம் அதிகமில்லை. பசுபோதங் கெட்ட பெரியார் கூற்றில் பசுவியல்பு எப்படி வெளிப்படும்! ஆயினும் பசு அநாதியாக மலத்தி லழுந்திக் கிடந்ததென்றும் பின் புண்ணிய முதிர்ச்சியால் •

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத் (சிவபுராணம்)

துப் பின் திருவருள் கூட்ட இருவினை யொப்பு மலபரிபாக மெய்திச் சிவபெருமானே குருவாக வந்து உபதேசிக்கப் பெற்று முத்தியை யடையுமென்றும் தம் மேல் வைத்தே பசுவியல்பைக் காட்டி யருளினர் மாணிக்கவாசகர். போற்றித் திருவகவலில் பசு பல வகைத் துன்பங்களை யனுபவித்தும கடவுளிடத்துள்ள இடையறு அன்பினால் நன்னிலையை யடையும் விதம் விரிவாகக் கூறப்பட்டுளது. பலவிடத்தும் மாணிக்கவாசகர் தம் அனுபவங்களாகக் கூறுபவை பொதுவாக உயிர்க்கெல்லாம் பொருந்தும். அப்படிக் கூறி உயிர்களை யுய்வித்தலே பெரியார் கொள்கை.

திருவாசகத்தில் பாசத்தைப் பற்றியும அதிக பிரஸ்தாபம் வருதற்கு இடமில்லை. பாசம் கெட்ட வரலாற்றைத் தானே அடிகள் சொல்லத்தகும்.

உள்ள மலமூன்றும் மாய (பண்டாய நான்மறை)
மும்மைமல மறுவித்து (அச்சோப்பதிகம்)

முதலிய வாக்கியங்களால் சைவசித்தாந்தத்தில் கூறும் ஆணவம் கன்மம் மாயை யென்னும மும்மலங்களே குறிக்கப்பட்டன.

தொல்பிறவித் தீதோடா வண்ணம் (திருப்பொன்னூசல்) என்பது பிறவி அநாதியாக வருவதென்று குறித்தது. பாசமாகிய மலத்தினைப் பசுபாசமென்று சுட்டும் வழக்கும் திருவாசகத்தில் காணப்படுகின்றது:

பசுபாச மறுத்தானை (கண்டபத்து).

பாசவே ரறுக்கும் பழம்பொருள் தன்னை (பிடித்த பத்து)

என்ற வாக்கியம் பாசம் வேரூன்றிய மரம்போலப் பசுவைப் பற்றியுள்ள தென்றும் பதியாலேயே அதனை வெட்டிச் சாய்த்தொழிக்க முடியுமென்றும் காட்டு கின்றது. பாசத்தைப் பற்றியிருக்கும் பசுவைப் பக்குவப்படுத்தி முத்தியடைவித்தல் பதியின் தொழிலே யன்றிப் பசுவுக்குத் தன் தளையை யொழித்தல் கூடா தென்று குறிப்பித்தலால் பசுவின் குணமாகிய 'சார்ந் ததன் வண்ணமாதல்' குறிபபிக்கப் பட்டது. பாசத் தைப் பற்றியிருக்கும்பொழுது பாச மபமா யிருந்த உயிர் பதியைப் பற்றிய பொழுது பதியின் வண்ண மாய்ப் பாசங் கழலப்பெறு மென்பது சைவசித்தாந் தக் கொள்கை.

பல் பிறவியும் பிறந்திளைத்து மக்கட் பிறப்புப் பிறந்த பசு பாசத்தை யொழித்துப் பதியை யடை தற்கு வழியை நாடுவதே பதிபுண்ணியஞ் செய்த லெனப்படும் ஒரு முறைபற்றி அது சரியை கிரியை யோகம் ஞானமென நான்கு வகைப்படுமென்ப.

வருந்துவன் நின் மலர்ப்பாத மவைகாண்பான் நாயடியேன்
இருந்துநல மலர்புனையேன் ஏத்தேன் நாத் தழும்பேற
(திருச்சதகம்-2)

பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமான்நின் திருக்கோயில் தூகேன்மெழுகேன் கூத்தா
டேன் ( ௸ )

என்பனவாதி வாக்கியங்கள் சரியையைக் குறித்தன. கிரியை யோகங்களைப் பற்றித் தெளிவாகக் கூறும் வாக்கியங்கள் திருவாசகத்துக் காணக் கிடைத்தில.

மொட்டறு மலர்பறித் திறைஞ்சிப்
பத்தியாய் நினைந்து பரவுவார் தமக்குப்
பரகதி கொடுத்தருள் செய்யும் (அருட்பத்து)

என்பது கிரியையைக் குறிப்ப தென்னலாம்.

யோகத்தின பொலிவே (பிடித்த பத்து)

என்பது யோகம் ஒரு நெறியென்று காட்டியதாக லாம். பல மத ஆராய்ச்சி செய்தலும பதியியல்பாராய்தலும ஞானோபதேசம் பெறுதலும் முதலியவற்றால் சுட்டப்படும ஞானமார்க்கத்தைக் குறிக்கும் வாக்கியங்களே பெரும்பான்மையன. போற்றித் திருவகவலில் உயிர் பக்குவமடையும் நிலையைக் காட்டுமபொழுதும் இவையெல்லாம் விரித்துரைக்கப் பட்டன.

மற்று, பதியைப் பசு அடைவதும் அப் பதியின் அருளினாலன்றிக் கூடாதென்பது சைவசித்தாந்த சாஸ்திரங் கூறும் உண்மை. அதனைத் திருவாசகம்

அவனருளாலே அவன்தாள் வணங்கி (சிவபுராணம்)

அறைகூவி யாட்கொண் டருளி (திருவண்டப்பகுதி)

என்பனவாதி வாக்கியங்களாற் காட்டிற்று. மோக்ஷ சாதனங்களை ஒருமுறையால் பத்திநெறி கருமநெறி ஞானநெறி யென மூன்று வகையாகப் பகுப்பதுண்டு; அவை யெல்லாம தனித்தனி முத்தியைக் கொடுக்க வல்லன. அவற்றுள், நாரதர் சாண்டில்யராதி முனிவர்களால விஸ்தரிக்கப்பட்ட பத்திநெறியே மாந்தர் எளிதில் பற்றத்தகுவது. அதனையே மாணிக்கவாசகரும சிறந்ததாகக் கொண்டுள்ளார்.

பத்திவலையிற் படுவோன் காண்க (போற்றித்திருவகவல்)

பத்திநெறி யறிவித்து (அச்சோப்பதிகம்)

என்பனவாதி வாக்கியங்களை நோக்குக.

யானே பொய்என் நெஞ்சும் பொய்என் அன்பும்பொய்
ஆனால் வினையேன் அழுதா லுன்னைப் பெறலாமே
(திருச்சதகம் 9)

எண்ணிலேன் திருநாம மஞ்செழுத்தும் (அதிசயப்பத்து)
பாரொடு விண்ணாய்ப் பரந்தஎம் பரனே
பற்றுநான் மற்றிலேன் கண்டாய் (வாழாப்பத்து)

முதலியன வேறு சாதனங்களைக் குறித்தன. ஞானாசாரந் தலைக்கொண்டு நிற்பவர் குருலிங்க சங்கம வழிபாட்டைத் தம் கடனாகக் கொள்ளவேண்டு மென்னும் சாஸ்திர வுண்மை திருவாசகத்துப் போல எங்கும் அவ்வளவு தெளிவாகக் காட்டப்படவில்லை. எந்த இடத்து நோக்கினும் குருவாகிய சிவபெருமானைத் துதித்தலும், பல சிவஸ்தலங்களிலுமுள்ள மூர்த்திகளைத் துதித்தலும், அடியார்களைத் துதித்தலுமே காணப்படுகின்றன.

இனி, மாணிக்கவாசகர் குறித்த முத்திநிலையே சைவசித்தாந்த சாஸ்திரங்களில் முத்தி நிலையாகக் கொள்ளப்படுவது.

நவமாய செஞ்சுடர் நல்குதலும் நாம்ஒழிந்து
சிவமான வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ
(திருத்தெள்ளேணம்)

கயல்மாண்ட கண்ணிதன் பங்கனெனைக்
கலந்தாண்ட லுமே
அயல்மாண்ட டருவினைச் சுற்றமுமாண்
டவனியின்மேல்
மயல்மாண்டு மற்றுள்ள வாசகமாண்
டென்னுடைய
செயல்மாண்ட வாபாடித் தெள்ளேணங்
கொட்டாமோ ( ஷை ).

வான்கெட்டு மாருதம் மாய்ந்தழல்நீர்
மண்கெடினும்
தான்கெட்ட லின்றிச் சலிப்பறியாத்
தன்மையனுக்
கூன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட்டென்
உள்ளமும்போய்
நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங்
கொட்டாமோ ( ஷை )

சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும் அத்தன்
(திருத்தோணோக்கம்)

இன்றெனக் கருளி இருள்கடிந் துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்
நீயலாற் பிறிது மற் றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாந்
திருப்பெருந் துறையுறை சிவனே
ஒன்றும்நீ யல்லை அன்றியொன் றில்லை
ஆருன்னை அறியகிற் பாரே (கோயிற்றிருப்பதிகம்)

வேண்டேன்புகழ் வேண்டேன்செல்வம்
வேண்டேன் மண்ணும் விண்ணும்
வேண்டேன்பிறப் பிறப்புச்சிவம்
வேண்டார்தமை நாளும்
தீண்டேன்சென்று சேர்ந்தேன்மன்னு
திருப்பெருந்துறை இறைதாள்
பூண்டேன்புறம் போகேன்இனிப்
புறம்போகலொட் டேனே (உயிருண்ணிப்பத்து)

என்பனவாதி வாக்கியங்கள் முத்திநிலையைத் தெளிவாகக் காட்டுவன.

திருவாசகத்தின் பெருமை

திருவாசகத்தின் பெருமையை எல்லாரும் அறிவர். மாணிக்கவாசகர்க்குள்ள பெருமையெல்லாம் அவர் நூலுக்கும் அமையுமன்றோ. திருவாசகத்தை வேதத்தினும் மேம்பட்டதாகச் சில பெரியோர் கொண்டனரென்பது முன்னமே யுரைக்கப்பட்டது. சைவசித்தாந்த சாஸ்திரங்களைத் தமிழுலகிற் கருளிய சந்தான குரவர் நால்வரில் காலத்தாற் கடைப்பட்டவராகிய உமாபதி சிவாசாரியர் வேதாகம ஆராய்ச்சிவல்லார், சாஸ்திர நுட்பங்களனைத்தையும் ஐயந்திரிபற அறிந்தவர், சிவபக்தி நிறைந்த செல்வர்; அவரை உமாபதி சிவமென்றே அழைப்பதுண்டு; தம மடத்திற்குப் பக்தியால் விறகு கொடுத்துவந்த பெற்றான்சாம்பான் என்னும் புலையனுக்கு முத்திகொடுத்த முதல்வர். அவர் தமிழிலுள்ள பெருநூல்க ளிவையென ஒரு பாட்டில் சொல்லியதாக வழங்குவர் :

வள்ளுவர்நூல் அன்பர்மொழி வாசகம்தொல் காப்பியமே
தெள்ளுபரி மேலழகர் செய்தவுரை—ஒள்ளியசீர்த்
தொண்டர் புராணந் தொகுசித்தி யோராறுந்
தண்டமிழின் மேலாந் தரம்.

இப்பாட்டில் திருவாசகம் தமிழிலுள்ள ஆறு சிறந்த நூல்களி லொன்றாகக் கூறப்படுகின்றது. அவ்வையார் செய்ததாக* வழங்கும் நல்வழியில்

தேவர் குறளுந் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழு முனிமொழியுங்—கோவை
திருவா சகமுந் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்

என்னும் வெண்பா மாணிக்கவாசகர் அருளிய திருக்கோவையாரையும் திருவாசகத்தையும் திருவள்ளுவர்

குறள் இருக்காதி நால்வேதம் மூவர் தேவாரம் திரு மூலர் திருமந்திரம் என்ற பெரு நூல்களோடு சம மாக்குகின்றது. முனி யென்றது வாதவூர் முனிவரைக் குறித்தது.

திருவாத வூர்மகிழ் செழுமறை முனிவர்

என்று பேராசிரியர் திருக்கோவையார் உரையிற் கூறி யதையும் நோக்குக.

## திருக்கோவையார்

திருக்கோவையாரும் தமிழ்க்கு அருமையாகக் கிடைத்த நூலே யாகும். சைவத் திருமுறைகளை வகுத்தருளிய நம்பியாண்டார் நம்பிகள் இதன் பெரு மையை

வருவா சகத்தினின் முற்றுணர்ந் தோனைவண் டில்லைமன்னைத்
திருவாத வூர்ச்சிவ பாத்தியன் செய்திருச் சிற்றம்பலப்
பொருளார் தருதிருக் கோவைகண் டேயுமற் றப்பொருளைத்
தெருளாத வுள்ளத் தவர்கவி பாடிச் சிரிப்பிப்பரே

என்னுங் கட்டளைக் கலித்துறையால் எடுத்துக்காட்டி னர். திருச்சிற்றம்பலத்தையே பொருளாகவுடைய இந்நூல் திருச்சிற்றம்பலக் கோவையாரென்றும் வழங் கும். பிற்காலத்து ஆன்றோரொருவர்,

ஆரணங் காணென்பர் அந்தணர் யோகியர் ஆகமத்தின்
காரணங் காணென்பர் காமுகர் காமநன் னூலதென்பர்
ஏரணங் காணென்பர் எண்ணர் எழுத்தென்பர் இன்புலவோர்
சீரணங் காயசிற் றம்பலக் கோவையைச் செப்பிடினே

என்னுஞ் செய்யுளால் அந்தணர், முதலியோர் தாந் தாம் வேண்டியதனை இதனிடத்துக் காண்கின்றனர் என்றுரைத்து இதன் சிறப்பை விளக்கினர். இலக் கணக்கொத்துடைய சுவாமிநாத தேசிகரும்,

பல்காற் பழகினுந் தெரியா வுளவேல்
தொல்காப் பியந்திரு வள்ளுவர் கோவையார்
மூன்றினு முழங்கும்

என்றனர். இவ்வடிகளுக்கு உரை யெழுதுங்கால் அவரே, 'திருவைக் கோவைக்குங் கூட்டுக. மாணிக்க வாசகர் அறிவாற் சிவனேயென்பது திண்ணம். அன்றியும், அழகிய திருச்சிற்றம்பல முடையார் அவர் வாக்கிற் கலந்திருந்து அருமைத் திருக்கையா லெழுதினர்' என்றார்.

கோவையென்பது அகப்பொருட்டுறைகளமைத்துப் பாடிய பாட்டுக்கள் கோக்கப்பட்ட ஒரு பிரபந்தம். மாணிக்கவாசகர் செய்த நூலைத் திருக்கோவையாரென்று வழங்குதலால் அதுவே தமிழில் முதற் கோவைப் பிரபந்தமென் றாகித்தற் கிடமுண்டு. அகப்பொருள் என்பது உள்ளத்தில் நிகழும் காதலை ஆதாரமாகக் கொண்டிருக்கும் களவென்றும் கற்பென்றும் இரு பிரிவினதாம். குலம் குணம் கல்வி முதலியவற்றால் ஒத்தாரிருவர் ஆணும் பெண்ணும் தெய்வந் துணையாகத் தாமே சந்தித்து மணந்துகொள்வது களவு. வைதிக ஒழுங்கை யொட்டி மணம் நடந்தபின் கற்பு நிகழும். இவ்விரண்டிலும் அநேக நிலைகள் உண்டு. அவையெல்லாம் துறையென வகுக்கப்பட்டுள்ளன. மாணிக்கவாசகர் அருளிய கோவையார் வெளித் தோற்றத்திற்கு அகப்பொருட் டுறைகளமைந்ததாகக் காணப்படினும்,

அறிவனூற் பொருளும் உலகநூல் வழக்குமென
இருபொருளு நுதலி யெடுத்துக் கொண்டனர்

என்று உரையாசிரியர் கூறுமாறு ஞானார்த்தம் அமைந்துள்ளது. அவ்வர்த்தத்தை மாத்திரம் காட்டும் நோக்

கத்தோடு திருக்கோவையா ருண்மை யென்றொரு நூலும் செய்யப்பட்டு வழங்கி வருகின்றது. •திருவா சகத்திற் காணும் பக்திச்சுவை இங்கும் செய்யுள் தோறுங் காணலாம.

தில்லையைத் தலமாகக் கொண்டு கூறப்பட்ட தாயினும் திருக்கோவையார் மற்றைத் தலங்களின் பெயரையும் ஆங்காங் குரைக்கின்றது. திருக்கைலா யம், திருப்பெருந்துறை, ஏகம்பமலை, சிவநகர், திருக் குற்றாலம், பொதியில், திருப்பூவணம், திருப்பனையூர், திருப்பரங்குன்றம, திருவிடைமருதூர், திருவேகம் பம், திருவாஞ்சியம், திருக்கடம்பை, திருவெண்காடு, திருச்சுழியல் என்னும் தலங்களின் பெயர்கள் அதில வந்துள்ளன.

திருவாசகத்திற் போலவே இதிலும் சில பழ மொழிகள் காணப்படுகின்றன:

கொடுங்குன்றி னீள்குடுமி
மேற்றேன் விரும்பு முடவனைப் போல (150)
விசும்புற்ற திங்கட் கழுமழப் போன்று (198)
வைகொண்ட வூசிகொற் சேரியின் விற்ற (386)

இத் திருக்கோவையாரைப் பற்றி ஒரு கதை வழங்குவதுண்டு. ஒரு காலத்து மதுரைச் சங்கத் துப் புலவர் இஃது அகபபொரு ளிலக்கணத்தொடு மாறுபட்டது என இதனைக் குற்றங் கூற, அப் புல வருள் ஒருவராகிய கல்லாடர் அவ்வாறு கூறியது தவ றென்று மொழிந்து தாமே கல்லாட மென்றொரு அகப்பொரு ணூல் செய்து அக் குற்றத்தை நிரா கரித்தனராம். இன்னும், கல்லாடர் செய்த கல்லா டத்தைக் கேட்ட சிவபெருமான் நூறுதரம் தலை

யசைத்தா ரென்று அதற்குப் பழைய பாக்களும் பிரமாணங் காட்டுவர். மாணிக்கவாசகர் மதுரைச் சங்ககாலத்துக்கு முற்பட்டவர் என்பது பொருந் தாது. கல்லாடர் திருக்கோவையாரைத் தம் பிரமாண நூலாகக் கொண்டு கல்லாடத்தைச் செய்தா ரென்ற லும் பொருந்துவதன்று. கல்லாடஞ் செய்த கல்லாடர் சங்ககாலத்தவ ரென்பது அவர் சொக்கர் மதுரையில் நிகழ்த்திய அறுபத்து நான்கு திருவிளையாடல்களைப் பற்றியுரைத்தலால் தவறென் றேற்படும். பிற்காலத்து, கல்லாடரொருவர் கல்லாடஞ்செய்து அதனை அரங் கேற்றப் போயவழி அஃதிலக்கணத்தொடு முரணுற்ற தென்றுரைத்த புலவர்க்குத் திருக்கோவையாரைப் பிரமாணமாகக் காட்டினரென்னின் அஃது ஒருவாறு ஏற்புடைத்தாம். ஆசிரியர் தம் கணபதி துதியிலாதல் முருகக்கடவுள் துதியிலாதல் நூல்செய்தற் காரணத் தைப்பற்றி ஒன்றும் உரையாமையும் கவனிக்கத் தக்கது.

# பட்டினத்துப் பிள்ளையார்

## முன்னுரை

சைவ சமயப் பெரியாருள் தலைமை வகிப்போர் சமய குரவர் நால்வருமே. அவர்களுக் கடுத்த படியில் வைத் தெண்ணப்படும் பெருமை யுடையாரில் ஒரு வர் பட்டினத்துப் பிள்ளையார். சைவர்களால் மிகவும் பாராட்டப்படும் பன்னிரு திருமுறைகளுள் முதன் மூன்று திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் அருளிய தேவாரப் பதிகங்கள். அடுத்த மூன்று திருநாவுக்கரசு நாயனார் அருளிய தேவாரப் பதிகங்கள். சுந்தர மூர்த்தி நாயனார் அருளிய தேவாரம் ஏழாந்திருமுறை. மாணிக்கவாசகர் அருளிய திருவாசகமும் திருக்கோ வையாரும் எட்டாந் திருமுறையாம். சேந்தனார் முத லிய ஒன்பதின்மர் பெரியார் அருளிய திருவிசைப் பாக்களும் திருப்பல்லாண்டும் சேர்ந்து ஒன்பதாந் திரு முறை யாயின. திருமூல நாயனார் அருளிய திருமந்திர மாலிகை பத்தாந் திருமுறை யாயிற்று. வெவ்வேறு காலத்து வாழ்ந்த சைவப் பெரியார்கள் அருளிய பல பிரபந்தங்கள் பதினோராந் திருமுறையாகத் தொகுக்கப் பட்டன. அறுபான் மும்மைத் திருத்தொண்டர்கள் வரலாற்றை யுரைக்கும் சேக்கிழார் பெரிய புராணம்

பன்னிரண்டாந் திருமுறையெனப்பட்டது. இவற்றுள் பதினோராந் திருமுறையுள் பட்டினத்துப் பிள்ளையார் அருளிய பிரபந்தங்கள் காணப்படுகின்றன. சைவப் பெரியாருள் அவர் ஸ்தானமும் இதனால் ஒருவாறு புலப்படும்.

ஒவ்வொரு பெரியார் பெருமைக்கு ஒவ்வொன்று ஏதுவாம். உதாரணமாக, மாணிக்கவாசகர் பெருமைக்கு

திருந்திய அன்பிற் பெருந்துறைப் பிள்ளையும்

என்று பட்டினத்துப்பிள்ளையாரே உரைத்தபடி, அவர் சிவனிடத்து வைத்த பேரன்பே ஏதுவாயிற்று. தாம் பெற்ற அன்பை உலகெல்லாம் பெறும்படி திருவாசக முரைத்து அழியாப் புகழ் சிறந்தார் அப் பெரியார். பட்டினத்துப் பிள்ளையார் பெருமைக்கு அவர் பெருந் துறவு ஏதுவாயிருந்தது.

பட்டினத்துப் பிள்ளையினைப் பத்ரகிரி யைப்பரவி
விட்டுவிட மாட்டார் வெறுவீடர்

என்று கண்ணுடைய வள்ளலாரும்,

ஒட்டுடன் பற்றின்றி உலகைத் துறந்தசெல்வப்
பட்டினத்தார் பத்ரகிரி பண்புணர்வ தெந்நாளோ.

பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப்
லாருந் துறக்கை யரிதரிது [போ

என்று தாயுமானாரும் பட்டினத்துப் பிள்ளையாரின் பெருமை இதுவெனத் தெளிவாகச் சுட்டினர். பட்டினத்துப் பிள்ளையார் தம் சரித்திரத்தானும் அருட் கவிகளானும் உண்மைத் துறவே முத்தியை எளிதில் தரவல்லதென்று காட்டினர்.

பட்டினத்துப் பிள்ளையார் சரித்திரம் பிற்காலத்துப் பெரியாரொருவர் செய்த பட்டினத்துப் பிள்ளையார் புராணத்து முதன்முதற் கூறப்பட்டது. அதன் பின் தொழூவூர் வேலாயுத முதலியார் திருவெண்காட்டடிகள் சரித்திரமென ஒரு வசன சரித்திரமெழுதி வெளியிட்டனர். பின்னர்ப் பட்டினத்துப் பிள்ளையார் பிரபந்தங்கள் வெளிவரும்பொழுது ஒவ்வொரு பதிப்பில் ஒவ்வொரு சரித்திரம் இவ்விரண்டையுமே ஆதாரமாகக்கொண்டு வெளிவந்தது. முருகதாசர் தாமியற்றிய புலவர் புராணத்து இச் சரித்திரத்தையுங் கூறியுள்ளார். அவர் பழையநூல்களோடு தாம் பல பெரியார்பாற் கேட்டவற்றையும் ஆதாரமாகக் கொண்டு அப் புராணம் எழுதினாராகலின், அதில் சில நூதன விஷயங்கள் காணப்படுகின்றன.

# பட்டினத்துப் பிள்ளையார் புராணம்

பட்டினத்துப் பிள்ளையார் புராணம் இன்ன காலத்து இன்னார் செய்தார் என்று தெளிவாக உரைத்தற்கு ஆதார மொன்றுமில்லை. நூல் 'அவை யடக்க'த்தில் ஆசிரியர், தாம் வைசியராயிருந்து சிவலிங்க வுருவாய் மாறின திருவெண்காடர் சரித்திர முரைப்பதாகவும், பெரியோர்கள் சொல்லுங் கதையினைக் கேட்டுத் தாம் புராணத்தை இயற்றுவதாகவும், சிதம்பரத்திலே பட்டினத்தடிகள் மரபினராகிய வைசியப் பெரியோர்கள் சிலர் இக் கதையைத் தொகுத்துரைக்க எனத் தாம் அங்ஙனம் உரைப்பதாகவும், வடமொழிப் புராணங்கள் சில சில பெரியார் கதைகளையே கூறுகிற்கும் அவை கூறாத பெரியோர்கள் எத்தனைபேரோ முத்திபெற்றுள்ளார்கள் ஆதலால் வடமொழிப் புராணம் கூறுகின்றது கூறுகின்றிலது என்பதைக் கவனியாமல் தாம் புராணம் இயற்றுவதாகவும், இந்திரன் காவிரிப்பூம்பட்டினத்தை அமைத்தமையும், திருவெண்காடர் அதில் வாழ்ந்தமையும் திருவிடைமருதூர்ச் சிவன் அவர்பாற் சிறுவனாய் அடைந்தமையும் அவர் அடிகட்கு ஞானோபதேசம் செய்தமையும் அடிகள் திருவிசைப்பாப் பாடினமையும் திருவொற்றியூரில் சிவலிங்கமாக மாறினமையும் தாம் புராணத்தில் சொல்ல லுற்றதாகவும் கூறியிருக்கின்றார். இப் புராணம் பூம்புகார்ச் சருக்கம், ஆட்கொண்ட சருக்கம், துறவறச் சருக்கம் என மூன்று சருக்கங்களையுடையது.

பட்டினத்துப் பிள்ளையார் திருவவதாரம்

பல்வளங்களும் நிறைந்த சோழநாட்டில் காவிரிப்பூம் பட்டினத்தில் வணிகர் மரபில் பட்டினத்துப் பிள்ளையார் அவதரித்தார். பட்டினத்துப் பிள்ளையென்பது குடிப்பெயர். திருவெண்காடரென்பது அவரது இயற்பெயர். அவர் மிக்க செல்வம் படைத்தவர்; நெடுந்தூரஞ் சென்று நிதிகொண்டு மீளும் ஆயிரக் கணக்கான கப்பல்களை யுடையவர்; ஆயிர மாயிரமான கலப்பைகள் கொண்டு பயிர்த்தொழில் நிகழ்த்துபவர். இத்துணைச் செல்வமும் விதியானன்றிச் சிவனதருளாற் பெற்ற திருவெண்காடர் இருந்த ஊர் திருவெண்காடாம். அரசர்களும் கேட்டஞ்சும்படியான பெருஞ் செல்வம் படைத்த இவர் சாமானிய மக்கட்குப் பெறுதற்கரிய சிவபக்தியைப் பெற்றுச் சிவனடியாரை அன்புட னாதரிக்குந் தன்மை யுடையரா யிருந்தார்.

சிவசருமர் கதை

அந்நாளிலே, மருதவன மென்னும் திருவிடைமருதூரில் கோயில்கொண் டிருக்கும் மகாலிங்கப் பெருமானை மூன்று காலமும் நெறிப்படி பூஜை செய்யும் சிவப் பிராமணருள் ஒருவர் சிவசரும ரென்பார் தம் மனைவியை யிழந்து வறுமையால் மீண்டும் மணமுடிக்க இயலாமையால் தமக்கு மணஞ் செய்தற்கு அவசியமாய பொருள் அளிக்க வேண்டுமென்று தினந் தோறும் அப் பெருமானைப் பிரார்த்தித்து வந்தார். அன்பினாற் பூசையாதிகள் செய்து பிரார்த்திக்கும் இவர்க்கு அருள் செய்ய எண்ணியும் திருவெண்காடர்க்கு நற்கதி யளிக்க எண்ணியும் மகாலிங்கப் பெருமான் மருதவாணனென்

னும் பெயரோடு பதினாறு வயதுடைய ஒரு பிராமணச் சிறுவராய் உருவெடுத்து ஒரு கையில் எழுத்தாணியும் பனையோலையும் வைத்துக்கொண்டு, மற்றொரு கையில் வெண் சோற்றை யேந்திவந்து சிவசருமரை நோக்கி, 'இந்தச் சோற்றை உண்ணுதற்கு அறுசுவையோடுங் கூடிய கறிகள் தருவீரா?' என்றனர். சிவசருமர், 'குழந்தாய், அறுசுவையோடுங் கூடிய கறிகள் உண்டென்று நீ சொல்லவே அறிந்தேன்' என்றுரைக்கவே, பிராமணச் சிறுவர் தம் கையிலிருந்த சோற்றை ஓரிடத்து வைத்துவிட்டு, 'உம்முடைய மனைவி எங்கே?' என்று வினவினர். அதற் கவர், 'அப்பனே, என் மனைவி சிவலோகத் திருக்கின்றாள்' என்று விடையளித்தலும், சிறுவர் 'ஆபின் இன்னொரு கன்னியை மணந்து கொள்க' என்றனர். பிராமணர் மனம்வருந்தி, 'இன்னொரு கன்னியை மணந்து கொள்வதற்கு என்னிடத்துப் பொருள் சிறிது மில்லையே. யான் பரம தரித்திரன். சிவபெருமான் திருவுளம் எப்படியோ!' என்றுரைத்தனர். இவ்வார்த்தை கேட்டலும் சிறுவர் எழுந்து நின்று, 'எனக்கோ மாதா முதலிய உறவினர் யாருமில்லை. யான் இவ்வுலகத்தில் இன்ன தொழில்தான் செய்யவல்லேனென்பதில்லை. எல்லாத் தொழிலும் வல்லேன். என்னை விற்றும் வறுமையைத் தீர்த்துக்கொள்வீராக' என்று சொல்லினர். பிராமணர் 'உன்னை விற்றால் என்ன தீங்கு விளையுமோ!' என்று சொல்லிச் சிறிது மயங்கினர். சிறுவர் மீட்டும், 'தீங்கு நேருமாயின் அதனைப் பரிகரித்திடல் என்னுடைய பாரம். "இச் சிறுவன் எல்லாம் வல்லன், இவனுக்கு அடிமைச் சீட்டும் உண்டு" என்று சொல்லின் உமது காரியம் கிரம

மாகவே முடியும்' என்று வற்புறுத்தித் தமது கையிலிருந்த பனையோலையில் ஒரு அடிமைச் சாசன மெழுதிக் கொடுத்தனர். பிராமணர் பின்னும் மயங்கி, 'பிராமணரும் அரச ராட்களும் இதனைப்பற்றிக் கேள் வியுற்றாலே கேடுண்டாகுமே!' என்று புலம்பினர். ஆயினும், 'உமது நன்மைக்காகவே நான் இவ்வளவும் சொல்லுகின்றேன். இதனாலே எனக்குப் புண்ணிய மும் உண்டாகும். அச்சமின்றி நான் சொல்லியபடி செய்யும்' என்று சிறுவர் தேற்றப் பிராமணர் தேறி னர். பின் அவர் அச் சிறுவரை அழைத்துக்கொண்டு திருவிடைமருதூர் ஆலயத்தினுட் சென்று சிவபிரா னிடத்தில் விடைபெற்றுக்கொண்டு காவிரிப்பூம் பட்டி னத்தை நோக்கி நடந்து சென்றார். அப் பட்டினத்தை நோக்கிச் சென்றவர்கள் நகருள் அரசர் வீதியிற் செல் லாது வைசியப் பிரபுக்கள் வாழும் வீதியிற் சென்று விலை கூறினர். திருவெண்காட்டடிகள் இதனை அறிந்த னர். அவர் இருவரையும் வரவழைத்து, 'இவனிடத்து என்ன அதிசயமுளது? சொல்லீர்' எனக் கேட்டலும், பிராமணர் விடைகூறுமுன் சிறுவரே, 'எனக்கு எவ் வகை ரத்தினங்களையும் மதிப்புப்போடத் தெரியும். மற்றைப்படி உலகத்து என்னைப்போலத் தொழில் செய்ய வல்லார் யாவர்?' என்று விடை பகர்ந்தனர். திருவெண்காடரும் தம்மிடத்திருந்த விலைமதிப்பரிய ரத்தினத்தைக் கொண்டுவந்து அவர் கையிற் கொடுக்க, அவர் அதனை உள்ளபடி மதித்து, திருவெண்காடர் உணரும்படி 'இரத்தினப்பரீக்ஷை' யென்னும் கலையின் ரகசியங்களை யெல்லாம் எடுத்துக் கூறினார். இன்னும் பல தொழில் நுட்பங்களையும் கூறப்புகுந்த சிறுவரை அவர், 'இச் சிறுவன் நல்லன். அவன்பாற் சென்ற

என் மனம் கட்டுண்டது' என்று கருதி மகிழ்ச்சியுடன் நோக்கி, சிவசருமர்க்கு ஆயிரம் பொன்னீந்து அப் பிள்ளையைப் பெற்று, அவரடிமைத் திறம் காட்டும் மூலவோலை படியோலைகளையும் பெற்றார். சிவசருமரும் திருவெண்காடருக்கு அநேக ஆசிகள் கூறிவிட்டுத் திருவிடை மருதூர்க்குச் சென்று மறுமணம் செய்து சிவலிங்கபூஜை தவறாதியற்றி வந்தார்.

மருதவாணர் திருவிளையாடல்

சிவசருமரிட மிருந்து மருதவாணரைப் பெற்ற திருவெண்காடர் அவரைத் தம் பிள்ளையாகப் பாவித்தாரே யன்றி ஒரு கணப்பொழுதும அடிமையாகப் பாவித்தாரல்லர். அவரும் இவரிடத்து மிக்க அன்புடையவராகத் தோன்றினர். திருவெண்காடர் தம் வியாபார மனைத்தையும் அவரிடத் தொப்பித்தனர். மருதவாணரும விசேஷ லாபம் வரும்படி வியாபாரஞ்செய்து திருவெண்காடர்க்குப் பகைவரா யிருப்போர் அவரை வந்து வணங்கச் செய்தார். கடல்யாத்திரை போதற்கு வேண்டிய ஏற்பாடுகளுஞ்செய்து கப்பலேறித் தீவாந்தரங்கட்குச் சென்று சரக்குகள் மாற்றி வேறு சரக்குகள் கொண்டு மீண்டார். இவர் அடைந்த லாபங்களை யெல்லாம் பொற்காசுகளாகத் திருவெண்காடர் கையிற் கொடுக்க, அவர் சிவபெருமானுக்கு இவர் சுகமாக மீளுதல் கருதி நேர்ந்துகொண்டபடி அபிஷேகாதிகள் செய்து மகிழ்ந்தார். திருவெண்காடர்க்கு முதல் மந்திரியா யிருந்த சேந்தனரும் மகிழ்ந்து இவருக்குப் பல்விதச் சிறப்புச்செய்து களித்தார். மருதவாணர் பின்னும் கடல்யாத்திரை செய்தலையே தங் கருமமாகக்கொண்டு தூரத்திலுள்ள தீவுக

ளிலுள்ள அரும் பொருள்களைக் கொண்டு மீண்டார். கப்பலைத் தாமே நடத்தி மீகாமரைப் பிரமிக்கச் செய்வார். இவர் பாயை விரிக்காமலும் எதிர் காற்றைக் கவனியாமலும் கப்பலை அம்புபோற் செல்லுமாறு ஓட்டுந் திறத்தைக் கண்ட மீகாமர் 'இவன் தேவனோ சித்தனோ' என்று வியந்தனர். இப்படிச் சிறிதுகாலம் திருவெண்காடருக்கு லாபமே காட்டித் திருவிளையாடல் புரிந்தபின், முன்போற் கப்பலேறி மற்றைய வணிகரோடு நெடுந்தூரத்திலுள்ள தீவிற்குச் சென்றார். அத்தீவிலே தாம் கொண்டுபோன சரக்குகளை நல்ல லாபத்தோடு விற்று, வந்த பொன்னை யெல்லாம் பத்திரப் படுத்தி, தருமஞ் செய்யவேண்டு மென்று சைவ குரவர்க ளிருக்கும் மடங்களைத் தேடிக் கண்டு அவர்களுக்கு வேண்டிய பொன் அளித்தார்; துன்பப் படுபவர்களுக்குக் கொடுத்தார்; தரித்திரர்களுக்கு ஈந்தார். தம்மோடு வந்த வணிகர்க்கு வேண்டிய மட்டுங் கடன் கொடுத்தார். இவர் செய்வதை யெல்லாங் கண்ட அவ் வணிகர் 'இவர் செய்யும் காரியத்தைத் திருவெண்காடர் அறியின் இவரைக் கோபிப்பர். நாமே சென்று அவர்க்கு உணர்த்துவோ மெனின் இவர் நம்மைக் கோபிப்பர்' என்று தம்முள்ளே பேசிக் கொண் டிருக்க, மருதவாணர் ஒரு மலையைப் பிளந்து அங்கொரு கோயில் கட்டுவிக்க வேண்டுமென்று அளவிறந்த பொன்னைச் செலவிட்டார். கோயிலைக் கிரமப் படி கட்டி முடித்து அதற்குப் பூசை முட்டுறாது நடக்கும்படி நிலங்கள் கிராமங்கள் வாங்கி மானியமாக விட்டார். பொன்னெல்லாம் போயிற்றே இனி என்ன செய்வோ மென்போர்க்கு மருதவாணர் 'எரு வண்டிகள் பலகோடி உள்ளன. நமக் கென்ன

குறை! தென்றுவென் றிசைபாடிக்கொண்டு செல்வோம்' என்பார். 'இவ் வெரு நம் மூரிலில்லையோ? பொருள் அபிவிர்த்தியாகும் வழியைப் பாரும்' என்று சொல்லும் வணிகத் தோழரை நோக்கி, 'சரி. சரக்குகளை ஏற்றுங்கள்' என்று முன் சொன்னதையே சொன்ஞர். அவர்கள் இவர் ஏற்றும் சரக்கினையும் தாங்கள் கொண்டுவந்த அருஞ் சரக்குகளையும் ஒத்திட்டுத் தம் முள்ளே களித்தனர். கப்பல்களிலே சரக்குகள் ஏற்றித் தீர்ந்தவுடன் மாலுமிகள் கப்பல்களை யோட்டுதற்குப் பாய் விரித்தார்கள். சில நாட்களில் கரை சேர்தற்குரிய கப்பல்கள் பலநாட்களாகக் கடல்மீ தோடின. இடையில் நெருப் புண்டாக்குதற்கு வகையின்றி அவ் வணிகத் தோழர்கள் மருதவாணரை எருமுட்டை கடன்கேட்டனர். அவரும் கரை சேர்ந்தவுடனே அவற்றுக்குச் சமமாகிய எருமுட்டைகள் கொடுக்கவேண்டு மென்று சொல்லி அவர்களுக்குக் கடன் கொடுத்தார். அக் கடனுக் கெல்லாம் சீட்டுக்களும் எழுதி வாங்கிக்கொண்டார். கப்பல்கள் சிறிது நாளிற் கரை சேர்ந்தன. ஊரா ரெல்லாம் மகிழ்ந்து ஆரவாரத்தோடு இவ் வணிகபுத்திரரை வரவேற்றனர். மருதவாணரும் திருவெண்காடருடைய திருமாளிகையை யடைந்து சிறந்த ரத்தின மொன்றை அவர் கையிற் கொடுத்தனர். திருவெண்காடர் கரையற்ற மகிழ்ச்சியெய்தினுர். அப்பொழுது கப்பலில் மருதவாணரோடு வந்த துஷ்டர்கள் சிலர் தீவில் அவர் பொருளை யழித்த விதமும் எருமுட்டை சேர்த்த விதமும் சொல்லி நகைத்தார்கள். திருவெண்காடர் மருதவாணர் முகத்தைப் பார்த்தனர். மருதவாணரும் 'நான் பொருளைச் செலவிட்டது உண்மையே. இப்

பொழுது வேண்டிய பொருள் சம்பாதித்துத் தருகி றேன். கோபிக்கவேண்டா' என்று உத்தர மளித்த லும், அவர்களெல்லாம் வெளியே சென்றனர். மருத வாணர் எருமுட்டைகளை யெல்லாம் பண்டசாலையில் நிறைக்கும்படி சொல்லி, கடன் சீட்டுக்களை யெல் லாம் திருவெண்காடர் கையிற் கொடுத்தார். அவரும் நோக்கி எருமுட்டைகட்கொரு சீட்டா என்றிகழ் ந்து கோபங்கொண்டார். அப்பொழுது அவர் 'உட் சென்று ஓர் எருமுட்டைகொண்டு வருக'என்று சொல் லிப் பின் கடன்காரர்களையும் வரவழைத்து முன் நிறுத் திக்கொண்டு, 'இதனைச் சாமர்த்திய முள்ளவன் கரைக்கட்டும்' என்றார். ஒருவன் கைப்பலங் கொண்டு கரைத்தான். எருவுள்ளே ஓர் அருமையான மாணிக் கம் அக்கினிபோல் ஒளிர்ந்தது. இவ்வாறு கடனருக் களுக்கு விலை மதிப்பிட்டபொழுது வணிகர் 'நாங்கள் விலைக்கு ஒப்பினேம். கடனைத் திரும்பக் கொடுத்தற்கு எங்களிடத்தில் பொருளில்லை' என்னலும், திருவெண் காடர் அவர்களை யெல்லாம் அடிமைகளாக்கிக் கொண்டனர். அவர் மருதவாணரைக் கொண்டாடி மனத்துள் மகிழ்ச்சி மிக்கவராய் எருமுட்டைகளைச் சோதிக்க ஆரம்பித்தார். ஒரு முட்டையி லாயினும் அம்மாதிரி மாணிக்கம் அகப்படவில்லை. அப்பொழுது அவர் கோபங்கொண்டு மருதவாணர் செய்தது தவ றென்று சொல்லி, தம் ஆட்களை நோக்கி, 'இக் கள் வனைத் தனியறையி லிருத்திப் பொருளெல்லாம் கொடுக்கும்படி கேளுங்கள்' என்று கட்டளை யிட் டார். மருதவாணரும் திருவெண்காடர் பரிபக்குவ மடையுங் காலநோக்கி அவ்வறையி லிருந்தனர். சிவ பெருமானே யாகிய அவர் அங்குப் பல திருவிளையா

டல்களைப் புரிந்துகொண்டு சிலநாள் இருந்த பிறகு ஒருநாள் தாம் திருக்கைலாயத் திருக்குந் தன்மை போன்று திருவோலக்கங் கொண்டிருந்தார். அதனைத் திருவெண்காடர் மனைவியார் உடனே கண்டார். கண்டதும ஓடி அவர் அச்சமடையும்படி, 'அந்த அறையில் சிவபெருமானும உமாதேவியாரும் இருவர் நடுவில் முருகவேளும வந்திருக்கின்றனர்' என்றனர். அவர் ஓடிச் சென்று அத் திவ்ய கோலத்தைத் தரிசித்தார், வியந்தார், வெருண்டார், மீண்டார். அன்றிரவு முழுதும் கண்ணுறங்கிலர். பொழுது விடிந்ததும் திருவெண்காடர் தாம் இரவிற் காணுக் காட்சி கண்ட இடத்துச் சென்று பார்க்க அங்கு மருதவாணர் தனித்திருப்பதைக் கண்டார். அவர் திருவடித்தாமரைகளைத் தம் இருகையினுலும பற்றிக் கொண்டு, 'தமியேன் பெருந்தீங் கிழைத்தேன், பொறுத்தருள வேண்டும், பெருமானே! பெருங் கருணையால் தமியேனிடத்தில் ஏவலாளாகவு மிருந்தீரே' என்று சொல்லித் தாம் அறிந்த அளவில் அவரைத் துதிசெய்தார். அப்பொழுது மருதவாணரும் 'உனக்கு ஞானேபதேசஞ் செய்தற்காகவே யான் இக் கோலத்தோடு உன்னிடத்து வந்திருந்தேன்' என்று சொல்லித் திருவெண்காடரை மகிழ்வித்தார். திருவெண்காடர் உபதேசம் புரியுமாறு பிரார்த்திப்ப அவரும் பரமஞானத்தை உபதேசித்தார். இவ்வாறு சில நாள் திருவிளையாடல் புரிந்த பின் மருதவாணர் அவரைச் சாஸ்திரங்கள் வாசிக்குமாறு சொல்லி அவற்றை அவர்க்குக் கொடுத்தலுஞ் செய்தார். திருவெண்காடர்க்கு உலக வாழ்க்கையில் பிராந்தி யொழிவதாக இல்லை. நவகோடிக் கதிபரா

யிருந்த திருவெண்காடர் அவற்றின்மீது பற்றொழிக்க முடியாமல் தாம் மருதவாணரைப் பார்க்கும் பொழுதும் அவர் உபதேச மொழிகளைச் சிந்திக்கும் பொழுதும் எப்படித் துறவு பூண்டு கதியடையலாம் என்றெண்ணுவார். இவர் மயக்கத்தை யுணர்ந்த மருதவாணர் ஒரு தந்திரம் புரிந்தார். ஒரு பக்கத்தில் காதற்ற ஊசியை அதிகமாகப் பிரிந்திருந்த சரட்டோடு கோத்து அவ்விரண்டையும் திவ்யமான பட்டு வஸ்திர மொன்றில் பொதிந்து ஓர் அழகான பெட்டியில் இட்டு அதற்கு முத்திரை வைத்து, அதனைத் திருவெண்காடர் மனைவியார் கையிற் கொடுத்து, 'உமது கணவருக்கு இதுதான் பொருளாவது. இதனை அவரிடத்துக் கொடும்' என்று சொல்லி அங்கு நின்றும் நீங்கினார்.

**திருவெண்காடர் துறவு**

திருவெண்காடர் மருதவாணரைக் காண வெண்ணி அவரிருந்த அறையைப் போய் நோக்குங்கால் அது வெற்றறையா யிருக்கக் கண்டார். அவர் எங்குச் சென்றாரென்று நாநாதிக்கிலும் துருவினார், கண்டாரில்லை. அச் சமயத்து அவர் மனைவியார் விரைந்து வந்து, 'மருதவாணர் இப் பெட்டியை உமது கையிற் கொடுக்கும்படி சொல்லிப் போயினார்' என்று சொல்லி அப் பெட்டியை அவர் கையிற் கொடுத்தார். திரிகரண சுத்தியாகத் தம் குருவினிடத் தன்புவைத்த திருவெண்காடரும் அப் பெட்டியைக் கையில் வாங்கி அப்பொழுதே அதனைத் திறந்து சோதித்தார். உள்ளிருந்த வஸ்துவைக் கண்டார். வளைந்து கூரற்று ஒரு பக்கத்தில் காதற்ற ஊசியையும் முறுக்கேறாமலிழைகளா யிருக்கும் சரடு:அதிற் கோக்கப் பெற்றிருத்தலை

யும் அதிசயத்தோடு நோக்கினார். நோக்கினவர் நெடிது நேரம் நோக்கின வண்ணமாகவே யிருந்தார். பின் சிவபிரான் திருவருட் பொலிவை அதனிடத்துக் கண்டார். 'காதில் நூல் செல்லுதல் நம் காதிற் கல்விநூல் செல்லுதலைக் குறித்தது. அஃது உலகப் பற்றுக்களை யொழித்தற் குரிய குறிப்புமாகும். பழுதுற்ற இப் பாசமென்னுஞ் சரடு நம் பாச ஒழிவைக் குறித்தது' என்று தேறி, ஊசி காந்தக் கல்லைப் பற்றல் போலப் பற்றும் பரஞானத்தால் அப்பொழுதே குலாசார முதலிய தருமங்களை விட்டார். நிரதிசய இன்பமே காணியாகப் பெற்றார். சிறிது நேரத்திற் கெல்லாம் உலகமெல்லாம் அநித்திய மென்னும் உணர்வு தலையெடுத்து ஆசைமுழுதும் அடியோடற அவர் அவ்வூசியினை யெறிந்துவிட்டு, அணைகடந்து செல்லும் வெள்ளத்தைப்போல ஒரு கணப்பொழுதில் இல்லறத்தை யொழித்துத் துறவற மேற்கொண்டு ஊரை யடுத்த ஓரம்பலத்தில் போய்த் தங்கினார். அவருடைய உறவின்முறையார் சூழ்ந்து வர அரசன் வந்து அவரைக் கண்டான். அவர் அவனுக்குப் பலவிதமாக உபதேசித்தும் அவன் மயக்கந் தீர்ந்திலனா யிருந்தான். ஊரா ரெல்லாரும் சேர்ந்தனரை யடுத்து, 'திருவெண்காடருக்கு நீரேனும் புத்தி கூறுவீர்' என வேண்ட, அவரும் பல சொல்லிப் பிரார்த்தித்தார்; அடிகள் மவுனமா யிருந்தனர். வந்தவர்கள் தாம் பேசுவது பயன்படாதென்று கண்டு ஒவ்வொருவராக நீங்க, தனித்த அரசன் 'நீர் துறவடைந்து பெற்றதென்ன?' என்று கேட்டான். அடிகள் 'நீர் நிற்கவும் யாம் இருக்கவும் பெற்ற தன்மையே' என விடைகூறினர். இதனைக் கூறிவிட்டு அவர் மவுனநிலையி லிருந்தபொழுது அரசன்

அடியார்கள் பெருமை நினைக்கவு மரிதென்று வியந் துரைத்தான். அடிகளுடைய சுற்றத்தார் அவனை யணுகி, 'இவர் பெருங்குடி வாழ்க்கை அழிந்துவிட லாகாது, இவரது மருகனை இவர் வீட்டிற் குடியிருத்தி இவர் பெருஞ் செல்வத்தை யெல்லாம் பரிபாலிக்கச் செய்யவேண்டும்' என்று கேட்டுக் கொண்டார்கள். அரசனும் மகிழ்ந்து அவர்களோடு போய் அவ்வண் ணமே அடிகளின் மருகனை அவ் வீட்டி லிருத்தினன். அவனும் வாழ்க்கையின் பாரத்தைப் பரித்தான். அப் பொழுது அடிகளின் மனைவியார் தாமும் தவஞ்செய்ய வேண்டுமென்றெண்ணி அடிக ளிருக்கு மிடஞ் சேர்ந் தார். அடிகட்கு அது சம்மத மில்லாமையால் அவர் அவருக்குத் தக்க உபதேசத்தைச் செய்து மீட்டும் வீட்டுக்குப் போகச் செய்தார். அவர் போனபின் சேந்தனர் வந்து அடிகளின் பாதங்களைப் பற்றிக் கொண்டு, 'அடியேனுக்கு என்ன கட்டளை? இல்ல றத்தி லிருக்கவோ நடராஜமூர்த்தியின் ஆனந்த தாண்டவத்தை மனத்தில் நிறுத்தவோ?' என்று கேட்டார். அடிகள் 'உமது மனம்போற் செய்க' என்று ஆஞ்ஞாபித்தார். அவரும் அடிகளிடம் விடைபெற்றுத் தமது வீட்டிற் சேர்ந்தார்.

பின்பு அடிகள் ஞானனுபவம் பெருக, தகவே தம் மனைவியாகவும் உயிர்களே தம் மைந்தராகவும் சிவனடியார்களே தம் உறவினராகவும் கொண்டு தரையாகின்ற அமளிமேல் பள்ளிகொண்டு ஆனந் தித்திருந்த அந்நாளிலே, வீடுதோறுஞ் சென்று பிச்சையேற் றுண்பாராயினர். வணிகப் பிரபுக்கள் இது பொறாராய், தங்களூரில் அடிகளுக்கு ஒருவரும்

பிச்சையிட லாகாதென்று விலக்கினர். சில மூர்க்கர்கள் பின்விளை வறியாராய் விஷமிட்டுச் சமைத்த நெய்யப்ப மொன்றை அவர் தமக்கையாராற் கொடுப்பிக்க அடிகள் அதனை விரைவில் வாங்கி, 'தன் வினை தன்னைச் சுடும் ஓட்டப்பம் வீட்டைச் சுடும்' என்று சொல்லி அதனை அத் தமக்கையார் வீட்டின்மேற் செருகினார். அவ் வீடு உடனே தீப்பற்றியது. பற்றிய தீ ஊரெங்கும் பரவத் துன்பமுற்ற ஊரார்க் கிரங்கி அத்தீயைத் தணித்தார். மீண்டும் அடிகள் 'தங்களைக் கேட்டுப் பிறந்திலம்' என்னும் கவியைச் சொல்ல, பெருந்தீப் புகுந்து காவிரிப்பூம பட்டினத்தை யெல்லாம் கவர, ஊரார் தீ அவியா தெரிதலால் மிகவும் வருந்தினர். அவர்கள் அறியாமைக்கிரங்கி அத் தீயையுந் தணித்தார். பின்னும் அவர் தம் தாயைக் குறித்து, "குடியிருந்த வீட்டிற் கொள்ளிவைப்பேன்' என்பார். இந்த வாசகத்தின் பொருளை யறியாத ஊரார் 'இஃதென்ன அநியாயம்!' என்பர். தம் தாய் இறந்த நாளில் அடிகள் தம் வாக்காலேயே அவள் சரீரம் பற்றி யெரியும்படி செய்தார்.

அதன்பின் அவர் அவ்வூரைவிட்டு வேறிடஞ் செல்ல எத்தனித்தபொழுது, அங்குள்ள பெரியோ ரெல்லாம் ஒருங்கு திரண்டு அவரை வந்து பணிந்து தங்களுக்குத் திருவருள் பாலிக்கவேண்டு மென்று இரந்தனர். அவரும் அவர்களுக்கு உத்தரமொன்றுஞ் சொல்லாமல் மேல் நடந்தார். அப்பொழுது அவர்க ளெல்லாரும் விரைவாக முன் சென்று அவரைத் தடுத்து அவர் காலில் விழுந்து வணங்கினர். அவ்வாறு வணங்கினவர்களுக்கு அடிகள் 'அருள்கூர்' என்னும் உபதேசஞ் செறிந்த அருங்கவிதையைச் சொல்லிவிட்டுத்

திருவெண்காட்டை யடைந்து அங்குள்ளவர்களெல்லாம் திரண்டு தம்மை வணங்க ஆலயத்துட் பிரவேசித்தார். ஆலயத்தாக கோயில்கொண்டிருந்த சிவபெருமானைப் பல சொல்லித் துதித்த அடிகளைப் பிராமணர் அணுகி, 'இம் மாணிக்க ஆடையைச் சிவபெருமான் உடுத்தற்காகக் கொடுத்தனா' என்று சொல்லி இரத்தினங்கள் இழைத்த பீதாம்பரத்தை அவர் கையிற் கொடுத்தனர். அவர் தாம ஆகாதென்று துறந்தது கடவுளுக்கு ஏற்குமோவெனில் ஏலாதே என்று கருதி, 'நாயினுக்கு ஆகாத மணியும் பொன்னும் நாயனுக்கு ஆகுமோ' என்று சொல்லிக்கொண்டே அதனை உதற, அப் பீதாம்பரம் பீற்றலம்பரமாயிற்று. சிவபெருமானுக்கு இயற்கையிலேயே யுள்ள நக்கன் (திருவாணி) என்னும் பெயர் புதுப்பிக்கப்பட்டது. அருட்செல்வராகிய அடிகள் திருவெண்காட்டிலேயே சிறிதுகாலந் தங்கி, உலகமுய்யும் பொருட்டு 'வையமுய்ய' என்னும் திருப்பாட்டைத் திருவாயமலர்ந்து, பின் வேறு சில பாட்டுக்களையும் சொல்லிச் சிவானந்தவாரியி லாழ்ந்திருந்தார்.

பிறகு திருவிடை மருதூர்க்குச் சென்று மருதவாணர் சந்நிதியில் கண்ணீர் ஆறாகப் பெருக்கி ஆனந்தக் கூத்தாடி உடல் புளகிப்ப நாத்தழுதழுப்ப இருந்து அரிதின் விடைகொண்டு அவ்வூரிலேயே வசித்தார். அக்காலத்துத் திருவிடைமருதூர் மும்மணிக்கோவை முதலிய பிரபந்தங்கள் பாடினர். ஒரு நாள் தாகவிடாய் மாற்றுதற்கு நீர் கிடையாதிருப்ப

மென்று விழுங்கி விடாய்கழிக்க நீர்தேட
லென்று விடியுமெனக் கென்கோவே—நன்றி
கருதார் புரமூன் றுங் கட்டழலாற் செற்ற
மருதாவுன் சந்நிதிக்கே வந்து

என்ற பாடலைப் பாடிச் சிவபெருமானே நீர் கொண்டு வந் துதவப் பெற்றார். மற்றொரு தினத்தில் கொடிய விஷத்தினால் நித்திரை யின்றிக் கருப்பங் கழனியிலே வலிபொறுக்க மாட்டாமற் கிடந்தார். பின் அவ் வலி தீராமலே அவர் ஒரு புறந்திண்ணையிற் கிடந்தபொழுது சிவபிரான் ஊர்காவலன் போல வடிவுகொண்டு நள்ளிரவில் வந்து, இருப்பு வளையங்களால் ஓசைப்படுந் தன்தடியைத் தரையில்தட்டி, காலாலே மார்பில்தாக்கி, 'நீ யாரப்பா?' என்ன, அடிகள் அச்சமுற்று, 'ஊர்காவல! உதிரம் தசை எலும்பு தோல் மூளை என்பவையோ இன்னும் அளவிறந்த தத்துவத் தொகுதியோ இன்ன தென்று என்னை யான் அறிந்திலன். யானல்லாததனை யானென நினைவதுதான் என் மன நிலைமை' என்றார். ஊர்காவலராகிய சிவபெருமான் உடனே மறைய, அடிகள் ஆனந்தக் கடலில் ஆழ்ந்தார். ஆழ்ந்தவர் எழுந்து அவர் மறைந்த திசைநோக்கிப் பணிந்தார். பொழுதும் விடிந்தது. அடிகள், 'தேவரீருடைய பாத தாமரைகள் நொந்தனவோ. நாயேன் சொல்லிய கடுமொழிகள் பொறுக்கமுடியாமல் நடந்து விட்ட கருணையை என் சொல்வேன்!' என்று சொல்லிக்கொண்டு அவர் காற்சுவட்டைத் தமது மார்பிலே குறித்து மருதப்பிரான் திருவருளைச் சிந்தித்துத் துதித்திருந்தார். சமயங்கள் பலவகைப் படுமாயினும் அவை யனைத்தும் சிவபிரானையே குறிக்குமென்றும், சமயந்தோறும் வேறுவேறு தெய்வங்கள் கூறப்படினும், அரசனும் அரசிளங் குமரரும் மந்திரிமாரும் சேனுபதிகளும் முதலியோ ரனைவரும் அரசனை யன்றி யில்லாத வாறுபோல அவை யனைத்தும் சிவபிரானை யன்றியில்லை யென்றும் உணர்த்தும் பாக்

கள்பாடி அங்கேயே சிலநாள் தங்கிப் பின் பிரியா விடை பெற்றுத் திருவருட்குறிப்பினாலே திருக்குடந்தைக்குப் போய் அன்பினாலே அத் தலத்துக் கோயில் கொண்ட சிவபிரான்மேல் பல தோத்திரங்கள் சொல்லி, அவ்வூர்விட்டுச் சிவஸ்தலங்கள் பல தரிசித்துத் திருவாரூருக்குச் சென்று அங்குச் சிறிது காலந் தங்கினார். அக்காலத்து அங்கு இறந்து கிடந்த சிறுவனைப் பார்த்து 'எருவாய்க்கு' என்னும் செய்யுளைப் புகன்றார். பின்னர்ப் பாண்டிநாடு சென்று மதுரையிற் சொக்கநாதரைத் துதித்துப் பின் மலைநாட்டிலுள்ள ஸ்தலங்களையும் தரிசித்து ஆங்காங்கே பாடல்கள் திருவாய்மலர்ந் தருளினார். இவ்வாறு திவ்யதேச சஞ்சாரஞ்செய்த அடிகள் மீண்டும் திருவிடை மருதூர்க் கெழுந்தருளி நெடுநாள் அங்குத் தங்கிப் பின் மருதப்பிரானிடத்துப் பிரியாவிடை கொண்டு திருவெண்காட்டுக்குச் சென்று அத் தலத்துச் சிவபிரானை வணங்கினார்.

சேந்தனார் வரலாறு

அத் தருணத்திலே அடிகளுக்கு மந்திரியாயிருந்த சேந்தனார் புத்திரன் வந்து அவரடியிற் பணிய, அவர் 'நீ யார்' என, அவன் தான் இன்னனென்று தெரிவித்து, 'என் தந்தையார் அரசன் குரூரத்தால் விலங்கிடப்பட்டுச் சிறைச்சாலை வாசமாயினார், அவரைச் சிறைநீக்கல் வேண்டும்' என்று பிரார்த்தித்தான். அடிகள் சிவசந்நிதி விட்டகன்று புறத்தே வந்து,

மத்தளை தயிருண் டானும் மலர்மிசை மன்னி னானும்
நித்தமுந் தேடிக் காணா நிமலனே அமல மூர்த்தி
செய்த்தலைக் கயல்பாய் நாங்கூர்ச் சேந்தனை வேந்த னிட்ட
கைத்தளை நீக்கி என்முன் காட்டுவெண் காட்டு ளானே.

என்னும் பாடல் பாடி முடித்தவுடனே சிவகணங்கள் சென்று சேந்தனாரைச் சிறைமீட்டு அடிகள் முன் கொண்டுவந்து நிறுத்தின. சேந்தனார் அடிகளைத் தொழுது விழுந்து எழுந்து ஆனந்தக் கூத்தாடினார். சிவபிரானுக்கு மெய்யன்பராகிய இருவரும் தோத்திரங்கள் பாடினர். அதன்பின் சேந்தனார் அடிகளைப் பணிந்து, 'அடியேனை அரசன் சிறைச்சாலையி னின்று மீட்டருளியதுபோலவே இச் சரீரமென்னும் சிறைச் சாலையி னின்றும் மீட்டருள வேண்டும்' என, அடிகள் திருவுளங் களித்து, 'காட்டிற் சென்று விறகொடித்து எடுத்துக் கொண்டுவந்து அவ் விறகு விற்று வரும் பொருளைக் கொண்டு ஓர் அடியார்க்குத் தினம் அமுது செய்விப்பீர்' என்று உபதேசித்து அங்கு நின்றும் அகன்றார். சேந்தனார் இந்நோன்பை அநுஷ்டித்து வரும் நாளில், ஒருநாள் காட்டுக்குச் சென்றவர் கட்டுச் சோற்றை ஒருபக்கத்துத் தொங்கவிட்டுத் தாம் வாயைத் திறந்துகொண்டு நித்திரை செய்தார். அப்பொழுது வாயிலே சோற்றுப் பருக்கைகள் ஒவ்வொன்றாய்ப் பிதிர்ந்து விழ அவர் அஞ்சி, 'இக் கல் எம்பெருமானுக்கு' என்றார். நடராஜமூர்த்தி அச் சாத முழுதையும் உண்டருளினார். சேந்தனார் நித்திரையில் தம் வாயில் விழுந்தது கல்லென்று நினைத்துத் தாம் உண்பது எதுவாயினும் கடவுளுக்கு அர்ப்பித்துப் பின் உண்ணுதலே தமது நியமமாதலால் 'இஃது எம்பெருமானுக்கு' என்றார். அதே காலத்தில் பத்தியோடு சிவபூசனை புரிந்து பூசனை முடிவில் சிதம்பரத்துக் கோயி லாராய்ச்சிமணி யோசை கேட்கும் வழக்கமுடைய செல்வச் சோழன் அவ்வோசை கேட்டிலனாய் அயர்ந்து வருந்தினான். நடராஜமூர்த்தி அவ

னுக்குச் சேந்தனா ரன்பைக் கனவிற் சென்றுணர்த்த, அவன் அதனை உலகமெல்லாம் அறியச் செய்தான். அறிஞர்க ளெல்லாரும் சேந்தனாரையும் அவர் குரு வாகிய திருவெண்காட் டடிகளையும் செல்வச் சோழ னையும் கொண்டாடினார்கள். பின் சேந்தனார் சிதம் பரத்துக்குச் சென்று, அங்குத் 'தடைப்பட்டுச் செல் லாதிருக்குந் தேர் செலனுமபடியாகப் பல்லாண்டு பாடுக' என நடராஜமூர்த்தி ஆஞ்ஞைதரத் திருப்பல் லாண்டு பாடிப் பின்பு திருவிடைக்கழியில முருகப் பிரானுக்குத் திருவிசைப்பாப பாடி, திருவெண்காட் டடிகள் கருணை செய்யத் திருச் சிற்றம்பல முடையா ரது திருவடி நீழலை யடைந்தார்.

பின் அடிகள் சீகாழிக்குச் சென்று தோணியப் பரைத் தரிசித்துத் துதிகள் சொல்லி விடைகொண்டு வேறு பலதலங்களையுந் தரிசித்துச் சிதம்பரத்தை நோக்கிச் சென்றார். அத் திவ்ய ஸ்தலத்தைச் சமீ பித்தவுடனே மனத்தில் ஆனந்தம் பொங்க நடந்து ஊருட் பிரவேசித்துத் திருக்கோயிலை யடைந்து கோபுர நிலையைக் கண்டு, கோபுரம பூமியி லிருக்கவும் அதன அடிப்படை பாதலத்திலும் உசசி விண்ணுல கத்திலும் இருக்குமென் றாகிக்க விருத்தலால், 'இது மூவுலகத்திலும் பொருந்தி யுள்ளது' என்று அதி சயத்துடன் பார்த்துச் சிவகங்கையில் ஸ்நானஞ் செய்து பொன்னம்பலத்திற் புகுந்தார். புகுந்தவர் முற்காலத்துத் தேவரும் முனிவரும் கண்ட அற்புதங் களைக் கண்டு பேரானந்தக் கடலி லாழ்ந் திருந்தார். அவர் அங்குத் திருநடனந் தரிசிக்குங் காலை ஆகாய லிங்க தரிசன மாயிற்று. அச் சமயத்தில் திரு விசைப்பாவாகிய அருமையான 'பூமேலயனறியா'

என் றாரம்பிக்கும் கோயி னான்மணிமாலை சொல்லி முடித்து விடைபெற்றுச் சென்று, 'பன்னக வாடகப் பொற்பாத' மெனப் பாட, சிவகாம சுந்தரியார் அவர்க்கு உணவு கொடுத் தருளினார். எல்லாரும் அறிய அவர் கொடுத்தருளிய அன்னத்தை அடிகள் புசித்துத் திருவருளும் மிகப்பெற்று மீண்டும் கனக சபைக்குச் சென்று தரிசித்து இறுமாந் திருந்தார். பின் அவர் சிறிதுகாலம் சிதம்பரத்திலேயே வீடு தோறும் பிச்சை யேற்றுண்டு களித்திருந்து, 'வான் றேடு மறையேயோ' என்றெடுத்து, 'நான்றேட நானோ ரோ நானோரோ' என்று முடியும்படி ஓர் அழகிய செய்யுள் புகன்று நடராஜரிடத்து விடை கொண்டு வட திசையிலுள்ள ஸ்தலங்களைத் தரிசிப்பான் வழிக் கொண்டார்.

திருத்தினைநகர், திருப்பாதிரிப் புலியூர் என்னுந் தலங்களைத் தரிசித்து, கெடில நதியில் ஸ்நானஞ்செய்து கன்னிவன நாதரைப் பணிந்து பின் திருவதிகை சேர்ந்தார். அங்குச் சில பாக்கள் பாடி, திருவெண்ணெய் நல்லூர்ச் சிவபெருமானை வணங்கி விடைபெற்று, திருவண்ணாமலையைச் சார்ந்து அருணசலேசுரரை அகக் களிவோடு தொழுது அங்கு நின்றும் புறப்பட்டுப் பல தலங்களுக்கும் போய் ஆங்காங்கே பல தமிழ்ப் பாடல்களும் பாடி, காஞ்சிபுரத்துக்கு எழுந்தருளினார். அங்கே ஏகாம்பரநாதர் சந்நிதியில் நின்று புலன்களைந்தும் ஒடுங்கி மனமுருகி, 'தமியேன் நின்கோலமா யிருக்குமாறு வரமளிப்பாய்' என்று துதித்து, காமாக்ஷியம்மையார் சந்நிதிக்குச் சென்று அவரைப் பலபட ஏத்தினார். திருவேகம்ப

முடையார்க்கு 'மெய்த்தொண்' டென்று தொடங்கும் ஓர் அந்தாதியும், 'மெய்நாட்டோர் நகைக்க' என்னும் மாலையும் அருளிச் செய்தார். அடிகள் அந் நகரத்தில் இருக்கும் நாளில் ஒருநாள் இரவு, அக்கினி வந்து வயிற்றில் புகுந்தது போன்று பசி தோன்றி அவரை வாட்ட, அவர் அவ் வயிற்றுக்கு எவ்வளவு சமாதானஞ் சொல்லியும் அது கேட்டிலதாகவே, அவர் அருகிலிருந்த ஒரு வீட்டிற்குச் சென்றனர். அவ் வீட்டில் விளக்கில்லை, இரவும் நள்ளிரவாயிற்று. இவர் வாய் திறவாமல் கைகொட்டிப் பிச்சை வேண்டும் என்று குறிப்பிக்கவே, 'இவன் மனிதர் அரவத்தை ஆராயும் காமக்கள்ளன்' என நினைத்த அவ் வீட்டி லிருந்த மூடன் அந்தோ இவரை நன்கு புடைத்தான். அயல் வீட்டான் இவ் வரவங் கேட்டு ஓடிவந்து அடிகளைக் கண்டு, 'பாவி! என்னகாரியஞ் செய்தாய்!' என்று அக் கொடியோனைக் கண்டித்து, அவரை யுடன்கொண்டு சென்று, உடலைத் தடவிக்கொடுத்து நல்ல உணவளித்துப் பணிந்தான். அடிகள் 'நீவிர் இருவீரும் அவரவர்க்குத் தக்க பயனடைந்தீர்' என் றுரைத்தார்.

பின் அவர் அங்கு நின்றும் புறப்பட்டுத் திருவாலங்காடடைந்து இரத்தின சபாபதியைத் தரிசித்துத் திருக்காளத்தியை யடைந்தார். அங்கு 'இல்லம்' என்று தொடங்கும் பாட்டை யுரைத்து விடைகொண்டு அநேக தலங்களை இடையில் வணங்கித் திருவொற்றியூர் போய்ச் சேர்ந்து தியாகேசப் பெருமானைப் பலபடத் துதித்து வணங்கி அங்கேயே தங்கியிருந்தார். அக் காலத்து 'இருநிலமடந்தை' என்று தொடங்கும் ஆசிரியப்பாக்கள் பதினொன்று லாகிய

திருவொற்றியூர்த் தோகை என்னும் திருவிசைப்பாப் பாடிப் பேரின்பப் பேறுகளை யெல்லாம் பெற்றார். பெற்றவர் நாள்தோறும் ஸ்ரீபஞ்சாக்ஷரங் கொண்டே தம் நியமங்களையும் பூசைகளையுஞ் செய்வாராயினர். ஒற்றியூர்ப் பெருமானும் அடிகளுடைய ஆன்மாவைத் தம் மயமாக்கி அவர் சரீரமும் தாமாகவே விளங்கினார். அடிகள் ஒருநாள் கடற்கரைக்குச் சென்று அங்கு மணற்பரப்பிலே சிறுவர் ஆடிப் பாடிக் களித்தலைக் கண்டு தாமும் அவர்கள் தன்மையைப் பெற்று ஆடல் பாடல் செய்யத் தொடங்கினார். விளையாடுபவர் திடீரென ஒரு மணற்குன்றில் மறைந்து வேறொரு பக்கம் வெளிப்பட்டார். அச் சிறுவர் அதிசயித்து நின்றனர். பின் அடிகளே வேண்ட அவர்கள் அவரை மீண்டும் புதைக்க, அவர் உடனே வலப்பக்கத்துத் தோன்றினார். இப்படிப் பலதரம் மணலிற் புதையுண்டு எழுந்து எழுந்து வந்தவர் இறுதியில் பட்டினத்துப் பிள்ளையார் என்று சொல்லுதற் கேதுவாயிருந்த தவ வடிவம சிவலிங்கமாக மணலில் முளைத்தார். அதனைக் கண்டதும் சிறுவர் ஓடி ஊரார்க்குத் தெரிவித்தனர், ஊரார் போய்ப்பார்த் ததிசயித்தனர். மற்றை யூராரும் இதனைக் கேள்வியுற்று ஒற்றியூர் சென்று கடவுளான பட்டினத்தடிகளைத் தரிசித்தனர். காவிரிப்பூம் பட்டினத்தாரும் கேட்டு மகிழ்ச்சியும் ஆச்சரியமும் மெய்தினர். சில பெரியோர் அடிகளுக்குப் பூசை யியற்றிப் பணிதற் பொருட்டு ஒற்றியூரிலேயே வசித்து இம்மை மறுமை யின்பங்க ளிரண்டையும் குறைவற அடைந்தனர்.

# திருவெண்காட்டடிகள் சரித்திரம்

பத்தொன்பதாம் நூற்றூண்டில் சிறந்து விளங்கிய புலவருள் ஒருவரான தொழுவூர் வேலாயுத முதலியார் செய்த திருவெண்காட்டடிகள் சரித்திரம் பட்டினத்துப் பிள்ளையார் சரித்திரத்தை விரித்துரைக்கும் ஒரு வசனநூல். ஆசிரியர், தம் முகவுரையில், பட்டினத்துப் பிள்ளையார் வேளாளருள் வேளாண் செட்டி வகுப்பைச் சேர்ந்தவரென்றும், இவர் சரித்திரத்தைக் கூறும் நூல்கள் தமிழிலொன்றும் வடமொழியிலொன்றும் உள்ளன வென்றும், தமிழிலுள்ள புராணம் காலக்கிரமத்தில் பல வழுவுற்றுச் சிதைந்தமையின் பெரும்பயன் செய்யாதாயிற்றென்றும், அப் புராணமுடையார் தமக்கு முன்னூல் இல்லையெனவும் தாம் பெரியார் வாய்ச்சொல்பற்றியே சரித்திரம் உரைப்பதாகவும் சொல்லினரென்றும், அன்றியும் அவர் வடமொழியிற் புராணமில்லையெனக் கூறினரென்றும், தமக்குக் கிடைத்த வடமொழி யாதாரம் பவிஷ்யோத்தர புராணத்துள் திருவிடைமருதூர் மான்மியமென்றும் கூறினர். இன்னும், திருப்புகழ் செய்தருளிய அருணகிரிநாதர் பட்டினத்தடிகட்கு மகவாக உதித்த வரலாற்றுக்குப் புராணங்களுள் ஆதாரமில்லாமையால் தாம் அதனை விட்டதாகவும் உரைத்தார். பட்டினத்தடிகள் ஞானோபதேசம் பெற்ற வரலாற்றைப்பற்றிப் புராணங்களிரண்டும் ஒருவழியா யுரைப்ப, சில பெரியர்,

திருவேட மாகித் தெருவிற் பயின்றெனைத் தேடிவந்து
பரிவாகப் பிச்சை பகருமென் குருவைப் பதம்பணிந்தேன்
கருவாகு மேதக் கடற்கரை மேலக் கருதுமென்னை
யுருவாக்கிக் கொள்ளவல் லோவிங்ங னேசிவ னுற்றதுவே

என்ற அவரது செய்யுளைப்பற்றி அடிகள் வழக்கப்படி அடியவர் பூசைசெய்யும் நிமித்தம் தேடிச் சென்றிருக்கையில் சிவபெருமான் அடியவர் கோலத்துடன் அவரது மனைக்குச் சென்று காதற்ற வூசியும் ஓலையுங் கொடுத்து இருந்தபடி பாவனை தீக்ஷைசெய்து மறைந்ததாக வுரைக்கின்றனர் என்றும் சொல்லினர். இவ்வசனசரித்திரம், ஆசிரியரே கூறுமாறு, தமிழ்ப் புராணக் கருத்தையுந் தழுவி வடமொழிப் புராண சரித்தை முற்றுங்கொண்டு அடிகள் திருப்பாடற் சரித்திரங்களை நல்லோர்பால் விசாரித்து எழுதியபடி யென்றுணர்தல்வேண்டும.

திருவெண்காடர் சரித்திரம் * கி. பி. 1886-ல் வெளிவந்த வசனநூலாயினும் அது பிராசீன புராணவொழுங்கை யநுசரித்தே யெழுதப்பட்டுளது. இக்கதை பூர்வத்தில் நைமிசாரணியத்திலே ஸ்ரீ உபமன்னிய பகவான் தம் மாணுக்கராகிய பல முனிவர்களுக்கும் கூறியதாகப் பவிஷ்யோத்தர புராணத்தில் உரைக்கப்பட்டதாம்.

சிவபிரான் உலாப்போதல்

'முன்னொருகாலத்தில் புண்ணிய மேலீட்டாற் குபேர பதவியைப் பெற்றிருந்த ஒருவர், சரியை கிரியை யோகமென்னும் மூன்று மார்க்கங்களுள் சகமார்க்க மெனப்படும் யோகத்தை யநுஷ்டித்துச் சிவனுடைய தோழனென்று உலகு புகழ அப் பிரா

னிடத்து அன்பும் நண்பும் பெருக வாழ்ந்திருந்தார். அவர் ஒருநாள் ஸ்ரீ கைலாசத்திற்குச் சிவதரிசனஞ் செய்யும்படி சென்றார். சிவபெருமான் தமது கணங்களோடும் தேவர் முனிவரோடும் இக் குபேரத் தோழரோடும் உலாப்போந்து, கேதாரம், காசி, காளத்தி, காஞ்சி முதலிய மஹாக்ஷேத்திரங்களைக் கடாக்ஷித்து, கடைசியில் ஸ்ரீ சிதம்பர மஹாக்ஷேத்திரத்தில் வீற்றிருந் தருளினார். அந் நாளில், குபேரனார் சிவ சந்நிதியை யடைந்து மற்றைய திருப்பதிகளையும் தரிசித்தற்கண் தமக்குள்ள பேரவாவை வெளியிட்டார். சிவபிரானும் தமது தோழர் குறையை முடிக்கத் திருவுளங்கொண்டு பரிவாரங்களோடு சிதம்பரத்தினின்றும் எழுந்தருளிச் சுவேதாரணிய மென்னும் திருவெண்காட்டை யடைந்தார்.

அப்போது, குபேரனார் யோகம்முற்றி ஞானத்தைப் பெறும் பக்குவமடைந்திருந்தன ராதலின், அத் திருவெண்காட் டருகில் செல்வம் அழகு முதலியவற்றால் தேவருலகினையும் வெல்லும் காவிரிப்பூம்பட்டினத்தைக் கண்டார். கண்டதும் இவர் கண்ணையும் மனத்தையும் அது கவர்ந்தது. இவர்க்கு அதனைவிட் டப்பாற் செல்ல விருப்பமில்லை. இவர் தம்முடைய மனநிலையைச் சிவபிரானுக்கு அறிவித்து, அப் பதியிலே சிலநாள் வசிக்க விடை வேண்டினார். சிவபிரானும் வினைப்பயனை நாடி, 'நீ மானுடயாக்கையை யடைந்து இங்கு வாழ்தி' என்றருளிச் செய்தார். மானுடயாக்கை யென்றவுடனே அஞ்சி நடுங்கிய குபேரனார், தாம் செல்வத்தால் மயங்கும் வழித் தம்மை வந்து ஆண்டருள வேண்டுமென்று சிவபிரானைப் பிரார்த்

தித்தார். சிவபிரானும் அங்ஙனமே யாகுகவென்றுரைத்துத் தாம் தம் பரிவாரங்களோடு இதர தலங்களைக் கண்டு கைலாசத்துக்கு மீண்டார்.

திருவெண்காடர் பிறப்பு

காவிரிப்பூம் பட்டினத்திலே தங்கிய குபேரனார் தாம் யாரிடத்துப் பிறப்பது என்று ஆலோசனை செய்திருக்குங்கால் அவ்வூரிலே வைசிய மரபில் கல்வி யறிவொழுக்கங்களால் மேம்பட்ட சிவ நேசரும் அவரது அரும் பத்தினியாகிய ஞானகலை யம்மையாரும் ஒரே பெண்ணைப் பெற்றுத் திருப்தியடையாதவராய் ஆண் மகப்பேறு விரும்பிப் பல தவங்களியற்றி வருதலைக் கண்டார். இதுவே தமக்குப் பிறப்பதற்குத் தக்க இடமென் றுணர்ந்த குபேரனார் அவ் வண்ணமே அவ்விருவர்க்கும பிள்ளையாய்ப் பிறந்தார். அவர்க்குத் திருவெண்காடர் என்பது பிள்ளைத் திருநாமம்.

வித்தியாப்பியாசம்

திருவெண்காடர்க்கு ஐந்து வயதாகு மளவிலே அவரது பிதாவாகிய சிவநேசர் தேக வியோக மாயினர். பூர்வ புண்ணிய மிகுதியாலே திருவெண்காடர் இளமையிலேயே எல்லாக் கலைகளையுங் கற்று உலக விஷயங்களில் அருவருப்பும் சிவபூசையில் விருப்பமு முற்றிருந்தார். இவ் விருப்பம் முதிரவே தம் பிள்ளை உணவு நித்திரையின்றிச் சோர்வுற்றிருத்தலைக்கண்ட ஞானகலையம்மையார் ஓர் இரவு அவருக்குப் பல இதவசனங்கள் சொல்லி அவரை உண்ண அழைத்தார். அவர், 'தாயே! இப்பொழுது பசியில்லை. நாளை யுண்ணுவேன்' என்று சொல்லிவிட்டு உறங்கிக் கிடந்தார்.

அவ்விரவில் சிவபிரான் ஒரு விருத்த வேதியர் வடிவினராய் அவர் கனவில் வந்து
கனவு
அவர் சொல்லிய உபசார மொழிகளைக் கேட்டு மகிழ்ந்து, 'நாளை திருவோணத்தோடு கூடிய சோமவாரம் மஹாப்பிரதோஷ காலமாயிருத்தலால், அடுத்த திருவெண் காட்டுக்குச் சென்று சுவேதாரணியப் பெருமானையும், உமா தேவியாரையும் விதிப்படி வணங்கிக் காத்திருப்பையாயின் அங்கொரு வேதியர் வந்து உனக்குப் பூசித்தற் குரிய சிவலிங்கப் பெருமானை எழுந்தருளப் பண்ணிக்கொடுத்துத் திருவைந் தெழுத்தினையும் உபதேசிப்பர். நீ அவற்றைப் பெற்றுப் பூசித்துப் பரிபாகமுற்றுச் செல்வமனைத்தும் பெற்றுப் பேரின்பமடைந்து நீடூழி வாழ்க' என்று ஆசிர்வதித்து மறைந்தருளினர். இவர் விழித்தெழுந்து, 'இஃதெல்லாம் கனவேயோ!' என்று இரங்கினர். தம் அருமைப் புத்திரர் உணவின்றிச் சோர்ந்துறங்குதலைக் கண்டு கவலையுற்று அவரருகிலேயே படுத்திருந்த ஞானகலையம்மையார், என்ன நேர்ந்ததென்று இவரை வினவ, இவர் தாம் கண்ட கனவைத் தாயார்க் குரைத்தார். அவ்வம்மையாரும், 'நீ பாக்கியவான். உனக்குச் சிவனருள் கிடைக்குங் காலம் கிட்டியது. கனவில் ஆஞ்ஞாபிக்கப் பட்டபடியே நடத்துவாய்' என்று தேற்றிப் பின் சற்றுலோசித்து, 'உன் இவ்விளமை சிவபூசை தொடங்கும பருவமன்று, சிறிதுகாலம் தாழ்த்து அதனைத் தொடங்கில் நன்று' என்றனர். திருவெண்காடர் தமக்கிருந்த பக்தி சிரத்தையைத் தம் தாயார்க்கு வெளிப்படையாகக் கூற, அவரும் 'அங்ஙனமேயாகுக' என்று விடைகொடுத்தனர். போதும் விடிந்தது.

ஞானகலையம்மையார் எழுந்து காலைக் கடன்களைக் கழித்து, பெரியோர்களை வரவழைத்து அவர்களுக்குத் தம் பிள்ளை கண்ட கனவைச் சொல்லி அபிப்பிராயம் உசாவ, அவர்களெல்லாரும் அத்தியாச்சரியமடைந்து, 'இப் பிள்ளை முற்றவ முண்மையால் இச் சிறு வயதிலேயே சிவனருள் பெற்றது. அது கருதியதற்கு ஒன்றும் தடை சொல்லலாகாது' என்றுரைத்தனர். அப்போது அங்கு வந்த திருவெண்காடர் தமது தாயாரை முன் திருவெண்காட்டுக்குப் போகும்படி செலுத்தித் தாம் சிவார்ச்சனைக்குரிய திரவியங்களோடு சிவநேசப் பெரியார்களைத் துணைக்கொண்டு அத் திருப்பதிக்குப் போயினர். அங்கு ஸ்நானஞ் செய்து கோயிலிற் சென்று மூர்த்திகளுக் கெல்லாம் வழிபாடாற்றி ஆசிரியர் வரவு நோக்கி நின்றனர்.

குரு வருகை

அப்பொழுது பிரமசாரியாகிய சிவப் பிராமணரொருவர், 'திருவெண்காட்டுப் பிள்ளையார் எங்கே?' என்று அங்கிருந்தாரை வினவிக்கொண்டே ஆலயத்துள் பிரவேசித்தனர். ஓரிடத்தில் பிள்ளையார் தம் தாயாரோடு சிவார்ச்சனைக்குரிய திரவியங்களைச் சேகரித்துக்கொண்டிருந்தவரை அப் பிரமசாரி கண்டு, அவர் முகக்குறி முதலியவற்றால் இவரே நாம் தேடிவந்த பிள்ளை என்று நிச்சயித்து அவரிடத்துச் சென்று, 'உன்னைப் பார்க்கவே நாம் இங்கு வந்தோம். உன் கருத்து நிறைவேறுங்காலம் அடுத்தது' என்று இன்மொழி புகன்றார். திருவெண்காடர் அவரை நன்கு நோக்கி, 'நம் கனவு நனவாயிற்று. இவர் நம்மை ஆட்கொள்ள வந்த குருவே' என்று தெளிந்து பலமுறை வணங்கினார். அவ்வாசிரியர் மனங்கனிந்து, 'குழந்தாய், யான்

இருப்பது புலியூர். நேற்றிரவு இங்கு வந்தேன். எனது கனவில் சிவப்பிராமண ரொருவர் வந்து, "நாளையுதயத்தில் திருவெண்காட்டுக்குச் செல்வா யாயின் அங்கே திருவெண்காடன் என்னும் ஓர் உத்த மச் சிறுவன் தாயோடு வந்திருப்பான், அவனுக்குச் சிவதீக்ஷை செய்து ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை உபதே சித்து, இந்தச் சம்புடத்தை அவனிடத்திற் கொடு. இதனுள்ளே முற்பிறப்பில் அவன் பூசித்த ஆன் மார்த்த லிங்க மூர்த்தி யிருக்கின்றது. இதனைத் திறந்து பார்க்க யாவராலும் முடியாது. அவன்கை பட்டால் இது உடனே திறக்கும். ஆதலால் இதனை அவனிடத்திற் கொடுத்து, பூஜைவிதியையு முணர்த்தி ஓர் மண்டலம் அவனோடு நீயிரு" என்று விதித்தார். யான் அவரை "நீர் யார்?" எனக் கேட்க, அவர் "யாம் எங்கு மிருப்போ மாயினும் திருவிடைமரு தூரில் வசிப்போம்" என்று சொல்லி மறைந்தனர். குழந்தாய், உன்னால் சிவபெருமானை யான்காணப்பெற றேன்' என்று திருவெண்காடரைக் கொண்டாடி, அச் சம்புடத்தை ஒரு பீடத்தின் மேல் வைத்து அதன் மேலே மூடியிருந்த கவுசனையை வாங்கினார். அங் கிருந்தார் அப்பொற் சம்புடத்தைப் பார்த்தவளவில் பிரமைகொண்டவர்களாயினர். திருவெண்காடரோ அதனைக் கண்டவுடனே சிறிதுபொழுது தம்மை மறந் திருந்து பின் தெளிந்து தமது ஆசாரியரைப் பல முறை பணிந்து துதித்தார்.

உபதேசம்

அவர் திருவெண்காடரைக் காவிரிக்கரைக்கு அழைத்துச்சென்று ஸ்நானஞ்செய் வித்து முக்குளநீரிலும் மூழ்குவித் துச் சிவதீக்ஷை செய்து சிவசந்நிதியில் ஸ்ரீ பஞ்சா

க்ஷரத்தை உபதேசித்தார். பின்பு, வேதியரெல்லாங் கூடியிருக்க, அவர் சம்புடத்தின் பெருமையைக் காட்ட வெண்ணி, அவரு ளொவ்வொருவரையும் அதனைத் திறக்குமாறு ஏவினர். அவர்கள் எவ்வளவு முயன்றும் அதனைத் திறக்கமுடியவில்லை. பின் திருவெண்காடரை அவர் ஏவ, இவர் சென்று அதனை வலம்வந்து பணிந்து தம் கையால் தொட்டார். உடனே அது திறப்புற்றது. அதனுள் பேரொளியுடையவாய்க் கண்டவர் கண்ணை யும் மனத்தையுங் கவரும் சிவலிங்கமூர்த்தி யொன்றும் விநாயகமூர்த்தி யொன்றும் காணப்பட்டன. அவற் றைக் கண்டோர் அதிசயித்துத் திருவெண்காடர் தவத்தைக் கொண்டாடினர். ஆசாரியர் இவரை நோக்கி, 'இன்று நற்றினமாதலால், உன்னுடைய ஆன்மார்த்தத்தைப் பூசிக்கக்கடவை. பூசை ஆரம் பித்தற்கு முன் சுவேதாரணியேசுரர்க்கும் பிரம வித்தியா நாயகிக்கும் விதிப்படி அபிஷேகாதி செய் வித்திடுக. இன்னும், சிவனடியாரையும் முன் பூசிக்க வேண்டும்' என்று ஆஞ்ஞாபித்தார். திருவெண்காடர் அவ்வாஞைஞயைச சிரமேற்கொண்டு திருவாலயத் தில் அபிஷேகாதிகள் நடப்பித்துச் சிவனடியார்களை யும பூசித்துப் பின் தம் ஆன்மார்த்த பூசை தொடங்கி, ஆசாரியர் உடனிருந்து காட்ட அதனைக் கிரமமாகச் செய்துமுடித்தார்.

சிவனருளாற் பொருள் பெறுதல்

அப்பால் திருவெண்காடர் தமது ஆசாரிய ருக்கும் சிவனடியார்க்கும் தக்ஷிணை கொடுக்க எண்ணித் தம் தாயாரை யடைந்து பொருள் வேண்டி யிருத்தலைத் தெரிவித்தார். அவர் தம் இல்லாமை

யைச் சொல்லி மனம் நோவ, இவரும் மனமுளைந்து தம் வறுமைக்கு இரங்கித் தம் அந்தரியாமியாகிய கடவுளுக்கு இதனை விண்ணப்பித்துச் சிவத்தியானத் தோடு உறங்கிக்கிடந்தனர். இவர் தாயாரும் அருகே கவலையோடு நித்திரை செய்தனர். சிவபெருமான் திருவெண்காடர் கனவில் ஒரு விருத்தவேதியர் வடி வோடு தோன்றி, 'குழந்தாய், நீ வருந்தற்க. உனக்கு வேண்டிய பொன் முதலியன உன் மனையில் முன் னமே அடைந்துள்ளன. நீ உன் ஆசாரியருக்கும் சிவ னடியார்க்கும் அவர் வெறுப்பத் தக்ஷிணை கொடுத்து மகிழ்க' என்று சொல்லிவிட்டு மறைந்தார். கனவு கண்டவர் உடனே விழித்து உட்காந்திருத்தலைப் பார்த்த தாயாரும் எழுந்து 'என்ன கவலையுற்றாய்?' எனக் கேட்க, அவர்க்குத் தம் கனவை யுரைத்தார் திருவெண்காடர். அப்பொழுது விடியுந் தருண மாயிற்று. காவிரிப்பூம்பட்டினத்தில் இவர்கள் மனை யில் காவல்பூண்டிருந்தவரிற் சிலர் ஓடிவந்து, 'பூட்டிட் டிருந்த தங்கள் மனையுள்ளே நள்ளிரவில் ஒரு பெருஞ் சோதி யுண்டாயிற்று. எங்கள் கண்கள் கூசின. அவ்வொளி இன்னும் மாறவில்லை' என்று விண்ணப் பித்தனர். திருவெண்காடரும் அவர் தாயாரும் காலைக்கடன்களை முடித்துத் தம் மனையிற் புகுந்து பார்க்க, மனையெங்கும் நிதிக் குவியலா யிருந்தது. அவர்கள் அவற்றைப் பூசித்துப் பின் தங்களுக்கு அன் றைக்கு வேண்டிய பொன்னுதி யெடுத்துக்கொண்டு திருவெண்காட்டுக்கு மீண்டனர். அங்குத் திருவெண் காடர் தமது ஆசாரியருக்கும் சிவனடியாருக்கும் சர்வ உபசாரங்களும் செய்து மகிழ்ந்தார்.

ஆசாரியராக வந்த பிரமசாரியார் ஒரு மண்ட
மணம்
லம திருவெண்காடரோ டிருந்து
விட்டுத் தம் இச்சைவழி போயினர்.
திருவெண்காடர்க்குக் காளைப் பருவம் வருதலும், அவர் தாயார் அவர்க்கு மணமுடித்தலைப் பற்றிச் சிந்தித்திருக்குங் காலத்து, அவ்வூரிலேயே சிவசிதம்பரச் செட்டியாரென்னும் பெருஞ் செல்வர், தம் அருமைக் குமாரியாகிய சிவகலை யம்மையார்க்குத் திருவெண்காடரே தக்க கணவர் என்று நிச்சயித்திருந்ததைக் கேள்வியுற்று அவரிடத்து மகட்பேசி யனுப்பிச் சர்வாடம்பரத்துடனும் மணத்தைச் செய்து முடித்தனர். சிவபெருமானை வழிபடுதலும் சிவனடியாரை யுபசரித்தலும் நியமமாகக்கொண்டு இல்லற நடத்தும் திருவெண்காடர் வாணிபத்தில் மிகச் சிறந்து பொருளை அளவின்றியீட்டிப் பெருஞ்செல்வராய் வாழ்ந்து வந்தார். ஆயினும அவர்க்கொரு குறை ஏற்பட்டது. அவர்க்கு வயது முப்பத்தைந்தாகியும் மக்கட்பேறு கிடைத்திலது. அதனால் அவர் மனம் வருந்தித் தம் குறையைத் தம்மை ஆளுடைய திருவிடைமருதுாருடையார்க்கு விண்ணப்பித்து வழக்கமபோலவே தான தருமங்களைச் செய்துவந்தார்.

அக்காலத்தில், திருவிடைமருதூரில் சிவபத்தி
சிவசருமர்
அடியார் பத்தியிற் சிறநத சிவப்
பூஜைத்திறம்
பிராமண ரொருவர் இருந்தார். அவர் பெயர் சிவசருமர். அவர் தம் மனைவியாராகிய சுசீலை யம்மையாரோடும் இல்லறம் வழுவாது நடத்திக் காலங்கள்தோறும் மகாலிங்கநாதரை விதிப்படி அருச்சிக்கும் நியமமுடையவர். அவர் தமது பெருஞ்செல்வத்தை யெல்லாம் சிவார்ச்

சனைக்கும் மகேசுர பூஜைக்குமே செலவிட்டு வந்தார். சிவபெருமானருளால் சிறிது நாளில் அவர் செல்வமெல்லாம் கரைந்துபோயிற்று. ஆயினும் அவர் தம் நியமத்தில் தவறினாரல்லர். ஒருநாள் சிவபூஜைக்குத் திரவியமின்றி அவர் வருந்தியபொழுது அவர் மனைவியார், 'குழந்தைகட்காக எடுத்துவைத்த பண்டங்கள் உள்ளன. அவற்றைக் கொண்டு இன்று சிவ பூஜை புரியலாம்' என்றனர். அவரும் அதுகேட்டு மகிழ்ந்து திருக்கோயிலை யடைந்து பூஜையைக் கிரமப் படி செய்து, அடியார் பூஜை செய்தற்காக மனைக்குத் திரும்புங்காலையில், திருவிடைமருதூருடையார் மிகப் பசித்த ஒரு விருத்தவேதியர் வடிவினராய் வந்து சிவ சருமரை நோக்கிப் 'பசி தீர்ப்பாயோ' என்ன, அவர் 'மனைக்கு வாரும்' என்ன, 'மனைசேருமளவும நான் பசி பொறுக்க வல்லேனல்லன்' என்று அவ் விருத்தர் சொல்ல, சிவசருமர் அவர்க்கு அவ்விடத்திலேயே உண்டி பரிமாறினர். விருத்தர் நூறடியார்க்காகச் சிவசருமர் கொண்டுவந்த உண்டி யத்தனையும் தாம் ஒருவரே யுண்டுவிட்டு மறைந்தார். சிவசருமர் இங்ஙனம் வந்தவர் கடவுளே யென்றுணர்ந்து மகிழ்ந்திருந்தார். அப்பொழுது வீட்டிலிருந்து அடியார் பசித்திருக்கின்றனரென்று செய்தி வர, சிவசருமர் சென்று தம் மனைவியார்க்கு நடந்த சங்கதியை யுரைத்தார். அவரும் இது சிவலீலையென் றுணர்ந்து, தம் மங்கலியத்தின் பொன் உருவைக் கழற்றி அவர் கையிற் கொடுத்து, அவர் அதனை விற்று உண்டிக்காகும் உபகரணங்கள் கொண்டுவர, விரைவிற் சமைத்து அடியார்க்குத் திருப்தி வருவித்தனர். அன்றிரவு துயின்று மறுநாள் காலையிலெழுந்ததும், சுசீலை யம்மையார் தம்

கணவரை நோக்கி, 'நம் குறைகளை மகாலிங்கநாத ரிடத்து உரைத்தா லென்ன?' என்னலும், அவர் 'உரைக்கலாம். ஆயினும வெறுங்கையோடு எப்படி ஆலயத்துக்குச் செல்வது?' என, அவ்வம்மையார், 'இன்றைப் பூசைக்கு வேண்டுவன உண்டு' என்றார். சிவ சருமரும் மகிழ்ந்து அவற்றைக்கொண்டு ஆலயத்துக் குச் சென்று பூசித்து, நிவேதனமான அன்ன முதலிய வற்றை அடியார்கள் நிமித்தம் வீட்டுக்குக் கொண்டு போகும்படி பரிசாரகர்க்குச் சொல்லிவிட்டுத் தாம் ஒரு பக்கத்தில் தியானத்திருந்தார். பரிசாரகர்கள் தங்கள் உச்சிக்கடனை முடித்தற்காக அப் பிரசாதங்களை மடைப்பள்ளியில் வைத்துவிட்டுக் காருண்யாமிர்த தீர்த்தத்திற்குப் போயினர். அப்போது சிவபெரு மான் முன்போல விருத்தவேதியா வடிவுகொண்டு சிவ சருமர் முன்வந்து நிற்க, அவர் எழுந்துசென்று மடைப் பள்ளியிலிருந்த அமுதனைத்தையும் படைத்து அவ் வேதியரது பசி தீர்த்தார். வேதியர் இளைப்பாறுபவ ராய் ஓரிடத்தமர்ந்தார். அப்பொழுது சிவசருமர் தமக்குப் பொருள்வேண்டி யிருத்தலை அவர்க்குத் தெரிவிக்கலாமென்று நினைத்தார். அதனை யுணர்ந்த விருத்தவேதியர், 'உம் வீட்டில் அடியார் பலர் காத் திருக்கின்றனர். விரைவிற்போய் அவர்களை உப சரியும்' என்று சொல்லிவிட்டு மறைநதனர். சிவ சருமர் சிவபெருமான் இப்படிக் கணத்தில் மறைந்த தற்குக் கவலைப்பட்டு அவராஞ்ஞைபபடியே வீட்டிற் குச் செல்லப் புறப்பட்டார். மடைப்பள்ளியில் தாம் வைத்துப்போன பதார்த்தங்கள் இல்லாதிருப்பதைக் கண்ட பரிசாரகர்கள் கலக்கமுற்றுச் சிவசருமருக்குச செய்தி சொல்லினர். அவரும், ஒன்று மறியார்போல,

சிவலீலைக்கு யாம் என் செய்யலாமென்று சொல்லி விட்டு அவர்களோடு வீட்டுக்குச் செல்பவர், 'அடியார்கள் பசித்திருப்பார்களே' என்று மிக்க கவலையோடு மெல்ல மெல்ல நடந்தனர். அங்கு அவர் வீட்டில் சிவபெருமான் தாமே சிவசருமராகவும் கணநாதருட் சிலர் பரிசாரகர்களாகவும் திருவுருவந் தரித்து நிவேதனப் பிரசாதங்களை வழக்கம்போல் எடுப்பித்துக் கொண்டுபோய், 'அடியார்கள் அமுது செய்தற்கு இடம்பண்ணு, இதோ வருகிறேன்' என்று சுசீலையாரிடம் சொல்லிவிட்டு வெளியே போய் மறைந்தார். அவ்வம்மையார் அவ்வாறே இடம்பண்ணித் தம் கணவர் மீண்டுவருகையை எதிர்பார்த்திருந்தார். அவர் சிவசருமரைக் கண்டவுடனே 'இதோ வருகிறேன் என்று எங்கே சென்றீர்கள்?' என்ன, சிவசருமர் வியப்படைந்து உட்சென்று தாம்முன் மடைப்பள்ளியில் அடியார்க்காக வைத்திருந்த பதார்த்தங்களிலும் எண்மடங்கு அதிகமான பதார்த்தவகைகள் இருக்கக் கண்டு, 'இஃது எம்மை ஆளுடையார் திருவருள்' என்று தம் மனைவியார்க்குச் சங்கதியெல்லாம் கூறினார். இருவருமாக அடியார்களைப் பூசித்துப் பின் தாமும் சுற்றத்தாரோடு உண்டு மகிழ்ந்திருந்தனர். சுசீலையார்க்கு மாத்திரம் இங்ஙனம் அருள்செய்த பெருமான் சிறிது பொருளளிக்கலாகாதா என்றோரெண்ணம் மனத்தில் நிகழ்ந்தது.

சிவபெருமான் குழந்தையுருக் கொள்ளல்

அன்றிராக் கழிந்து பொழுதுவிடியுந் தருணத்தில், சிவபெருமான் இருவர் கனவிலும் விருத்த வேதியராயெழுந்தருளி, 'அன்புடையீர், கோயிலுக்கணித்தான காருண்யாமிர்த தீர்த்

தக்கரையின் கீழ்பாலுள்ள வில்வமரத்தடியில் நாம் ஒரு குழந்தைவடிவா யிருப்போம். நம்மை நீங்கள் எடுத்துக்கொண்டு போய்க் காவிரிப்பூம் பட்டினத்தில் பிள்ளை யில்லாமல் வருந்தி அருந்தவம் பல செய்யும் திருவெண்காடனிடத்துக் கொடுப்பீராயின் நம்மளவு பொன் அவன் தருவன்; நீங்கள் வறுமை யொழிந்து சுகப்படுங்கள்' என்று உரைத்தனர். சிவசருமர் அதுகேட்டு உள்ளம் பதைத்து, 'அப்படி எம்பிரானை விற்று வருஞ் செல்வம் எமக்கு வேண்டவே வேண்டா' என்ன, வேதியர் 'உத்தமரே, உங்கள் பக்தியை நாம் அறிவோம். முன்னொரு காலத்தில் நமது தோழனாகிய குபேரன் மானுடப் பிறப்பை யடையும்படி நேரிட்டது. அப்போது நாம் அவனுக்குப் புதல்வனாக வருவோமென்று அனுக்கிரகித்திருந்தோம். அதனை நிறைவேற்றுங் காலம் இப்பொழுது வந்ததாகலின் இவ்வாறு உங்களை ஏவினோம். அக்குபேரன் தான் திருவெண்காட னென்பவன். அவனுக்கு மெய்ஞ்ஞான நிலைமையை யனுக்கிரகித்து நாம் எப்போதும்போல மறைந்துவிடுவோம். அக்காலத்தில் உங்களுக்கும் முத்திகொடுப்போம். ஆதலால் நீங்கள் அஞ்சாது நாம் சொல்லியபடி செய்யுங்கள்' என்று விவரமனைத்தும் கூறி அவர்களைத் தேற்றிவிட்டு மறைந்தார். சிவசருமரும் சுசீலையம்மையாரும் எழுந்து தாம் கண்ட கனவுகள் ஒத்திருததலைப் பற்றிப் பேசிக்கொண்டு சிவபெருமான் அருளைக் கொண்டாடி, காருண்ய தீர்த்தக்கரையை யடைந்து நோக்கினர். அங்கு வில்வமரத்தடியில் தெய்வக் குழந்தையைக் கண்டதும் இருவரும் தம்மை மறந்தனர். பின் தெளிவு வர, சிவசருமர் குழந்தையை எடுத்துத் தம்

பனைவியார் கையிற் கொடுத்தார். அவரும் குழந்தையை யணைத்தெடுத்துப் பலவாறு கொஞ்சினார். பின் குழந்தையைப் பார்க்கப் பார்க்க அவருக்கு ஆசை மிகுதலால் 'ஐயோ, இத் தெய்வமணியைப் பிரிந்தும் யான் உயிர் வாழ்வேனோ, பொருள் வேண்டுமாயின் வேறு வகையிற் சம்பாதித்துக் கொள்ளும்' என்று சொல்லி, இருவருமாக வீட்டுக்குப் போக நிச்சயித்தனர். அவ்வாறு போகையில் திசையறியாமல் நெடுந்தூரம் விரைவில் நடந்து காவிரிப்பூம் பட்டினத்தில் ஒரு வீட்டிற்கடுத்த சோலையிற் சேர்ந்தனர்.

திருவெண்காடர் தெய்வக் குழந்தையை ஏற்றல்

இவர்கள் அங்கு வந்து சேருமுன்னமே திருவிடை மருதூருடையார் திருவெண்காடர் கனவினும் அவர் மனைவியார் கனவினும் சென்று இவர்கள் வரவைப் பற்றிச் சொல்லியிருந்தார். ஆதலால் அவர்களிருவரும் இவர்கள் குழந்தையோடு வருதலை எதிர்பார்த் திருந்தனர். இவர்கள் வந்தவுடனே அவர்கள் வந்து இவர்களை உபசரித்து இளைப்பு நீக்கினர். அப்போது திருவருட்செயலால், சுசீலையார் தம் கருத்து மாறிச் சிவகலையம்மையாரை நோக்கி, 'அம்மே! நீர் நல்லவராகத் தோன்றுகின்றீர். இக் குழந்தையோ தெய்வக் குழந்தை. இதனை யாருக்கோ விற்க வேண்டுமென்று எம் கணவர் கருதியிருக்கின்றார். நீர் இதனை எடுத்து வளர்ப்பீராயின் உமக்கு எல்லா நன்மையு முண்டாம். நானும் வேண்டும்போது வந்து பார்த்துக்கொள்வேன்' என்று சொல்லிக் குழந்தையை அவர் கையிற் கொடுத்தனர். அவரும் குழந்தையைப் பிரியமாக எடுத்தணைத்துக் களித்தார். அப்போது சிவ

சருமர் 'இஃதென்ன என் மனைவி செய்த காரியம்! சிவபெருமான் கட்டளையை நாம் மீறலாமோ' என்று சிந்தித்தவராய் ஒன்றும் சொல்லாதிருந்தார். அவர் மனநிலையை யறிந்த திருவெண்காடர் சிவசருமர்க்குப் பலவகை யுபசாரஞ்சொல்லி, 'தங்களை இங்கு வரச்செய்தது திருவிடைமருதுடையாரது திருவருளன்றோ' என்றனர். சிவசருமர் இவரே திருவெண்காடர் போலுமென் றெண்ணினர். சிவகலை யம்மையார் தம் கையி லிருந்த மகவைத் தம் கணவர் கையிற் கொடுப்ப அவர் மகிழ்ச்சியுடன் வாங்கிக் குழந்தையின் பேரழகு நோக்கி இன்ப மிகுதியால் தம்மை மறந்தார். சிறிது நேரம் பொறுத்துத் தெளிந்து குழந்தையைத் தம் மனைவியார் கையில் மீட்டுமளித்து, சிவசருமரையும் சுசீலையாரையும் அழைத்துச் சென்று அவர்களுக்கு ஆதித்தியம் புரிந்து, பின் புத்திரோற்சவங் கொண்டாடினர். அப்பொழுது இவ்விரு தம்பதிகளுக்கு மாத்திரம் கேட்பதாய் 'எம் கட்டளையை உடனே முடிப்பீராக' என ஓர் அசரீரிவாக்கு உண்டாக, திருவெண்காடர் உடனே ஒரு துலை கொண்டுவரச் சொல்லி அதன் ஒருதட்டில் அருங் குழவியைக் கிடத்தி மற்றொரு தட்டில் பொன்னும் மணியு மிட்டு வந்தார். எவ்வளவு இடினும் குழவி யிருந்த தட்டுத் தாழ்ந்தே யிருந்தது. எல்லாரும் ஆச்சரியமுற்றனர். சிவசருமர் மனநடுங்கி, துலையை வலம்வந்து, 'அடியேன் தேவரீர்க் கடிமைப்பட்டது பொருளாசையா லன்றே. செல்வ மதிகமாகப் பெற்றால் யான் மயக்கத்தில் ஆழேனோ' என்றிரங்கி, 'இனித் துலைத்தட்டுக்கள் சமநிலை யடையட்டும்' என்று மந்திராக்ஷதை யெறிந்து வணங்கினர். அங்ஙனமே துலைத்தட்டும் சமநிலை பெற்றது. பின்

'சிவசருமரே, உம்மை மயக்கிலாழ்த்தவன்று செல்வத்தைக் கொடுத்தது; அறவழியால் ஈட்டப்பட்ட திருவெண்காடர் பொருளைப் பெறுதற்கு நீரே பாத்திரம் என்னும் கருத்துப்பற்றியே யாம். இன்று தொட்டுப் பதினாறாண்டு கழிந்த தினத்து நீரும் உம் குடும்பமும் எம் பதவிக்கு வருவீர்கள். கவலை யொழியுங்கள். இப் பொன்னைக் கொண்டு திருவிடைமருதூர்க்குப் போங்கள்' என்று ஓர் அசரீரி எல்லாருங் கேட்க எழுந்தது. சிவசருமரும் மனக்கவலை நீங்கினார். திருவெண்காடர் சிவசருமரை மீட்டும வணங்கினார். எல்லாரும் ஆனந்தமடைந்தனர்.

பின் குழந்தையைத் தூலயினின்றும் எடுத்தணைத்துக் கண்மிச்சில் போக்கி, அன்றே நாமகரணஞ் செய்யக் கருதி, எல்லார்க்கும் மனத்திலே 'மருதவாணன்' என்னும் பெயரே முன்தோன்ற, அதனையே கடவுட் குழந்தைக்கு நாமமாகச் சாத்தினார். தூலத் தட்டி விட்ட பொன்னெல்லாம் பொதிசெய்து திருவிடைமருதூர்க்கு அனுப்பப்பட்டது. சிவசருமரும் தம் மனைவிமக்களோடு இரண்டுநாள் தங்கியிருந்து திருவெண்காட ரிடத்து விடைகொண்டு தம ஊர்க்குப் புறப்பட்டார். தேரிற் செல்பவர் இடையில் தெய்வக் குழந்தை ஞாபகத்தால் சோர்வுற்று விழுந்தார். களை தெளிந்தபொழுது அக் குழந்தை தம் மக்களோடு விளையாடிக்கொண் டிருத்தலைக் கண்டு மனந்தேறினர். தேர் வேகத்தால் மீண்டும் உறக்கம் வர உறங்கி விழித்தபொழுது திருவிடைமருதூரில் தம் வீட்டு வாயிலில் இருந்தனர். குழந்தை மாயமாய்

சிவசருமர் தம் ஊராகத மீளல்

மறைந்து விட்டது. சிவசருமர், 'தேர்செல்லும் வேகத்தால் குழந்தை தவறிக் கீழே விழுந்ததோ, அன்றி நாம் கண்டது கனவோ? எதற்கும் நான் காவிரிப்பூம் பட்டினஞ்சென்று குழந்தையிருக்கப் பார்த்து வருகிறேன். செல்வமோ நிரம்ப உளது. நீ உன் மக்களோடு அடியவர் பூசையைத் தவறாமல் செய்துகொண்டிரு' என்னலும், சுசீலையார் தம் கணவர் பிரிவு சகிக்க முடியாதவராய் வருந்தினர். அச் சமயத்தில் காவிரிப் பூம்பட்டினத்திலிருந்து வந்து சேர்ந்த பொதி வண்டியோடு வந்த சேவகரோடு கலந்திருந்த சிவகணநாதரொருவர் ஒரு கவளிகையையும் திருவெண்காடர் எழுதியவாறாக ஓர் ஓலை முடங்கலையும் சிவசருமர் கையிற் கொடுத்துத் தம் வழியேகினர். சிவசருமர் அவ்வோலை முடங்கலை நிமிர்த்துப் பார்த்தபொழுது குழந்தை அங்குச் சுகமாக விளையாடியிருக்குஞ் செய்தியும் அதனுடைய பிரிவாற்றாமை யகல அதன் திருவுருவப்படமொன் றனுப்பினமையும் திருவெண்காடர் குறித்தெழுதியவண்ண மிருக்கக் கண்டு கவளிகைக் கட்டையவிழ்த்துப் படத்தை நோக்கிக் குழந்தையைக் கண்டதுபோலவே களித்துத் தம் மனைவியாரையுந் தேற்றினர். பின் அவர்கள் அப் படத்தை ஒரு கூடத்தில் அமைத்து உபசரித்து, தங்கள் நியமப்படி சிவபூசை அடியவர் பூசை குறைவற நடத்திவந்தனர்.

மருதவாணர்-பிள்ளைவிளையாட்டு

காவிரிப்பூம் பட்டினத்தில் திருவெண்காடர் திருமாளிகையில் தெய்வக் குழவியாகிய மருதவாணர் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தார். தம் வயதுப் பிள்ளைகளோடு

விளையாட்டயர்ந்து அவர்க ளனைவரையும் களிப்பிப்பார். ஒருநாள் அவர்களோடு கடற்கரையில் விளையாடிக்கொண்டிருந்தபோது, திடீரென்று ஒரு படகில் ஏறி அவர்களோடு நெடுந்தூரஞ் சென்றார். அங்குப் பெருமீனொன்று இவர்கள் தோணியை நோக்கி விழுங்குங் குறிகாட்டி விரைந்து வருதலைக் கண்டு எல்லாரும் நடுநடுங்கி மருதவாணரை நோக்கி, 'இஃதென்ன! பேராபத்து விளைந்ததே, நாமனைவரும் ஒருங்கே மாள வந்ததே' என்று புலம்பினர். இதற்குள் தோணியருகில் வந்துவிட்ட மீன் பாய்மரத்தினிடத்து நின்ற ஒரு சிறுவனைப் பற்றி விழுங்கியது. அதுகண்ட பிள்ளைகளெல்லாரும் மூர்ச்சித்தனர். அப்போது மருதவாணர் இரக்கமுற்றுக் காலை நீட்டி அம் மீனின் தலைமேல் உதைத்தார். உதையுண்ட மீன் அக் கணமே உயிர்விட்டது. அப்பொழுது அதனுடைய யாக்கையினின்றும் ஒரு திவ்ய புருஷன் புறப்பட்டு விமானமேறி அந்தரத்தே நின்று மருதவாணரை நோக்கித் தொழுது, 'யான் மணிக்கிரீவனென்னும் கந்தருவன். வேடிக்கையாகத் திரிகையில் ஒரு வனத்தில் சிந்து முனிவரைக் கண்டு என் அழகின் செருக்கால் அவரை இகழ்ந்தேன். அவர் முனிந்து என்னை மீனாகுமாறு சபித்தனர். சாபத்திற் கஞ்சி யான் அவரை வணங்கலும் அவர் சுவாமிகள் இங்கெழுந்தருளித் திருவடியை என் தலைமேல் வைத்தருளும் பொழுது சாப நிவிர்த்தியாகி யான் என் பழைய உருவைப் பெறுவேன் என்று அருளினர். யான் பட்ட துயரங்கட்கோ அளவில்லை. இன்று எல்லாம் தீர்ந்தன' என்று துதித்தான். மருதவாணரும் அவனுக்கு அருள் புரிந்து அவனைச் சுவர்க்கம் போக விடுத்து, மூர்ச்சித்துக்

கிடந்த பிள்ளைகளைக் கருணையால் நோக்கலும் அவர்கள் களைதீர்ந்தெழுந்தனர். சற்றுநேரத்திற்கெல்லாம், 'ஐயோ! நம்முள் ஒருவனை அம் மீன் விழுங்கியதே' என்று புலம்பலும், மருதவாணர் 'அதோ பாருங்கள்' என, அச் சிறுவன் அம் மீன் வயிற்றிலிருந்து விலையுயர்ந்த மணிகளை வாரிச் சுமை செய்துகொண்டு அதன் வாய் வழியாக ஆனந்தமாக வரக் கண்டனர். அவர்கள் தாங்களும் அவ்வாறு மணிகள் சேர்க்க வேண்டுமென்ன, மருதவாணர் அவர்களை அம் மீனின் வயிற்றுட் சென்று மீளும்படி ஏவினர். எல்லாரும் தாங்கள் கொண்டுவந்த மணிகளிற் சிறந்தவற்றைப் பொறுக்கி மருதவாணர்க்குக் காணிக்கையாகக் கொடுத்தனர். பின் தாய் தந்தையர் நினைப்புவர அவர்கள் கரைக்கு மீண்டு அங்குப் பயத்தாற் காத்திருந்த தம் பெற்றோரை மகிழ்வித்தனர்.

மருதப்பிரான் கலை பயில்கை

இங்ஙனம் சின்னாள் கழிந்தபின் மருதவாணர்க்குக் கல்விபயில் பருவம் வந்தடுத்ததாக, திருவெண்காடர் ஒரு நல்லாசிரியரைத் தெரிந்து அவர்க்குச் சகல கலைகளையும் பயிற்றுவித்தார். அந் நாளில், அந்நிய தேசத்து வணிகனொருவன் பெறுதற்கரிய பருமணியொன்றைக் காவிரிப்பூம்பட்டினத்து வைசியர்பாற் கொண்டுவந்தான். அவர்கள் அதனைக் கண்டு அதிசயித்து மதிக்க அறியாராய்த் திருவெண்காடரிடத்துக் கொண்டுவந்து காட்டினர். அவரும் அதனை நன்கு ஆராய்ந்து, 'எவ்வகை மணிக்கும் விலை கொள்வோனது விருப்பினளவாம். ஆயினும், இது பதினாயிரம் பொன் பெறும் என்று தோன்றுகின்றது' என்றனர்.

வணிகரெல்லாரும் 'இஃதொக்கும்' என்றனர். அப்பொழுது மருதவாணர் பள்ளிக்குச் சென்று வந்தவர், வழக்கம்போல் உடனுண்ணப் பிதா வராதிருக்கவே அவரைத் தேடி இங்கு வந்தார். மணியையுங் கண்டார். 'இம் மணி எங்கிருந்து வந்தது? இதன் விலையென்ன? இதனை யார் விலைமதித்து வாங்கியது?' என்று வினவினர். திருவெண்காடர், 'குழந்தாய், உனக்கேன் இந்த விசாரம்? பசித்திருக்கிறாய், சாப்பிடுபோ' என்றனர். மருதவாணர் 'அப்பா, யான் நவமணியிலக்கணம் ஆசிரியரிடத்துப் பயிலும்போது கேட்டதோர் குறி இம் மணியிடத்துக் கண்டேன், அதனை உமக்கு வெளிப்படுத்த விரும்பினேன்' என்றார். அங்கிருந்த வைசியர் மணியின் வரலாற்றையுரைப்ப, மருதவாணர் 'என் தந்தையார் மதித்த பதினாயிரம் பொன்னையும் யானே தருகிறேன். ஆனால் இம் மணி கண்ணாலும் பார்க்கத்தக்கதன்று. இதனுள் நீர் உள்ளது; இது ஆணிமுத்தன்று. இதனைத் தொட்டாலும் தரித்திரம் வியாதி முதலியன உண்டாம். எல்லாரும் பாருங்கள்' என்று முன் பின் நோக்காது அம் மணியை யுடைத்தார். உடனே அதனுள் இருந்த நீர் வெளிப்பட்டது. யாவரும் வியப்புற்று மருதவாணரைக் கொண்டாடினர். பின்பு அவர் தாம் சொல்லியபடி வணிகனுக்குப் பொருள் தர எண்ணிக் கடாரபுரத்து வாழும் ஞானானந்தன் என்னும் தமது நண்பனுக்கு ஒரு சீட்டனுப்ப, அவன் அப்படியே பதினாயிரம் பொன்னையும் கொடுத்தான். திருவெண்காடர்க்குத் தம் மைந்தரிடத்தில் அச்சமும் அன்பும் மிகுந்தன.

மருதவாணர் தீவாந்தர வியாபாரம்

மருதவாணர்க்குப் பதினாறாண்டெல்லை குறுகியது. அவர் தம் தந்தையாரிடம் சென்று தமக்குத் தீவாந்தரஞ் சென்று வியாபாரஞ் செய்தலில் உள்ள அவாவைத் தெரிவித்தனர். திருவெண்காடர், 'நமக்குப் பொருள்தேடி ஆக வேண்டியதில்லை' என்று சொல்ல, அவர் 'பொருள் சம்பாதித்தல் அவசியம். அன்றியும் தீவாந்தரப் பிரயாணத்தில் அறிந்துகொள்ளும் விஷயங்கள் பல. ஆதலால் விடை தரவேண்டும்' என்ன, திருவெண்காடர் 'ஆயின் நானும் உடன் வருவேன்' என்ன, மருதவாணர் 'நாமிருவரும் போய்விட்டால் தாயார் வருந்துவர். ஆதலால் நீர் இங்கே இரும், நான் மாத்திரம் போய்வருகிறேன்' என்று தம் பெற்றோரிடத்து விடை பெற்றனர். விடை பெற்றுத் தம் வயசினராகிய வணிகச் சிறுவர் பலரொடு கலமேறிச் சென்று ஒரு தீவை யடைந்தனர். அங்குச் சிறிது காலம் வியாபாரஞ் செய்தபின்னர் அவர்களெல்லாம் புறப்பட்டு வேறு தீவுகளுக்குச் சென்றனர். மருதவாணர் மாத்திரம் அங்கேயே தங்கிப் பல்வகை அறங்களைச் செய்துகொண்டிருந்தார். வேறு தீவுகளுக்குச் சென்றவர்கள் ஆங்காங்கே லாபகரமான வியாபாரங்களைச் செய்து பெரும் பொருளீட்டிக் கொண்டு இவரிருந்த தீவுக்கு விரைவில் வந்து சேர்ந்தனர். இவரிடத்திருந்த சரக்குகள் வரட்டிகளும் அவல் கடலையுமே. அவர்கள் திடுக்கிட்டு, 'பட்டினத்துப் பிள்ளையா ரெனப்படும் திருவெண்காடர்க்குத் தவப்பேறாய் வந்த நீர் இவ்வாறு செய்த லழகோ? நீர் எங்களுக்கெல்லாம் தலைவராயினீர். எங்களைப் பொருள்

தேடி வர ஏவினீரே நீர் என்ன தேடிவைத்தீர்?' என்று பரிதாபப்பட்டு வினவ, மருதவாணர் 'என் பொருட்டு நீங்கள் கவலைப்படவேண்டா என் பிதா உங்களை ஒன்றுங் கேட்கமாட்டார்' எனமுர் அதனைக் கேட்ட தோழர்கள் அவர்கருப புத்தி மாருட்டமாயிற் றென்று நிச்சயித்து, தங்கள் தங்கள் சரக்குகளைக் கலங்களிலேற்றுவித்து ஊரைநோக்கிப் புறப்பட்டனர். மருதவாணரும் தம சரக்குகளை ஏற்றுவித்து உடன் புறப்பட்டனா கடல்நடுவிற செல்லும்பொழுது மருத வாணர் திடீரென்று பெருங காறறுமமழை வரசசெய்து கலங்களைத் திசைதபபியோடசசெய்தார. பல நாளாய் அவாகள் அலையும்பொழுது அவாகள் வழிக்காகச சேகரித்துவைத்திருநத விறகுமுதலிய உபகரணங்கள் செலவாய்த தீாதன. அவாகள மருதவாணரிடம வநது தோழமை பாராட்டி, 'நாஙகள் மிகவும வருந்தி ஞேம. குளிர வாட்டுகின்றது. இருநத விறகெல்லாம் தீாநதது உம இடத்திலுள்ள வரட்டியையேனும இத தருணம எங்களுககுக கொடுதது உபகரிக்கவேண்டு மென்று பிரார்த்திததனா மருதவாணா 'தோழர் களே, ஊர சோநதவுடனே என் வரட்டி எடைக் கெடையாகக கொடுத்தாற போதும' என்று சொல்லி, அதறகு அவாகள இசைவுபத்திர மெழுதித தரப் பெற்றுக்கொண்டு வரட்டிகளை நிறுததுககொடுததனா. அவாகள வாங்கித தம கலஙகட்குச சென்று குளிர் பசி தணிநதிருநதனா. மழையும விட்டது. கப்பல்கள் விரைவில் காவிரிப்பூம்பட்டினம வநது சேர்நதன. வணிகச் சிறுவர் வரவை நோக்கி வருநதிய அவர்கள் பெற்றோர்கள் அவர்களைக் கண்டதும களித்து ஊரில் திருவிழாக் கொண்டாடினுர்கள்.

மருதவாணர் மறைதல்

திருவெண்காடர் மருதவாணரைக் காணுமுன்னமே, தோழருள் ஒருவன் அவரைக் கண்டு, 'ஐயா, உம் புத்திரர் சித்தம் மாறுபட்டிருக்கிறார். உமக்கு அதனைக் குறிப்பித்தற்காக முன் வந்தேன்' என்றான். திருவெண்காடர் சிறிது மனங்கலங்கி 'எவ்வாறாயினும் மகன் வந்து சேர்ந்தானே' என்று தேறி மரக்கலத்திற்குச் சென்று தம் மகனைக் கண்டு ஆனந்தித்தார். மரக்கலத்தில் வரட்டியும் அவல் கடலையுமே யிருந்தன. திருவெண்காடர் பிரமைகொண்டார். தீர விசாரிக்க வேண்டுமென்று நிச்சயித்து மருதவாணரைக் கரைக்குக் கொண்டுவந்து அங்கொரு மாளிகையிலிருக்கச் செய்து காவலமைத்து, தாம் கப்பலுக்குச் சென்று வரட்டி அவல் கடலை பெட்டி கணக்கு முதலியவற்றை எடுப்பித்துக்கொண்டு கரைக்கு மீண்டு, மருதவாணரோடு வந்த தோழர்களோடிருந்து அவற்றைச் சோதித்தபோது, பெட்டியில் ஒரு வரட்டியும் ஓலையுமிருக்கக் கண்டார். வரட்டி பெட்டியில் வருகிறதற்கு அதனிடத்து ஒரு விசேஷமிருக்கவேண்டுமென்று நினைத்து அதனைப் பிட்டுப்பார்க்கையில் அதனுள் சூரியப் பிரபைபோல் ஒளி வீசும் மாணிக்கமொன்றிருக்கக் கண்டார். மற்றைய வரட்டிகளைச் சோதித்தார்; அவற்றுள்ளும் அவ்வாறே மாணிக்கங்களிருந்தன. அவல் மூட்டையைச் சோதித்தார், அது முழுதும் பொன்மணல் கலந்திருந்தது. ஓலையை யெடுத்துப் பார்த்தார்; அது உடன் வந்த தோழர்கள் மருதவாணரிடத்துப் பெற்ற வரட்டிக்காக எழுதிக் கொடுத்த கடன் சீட்டாயிருந்தது. திருவெண்காடர் அதனைக் குறித்து அவர்களை வினவிய பொழுது

அவர்கள் அது தாம் எழுதியதாக ஒப்புக்கொண்டனர். 'நாம் மருதவாணரைச் சித்தப்பிரமை கொண்டார் என்றுரைத்தோமே. இப்பொழுது திருவெண்காடர் நம்மைக்குறித்து என்ன எண்ணுவார்?' என்று மனங்கலங்கினர். திருவெண்காடரோ தம் மகனார் தேடித் தந்த மணிநிதிகளைக் கண்டு பரமானந்தங் கொண்டவராய் அவரைக் கண்டு தழுவ எண்ணி அவரைக் காவல் வைத்திருந்த மாளிகைக்கு ஓடினார். அங்கு அவரில்லை. காவலாளர் காவல் காத்தபடியேயிருந்தனர். திருவெண்காடர் மனம் மிக வருந்தினார். 'வரட்டியையும் அவல்மூட்டையையும் கண்ட அளவிலே தீர விசாரியாது முகங்கோணி என் அருமைக் குழந்தையைக் காவலில் வைத்தேனே' என்று புலம்பினார். நகரமுற்றுந் தேடிப்பார்த்தார். எங்கும் அவரைக் கண்டிலர். மருதவாணரோ திருவிடைமருதூரில் சோதியுருவாய் வெளிப்பட்டு தம் படவுருவத்தைப் பூசித்து நேசித்திருந்த சிவசருமர்க்குக் குடும்பத்தோடும் முத்தியளித்து, தாம் மகாலிங்கத்துட் கலந்திருந்தனர்.

**திருவெண்காடர் துறவு**

திருவெண்காடர் ஊணுமுறக்கமுமின்றிச் சிந்தனையிலாழ்ந்திருக்கையில் அவர் மனைவியார் ஒரு சிறு பெட்டியைக் கொண்டுவந்து அவர் முன் வைத்து, 'இதனைத் தேவரீர் வந்தவுடனே கொடுக்கும்படி நம் மகன் தந்து போயினான்' என்றார். அடிகள் அதனை ஆவலோடு திறந்து பார்த்தார். அதனுள் ஒரு காதற்ற ஊசியும் ஓர் ஓலைநறுக்கு மிருக்கக் கண்டு மிகுந்த ஆச்சரிய முடையவராய் அவ்வோலையைப் பார்க்க, அதில்

"'காதற்ற ஊசியும் வாராது காணுங் கடைவழிக்கே' என்றெழுதியிருந்தது. இவர் முன்னஞ் செய் தவக் குறை' முடிக்கவந்த மூர்த்தியாதலால் அவ்வளவி லேயே இருவினையொப்பு மலபரிபாக முண்டாக, கரணசுத்தி யடைந்து புலன்கள் ஒடுங்கிநிற்ப, சிவா னந்தம் பரந்த வெள்ளமாக எழுந்து கவர அதனுள் மூழ்கிக் கவலையெல்லாம் அற்று, அருள்வாணி முன் நிற்க,

பட்டைக் கிழித்துப் பருவூசி தன்னைப் பரிந்தெடுத்து [துக்
முட்டச் சுருட்டியென் மொய்குழ லாள்கையில் முன்கொடுத்
கட்டி யிருந்த கனமாயக் காரிதன் காமமெல்லாம்
விட்டுப் பிரியவென் றேஇங்ங னேசிவன் மீண்டதுவே.

வாதுற்ற திண்புய ரண்ணா மலையர் மலர்ப்பதத்தைப்
போதுற்றெப் போதும் புகலுநெஞ் சேயிந்தப் பூதலத்தில்
தீதுற்ற செல்வமென் தேடிப் புதைத்த திரவியமென்
காதற்ற ஊசியும் வாராது காணுங் கடைவழிக்கே

என்பவை முதலிய கவிகள் சொல்லி, தம் தாயாரைப் பணிந்து, 'அம்மே, உமது தவம் சிறந்தது. நீர் யாதொன்றுக்கும் வருந்தாதிரும் யான் குருபரன் ஆணைவழியில் நிற்பவ னுயினேன்' என்னலும், அவர் 'எனக்கு அந்திய காலம் சமீபித்தது. என் ஈமக் கடனைக் கழித்துச் செல்லலாகாதா ?' என்ன, அடிகளும் 'அவ்வாறே யாகுக' என்று மொழிந்து, எதிர் நின்ற தமது ஆப்த நண்பரும் தலைமைக் காரியஸ்தருமாகிய சேந்தனாரை நோக்கி, 'நீர் இப் பொருளெல்லாம் உலகி லுள்ள பல்லோருங் கொள்ளச் செய்வீர்' என்று சூறையிடப் பணித்து, தொடர்பொன்று மில்லாராய்ப் புறப்பட்டனர். அது கண்டு அவர் மனைவியார் வணங் கித் தாமும் உடன் வரவேண்டு மென்றனர். அடிகள்,

'உனக்கு என்னோடு தொடர்ந்துவரச் சக்தியில்லை. சிவநேசம் அடியர்நேசம் மறவாமல் இங்கிருந்தே திருவடி யடைதி' என்று அவரை நிறுத்திவிட்டு, ஊர்ப் பொது மண்டபத்தை யடைந்தார். அப்போது அவ் வூரிலுள்ள மூதியோர், நட்பினர், சுற்றத்தினர் எல்லாரும் திரண்டுவந்து, இவர் இவ்வாறு செய்ததால் தாங்கள் ஆதரவற்ற நிலைமையை யடைந்ததைச் சொல்லி யிரங்கினர். அடிகள்,

மனையாளு மக்களும் வாழ்வுந் தனமுந்தன் வாசல்மட்டே
இனமான சுற்ற மயானமட் டேவழிக் கேது துணை
தினையா மளவெள் ளளவா கினுமுன்பு செய்ததவந்
தனையாள என்றும் பரலோகஞ் சித்திக்குஞ் சத்தியமே.

மாடுண்டு கன்றுண்டு மக்களுண் டென்று மகிழ்வதெல்லாம்
கேடுண் டெனும்படி கேட்டுவிட் டோமினிக் கேள்மனமே
ஓடுண்டு கந்தையுண் டுள்ளே யெழுத்தைந்து மோதவுண்டு
தோடுண்ட கண்ட னடியார் நமக்குத் துணையுமுண்டே.

ஊரீ ருமக்கோ ருபதேசங் கேளு முடம்படங்கப்
போரீர் சமனைக் கழுவேற்று நீற்றைப் புறந்திண்ணையிற்
சாரீ ரனந்தலைச் சுற்றத்தை நீங்கிச் சகநகைக்க
வோரீ ருமக்கவர் தாமே தருவ ரிணையடியே

என்பவை முதலிய கவிகளைச் சொல்லி மவுனமா யிருந்தனர். அவர்கள் நாணமுற்று இவ்வுயர் நிலை நமக்கு நினைத்தற்கும் அரியதென்று ஏகினர்.

அரசன் வரவு

இங்கு நிகழ்ந்த விஷயங்களைப்பற்றிக் கேள்வி யுற்ற அரசன் புறப்பட்டு வந்து நிதி யறையைக் கொள்ளை யாகாத வண்ணம் தடுத்து, அடிகள் தமக்கை மகனை வரவழைத்து அவனை அவர் வீட்டி லிருத்தி, அவனுக்

குக் குடும்பப் பாதுகாப்புக்கு வேண்டிய செல்வ மொழிந்தவற்றைத் தரும முதலியவற்றிற்கு உபயோகிக்கக கட்டளையிட்டான். சேந்தனாரை நோக்கி, 'திருவெண்காடர் செல்வம் அளவு கடந்தது என்று பலரும் சொல்லக் கேள்வியுற்றிருக்கின்றேனே. இன்னும் எங்கெங்குள்ளன?' எனக் கேட்க, அவர் 'இருந்தவை இவ்வளவே' என்றனர். அரசன் அவர் மொழியில் ஐயங்கொண்டு அவரைச் சிறை செய்வித்து, அவர் காணி இடம் பொருளெல்லாவற்றையும் திருவெண்காடர் பொருளென்று கவர்ந்தான். சேந்தனாருடைய மனைவியார் தம் பிள்ளையை எடுத்துக்கொண்டு வேற்றூர் சென்று கூலிவேலை செய்து சீவித்துவந்தார். பின்பு அரசன் அடிகளிருக்கும் மண்டபத்துக்கு வந்து, 'இப் பரதேசி கோலங்கொண்டு நீர் அடைந்த விசேடப்பேறென்னை!' என, அவர் 'நீர்நிற்க நாமிருக்க' என்றார். அரசன் நாணமுற்றுச் சென்றான்.

அடிகள் தாயார் கடனைக் கழித்தல்

அடிகள் பசிவந்தால் ஊருட்சென்று பிச்சையேற்றுண்டு, பொதுமண்டபத்தில் யோக சமாதியிலிருத்தலும், அங்கு வந்து விளையாடும் சிறுவர்களோடு கூடி விளையாடலும் செய்து ஆனந்தித்திருந்தார். அங்ஙனமிருக்கையில் காவிரிப்பூம்பட்டினத்தில் இவரது தாயார் தேகவியோக முற்றனராக, சுற்றத்தினர் வழக்கப்படி ஈமக்கடன் கழிக்க மயானத்திற்குச் சென்றனர். அதனைத் திருவருளாணையால் உணர்ந்த அடிகள் அங்குச் சென்று, அவர்கள் அடுக்கிவைத்த சிதையைத் தள்ளி வாழைப்பட்டையாற் சிதையடுக்கி அதன்மேல் அன்னையைக் கிடத்தி,

முந்தித் தவங்கிடந்து முந்நூறு நாட்சுமந்தே
அந்திபக லாச்சிவனை யாதரித்துத்—தொந்தி
சரியச் சுமந்துபெற்ற தாயார் தமக்கோ
எரியத் தழல்மூட்டு வேன்

என்பது முதலிய கவிகளைப் பாடி, உலகர் போலச் சடாக்கினியாற் சுடாது தமது ஞானக்கினியால் தகனஞ்செய்து, அவரைச் சிவனடி நீழலில் கூடும்படி தியான சமாதியால் அந்தியேஷ்டி நிறைவேற்றி, அங்ஙனே புறப்பட்டார்.

புறப்பட்டவர் திருவிடை மருதூர்க்குச் சென்று அங்குச் சிவனடியார் எதிர்கொண்டு வணங்கத் திருவாலயத்தை அடைந்து பன்முறை பணிந்து மனமுருக அன்பு பெருகி உடல் குழைந்து என்பு நெக்குவிட்டு வியர்வெழுந்து கண்ணீர் ஆறாக மடைதிறந்து பாய, நாத்தழுதழுக்க வாயாரப் பாடுவாராய்த் திருவிடை மருதூர் மும்மணிக்கோவை பாடிப் புறம்போந்து மனைகடோறும் பிச்சையேற்றுண்டு கோபுரத் திருவாயில் குடியாகக்கொண்டு சிவயோக சாதனையில் வீற்றிருந்தார்.

அடிகள் தலயாத்திரை

பின் திருவிடை மருதூருடையார் அடிகள் கனவிற் றோன்றி 'ஐய, வெண்காட, இனி நமது திருப்பதிகள் தோறுஞ் சென்று பாடுதி' எனக் கட்டளையிட்டருள, அவர் புறப்பட்டுப் பல பதிகளையும் தரிசித்துத் திருவாரூரில் சென்று அங்குச் சில காலந் தங்கினார். அந்நாளில், மிகுந்த பக்திமானான சிறுவனொருவன் அவர்க்குக் காலந் தவறாது திருவமுது செய்வித்துபசரித்து இரவும் பகலும் பிரியானாகித் தொண்டு செய்து வந்தான். இவனுக்கு முறைப்பெண்ணொன்

மிருந்தது. இவனும் தாய்க்கொரு பிள்ளை, அவளுந் தாய்க்கொரு பெண். இரண்டு தாய்மாரும் இக் குழந்தைகளுக்குக் கல்யாணஞ் செய்துவைக்க விரும் பினர். சிறுவனோ அதற் கிணங்கவில்லை. அதன்மேல் அவர்கள் அடிகளிடத்து வந்து முறையிட, அவரும் இரங்கி அவ்வாறே செய்க என்று அவனைப் பணித் துத் தாமும் உடனிருந்து கலியாணத்தை நடப்பித்த னர். அக்காலத்து 'நாப்பிளக்கப் பொய்யுரைத்து' என்னும் கவியைப் பாடிச் சேஷைபிட்டு ஆசீர்வதித்த னர். அப்பால் அச் சிறுவன் மனைவியோடு வாழ்ந் திருக்கையில் ஒருநாள் ஆயுள் முடிந் திறந்தான். எல் லாரும் கூக்குரலிட்டழுதனர். அத் தருணத்து அவ் வீதிவழி வந்த அடிகள் சங்கதி கேள்விப்பட்டு 'வடிவந் தானும்' என்னும் பாட்டைப் பாடித் தங் குருவருளைச் சிந்தித்து 'மண்ணு முருகும்' என்ற பாட்டைச் சொல் லிய அளவில் அப் பிணமகன் உயிர்பெற்று உறங்கி விழித்தவனைப்போல் எழுந்து வணங்கி நின்றான். அவ னுக்குப் புத்தி கூறிவிட்டு அடிகள் பாண்டிநாட்டுத் திருப்பதிகளைத் தரிசித்துக் கொங்குநாடு சென்று அங்கு மவுன விரதத்தோ டிருக்கையில் ஒருநாள் பசி யாற்றாது ஒரு மூர்க்கன் வீட்டு வாயிலில் நின்று கைதட்ட, அவன் இவர் பெருமை யறியாது தடி கொண்டு புடைத்தான். அப்பொழுது ஒரு கிழவன் ஓடிவந்து விலக்கி இவர்க்கு அமுதிட்டு உபசரித்தான். அப்போது அடிகள்

பூணும் பணிக்கல்ல பொன்னுக்குத் தானல்ல பூமிதனைக்
காணும் படிக்கல்ல மங்கையர்க் கல்லநற் காட்சிக்கல்ல
சேணுங் கடந்த சிவனடிக் கல்லஎன் சிந்தைகெட்டுச்
சாணும் வளர்க்க அடிபேன் படித்துயர் சற்றல்லவே

என்று சொல்லி, உடனே

இருக்கு மிடந்தேடி என்பசிக்கே அன்னம்
உருக்கமுடன் கொண்டுவந்தா லுண்பேன்—பெருக்க
அழைத்தாலும் போகேன் அரனேஎன் தேகம்
இளைத்தாலும் போகேன் இனி

என்னும் வெண்பாவைப் பாடி, அங்கு நின்றும் புறப்பட்டுத் துளுவம் புக்குக் கோகரணம் பணிந்து போய் உஞ்சேனை மாகாள மடைந்து மாகாளேச்சுரரைப் பணிந்து நகரையடுத்த சிறுபுறங் காட்டி லுள்ளதொரு கணபதி யாலய மடைந்து பரஞான நிட்டையில் வீற்றிருந்தருளினார்.

பத்திரகிரி யரசர் அரண்மனையிற் களவு

அடிகள் அங்ஙனமிருக்க, அந்நகரத்தை யாளும் அதிதீவிரபக்குவியாகிய பத்திரகிரி மகாராஜாவுக்குச் சிவன் அருள் புரியும் காலம் அடுத்தது. அவர் அரண்மனையிற் களவு செய்யும் இச்சையோடு சில கள்ளர் புறப்பட்டு வந்து இக் கணபதியாலயத்தின் முன் நின்று தங்களுக்குக் களவு வாய்க்கவென்று கணபதியைப் பிரார்த்தித்து நகருட்புகுந்து தம் ஆசை தணியுமட்டும் கருவூலத்து நிதிக் குவைகளையும் மணிக் குவைகளையும் வாரிக்கொண்டு செல்லுகையில் கணபதி ஞாபகம் வரவே ஓடிச் சந்நிதி யடைந்து தங்களுக்குக் கிடைத்தவற்றுள் விலைமதிப்பரிய ஓர் அரதன ஆரமெடுத்து அவர்க்குச் சாத்திவிட்டுத் தம் வழியே போயினர். அப்போது இருட்போதாகையால் ஆரம் கணபதி கழுத்தில் விழாது அருகில் சிவயோக சாதனையில் வீற்றிருந்த அடிகள் கழுத்தில் விழுந்தது.

**கழுமரம் பற்றி யெரிகை**

அங்கு அரண்மனையில் களவுபோன சிறிது நேரத்திற்கெல்லாம் காவலர் வெளிப்பட்டு நகரமெல்லாம் கள்வரைத் தேடிவிட்டுப் புறங்காட்டில் அடிச்சுவடு கண்டு அதனைப் பற்றிக்கொண்டு கணபதி யாலயத்தை யடைந்து அங்கு ஆரங் கழுத்திலணிந்து வீற்றிருக்கும் அடிகளைக் கண்டனர். கண்டதும் விரைந்தோடிவந்து அவரைப்பற்றி யிழுத்துப பல்வகையால் துன்புறுத்தினர். அப்போது அடிகள் சமாதி கலைந்து, நடந்த சங்கதியொன்றும் அறியாராதலால் அவர்கள் துன்புறுத்தும் பொழுதெல்லாம் தடுத்தல் செய்யாது 'சிவ சிவ' என்று சொல்லிக்கொண்டிருந்தார். காவலாளர் இவரை வைது இவர் மவுனத்தைக் குறித்துத் தம்முட் பலபடி பேசிக்கொண்டு, இறுதியில் கையுங் களவுமாக அகப்பட்ட இவரை அரசரிடத்துக் கொண்டுவிடுதலே தாம் தண்டந்தப்பும வழியென்று துணிந்து அரசர் முன் கொண்டுபோய் நிறுத்தி, 'இவனைக் கழுவேற்றினாலன்றி மற்றைக் கள்ளர் அகப்படார்' என்று சொல்லித் தாங்கள் இவரைக் கையுங் களவுமாகப் பிடித்ததையும் கூறி உடனே தண்டிக்கவேண்டு மென்றனர். அரசரும் ஆராய்ச்சியிலராய் இவரைக் கழுவேற்று மாறு கட்டளையிட்டார். கழுமரத்தின் முன் இழுத்துக்கொண்டுபோய் நிறுத்தப்பட்ட அடிகள் புன்னகையோடு அதனை நோக்கி

என்செய லாவ தியாதொன்று மில்லை யினித்தெய்வமே
உன்செய லேயென் றுணரப்பெற றேனிந்த வூனெடுத்த
பின்செய்த தீவினை யாதொன்று மில்லை பிறப்பதற்கு
முன்செய்த தீவினை யோஇங்ங னேவந்து மூண்டதுவே

என்ற அளவில் கழுமரம் பற்றி யெரிந் தொழிந்தது.

பத்திரகிரியரசர் அடிகளுக்குச் சிஷ்யராதல்

அரசர் இச் சங்கதியை அக் கணமே அறிந்து அடிகளிருந்த இடத்திற்கு ஓடிவந்து அவர் பாதத்தில் விழுந்து வணங்கித் தம்மை ஆட்கொள்ளுமாறு பிரார்த்தித்தார். அடிகளும் கருணையால் அவரை நோக்கி உபதேசம் புரிய அவர் அப்பொழுதே தம் செல்வமனைத்தையுந் துறந்து தம் நகரத்தைத் திரும்பிப் பாராது இவர் பின் போகச் சித்தமாயினர். இவரும் அவ்வுத்தம மாணாக்கரைத் திருவிடைமருதூர்க்குச் செல்ல ஆஞ்ஞாபித்துத் தாம் வடதேசத்துள்ள பல பதிகளையுந் தரிசிக்கச் சென்றனர். சென்றவர் தரிசித்து மீண்டு தென்னாடடைந்து திருவிடைமருதூர்க் கீழைக் கோபுர வாயிலில் வீற்றிருந் தருளினார். அப்போதே பத்திரகிரியாரும் அங்கு வந்து சேர்ந்தனர். அவரை அடிகள் மேலைக் கோபுரவாயிலில் இருக்கும்படி சொல்லினர். அவரும் குரு ஆணைப்படியே அங்கிருந்துகொண்டு நாடோறும் பிச்சை ஏற்று வந்து குருநிவேதன மானபின்பு சேடத்தைத் தாமுண்டு சிவயோகத்தில் வீற்றிருந்தார். ஒருநாள் பத்திரகிரியார் சேடத்தினை உண்ணப் புகுங்கால் ஆதரிப்பாரற்ற பெட்டை நாய்க்குட்டி யொன்று வந்து அவரெதிர் நின்று ஏழை முகங்காட்டிப் பசியால் தான் வருந்துவதைக் குறிப்பித்தது. கருணாமூர்த்தியாகிய பத்திரகிரியார் அச் சேடப் பிரசாதத்திற் சிறிது அதற்கிட்டு அதன் பசியைத் தீர்த்தார். அன்று முதல் அந் நாய்க்குட்டி அவரைவிட்டுப் பிரியாதிருந்தது. இங்ஙனம் சில நாள் கழிய, திருவிடைமருதூருடையார் அந்நாய்க்குப் பரிபாகம் நேர்ந்தது நோக்கி, சித்தவேடங்கொண்டு பட்டினத்தடிகளிடத்து எழுந்தருளி, 'ஐயா, என்னைப்

பசித்தீச் சுடுகின்றது, பிச்சையிடுவீரோ?' என, அடிகள் புன்னகைசெய்து, 'ஐயரே, யான் கோவணமே பாரமென்றுள்ளேன், தேவரீர் பசியை எங்ஙனம் தீர்ப்பேன்! மேலைக் கோபுர வாயிலில் ஒரு சமுசாரி உளன், அவன்பாற் செல்வீரேல் உமது பசி நிவிர்த்தியாகும்' என்றனர் அது கேட்டுச் சித்தப்பெருமான் பத்திரகிரியாரிடத்துச் சென்று கீழைக் கோபுர வாயிலில் நிகழ்ந்த துரைத்து, 'என் பசியைத் தீர்ப்பீரோ' என, உடனே அவ்வுரைக் குறிப்பை யுணர்ந்த பத்திரகிரியார், 'இவ் விரந்துண்ணும் ஓடும் எச்சிலுண்ணும நாயுமோ என்னைப் பிச்சைதரவல்ல சமுசாரியாக்கியது! ஆண்டவர் திருவுள்ளம் இதுவாயின் இனி இவை தாம் எனக்கு என்செய்யவல்லன!' என்று கையிலிருந்த ஓட்டைச் சுழற்றி யெறிந்தார். அது சென்று நாயின் பொறியில் தாக்க ஓடும் உடைந்தது, நாயும் இறந்தது. பிச்சைக்கு வந்த சித்தரும் புன்னகையோடு மறைந்தார். பத்திரகிரியாரும் திருவருணிலைமையை நாடி, மெய்ஞ்ஞானப் புலம்பல் முதலிய செந்தமிழ்ப் பாடல்களை அருளிச்செய்து சிவயோகத்தி லிருந்தார்.

சேட மருந்திய 'நாயின் கதி

அந் நாய் புண்ணிய முதிர்ச்சியால் காசிராஜன் புத்திரியாகப் பிறந்து வளர்ந்து மங்கைப்பருவ மடைந்த பொழுது, அவள் தந்தை முதலியோர் வரன் நாடினர். அப் பெண்ணோ, 'என் குருநாதன் திருவிடைமருதூரில் உள்ளார், அங்கு யான் செல்லவேண்டும்' என்று பூர்வஜன்ம வாசனையால் மொழிந்தாள். அரசன் இவ் வார்த்தையைக் கேட்டு நடுங்கி, அறிவுடையோர் புத்திகூற ஒற்றரை யேவிப் பத்திரகிரியார் நிலைமையை

யறிந்து, தன் பெண்ணோடு திருவிடைமருதூர்க்குச் சென்று அவர் யோகசமாதியி லிருந்த இடத்தை விசாரித்துத் தெரிந்து அங்குப் போய் நின்றான். அப் பெண்ணோ, பத்திரகிரியார் சமாதி கலையும்வரை காத்திருந்து அவர் விழித்ததும், 'அடிநாய் மீட்டும் திருவடிப் பேற்றுக்கே வந்தது' என்றாள். எல்லா முணர்ந்த அப் பெரியோரும் அப் பெண்ணைக் கைப் பற்றிச் சென்று அக்கணமே கீழைக் கோபுர வாயிலி லிருந்த தம் குருமணியின் சந்நிதியில் விட்டு, 'எம் பெருமான் எச்சிலுண்ட நாய்க்கும் இப் பிறவிநோய் வரலாமோ' என்று கண்ணீர் வார விண்ணப்பித்து நின்றனர். அடிகளும், 'சிவன்செயலுக் கென்செய லாம்' என்று திருவருளை நாடினராக, அந் நிலையில் ஒரு பெருஞ் சோதி உண்டாயது. அச் சோதியில் சிவ பெருமான் திருவாணைப்படி பத்திரகிரியார் அப் பெண்ணோடு சென்று கலந்தனர். உடனே சோதி யும் மறைந்து மகாலிங்கத்துட் சென் றொடுங்கிற்று.

அப்பொழுது பட்டினத்தடிகள் சிவபிரானது பெருங் கருணையைப் புகழ்ந்து, 'இன்னும் என்னையும் என் வினையையும் இங்கு இருத்தி வைத்திபோலும், இனி ஏழையேன் செய்யக் கடவன என்' என்று மன முருகுந் தருணத்தில், 'ஐய, நம் ஒற்றியூர்க்கு வா' என்று ஓர் அசரீரி வாக்கு உண்டாயிற்று. அடிகள் வணங்கி விடை பெற்றுத் திருவெண்காட் டினை அடைந்தார். அடைந்தவர் பெருமான் சந்நிதி யடைந்து ஆனந்தபரவசராய் மனங் குழைந்து குழைந் துருகத் திருவிசைப்பாப் பாடினார். திருவெண்காட் டில்சிலநாள் தங்கியபொழுது சேந்தனார் மனைவியாரும் மைந்தரும் அடிகள் முன்வந்து காலில் வீழ்ந்து கதறி

யழுதார்கள். அவர் சங்கதி தெரிந்து 'மத்தளை தயி ருண்டானும்' என்னும் பாட்டைப் பாடிய மாத்திரத்தில் சிவபெருமான் ஆஞ்ஞைப்படி கணேசப் பெருமான் சேந்தனார் தளை யவிழ்ப்பித்து அவரை அடிகள்முன் விட்டருளினர். அடிகளும் அவர் பரிபாகம் நோக்கி, 'ஐய, நீ உன் குடும்பத்தோடு காட்டு விறகின் சிறுவிலைப் பொருள் கொண்டு சிவனடியாரொருவரை யூட்டி உண்டு தில்லைப் பதியில் உறைதி' என்று கட்டளையிட்டருளிச் சீகாழி நோக்கிச் சென்றனர். அவர் அங்ஙனம் ஒழுகும் நாளில் ஏழு நாள் அடைமழை பற்றி மனிதரை வருத்த, அவர் பசியால் வருந்திக் காடு சென்று விறகு கொண்டுவந்து ஊரிலே மாறிப் பெற்ற மாவைக்கொண்டு சென்று மனைவியார் கரத்தளித்தனர். அவரும் களியமுது சமைத்துத் தம் கணவனார்க்குத் தெரிவித்தனர். சேந்தனார் சிவனடியாரைத் தேடி ஊர் முழுதுந் திரிந்தலைந்து கோயில் மண்டபந்தோறும புகுந்து நாடினார். இவரது பக்திக்கு மகிழ்ந்த திருச்சிற்றம்பலமுடையாரே மூப்பினால் தளர்ந்த ஓர் அடியவர் உருக்கொண்டு மிகு பசியால் வாடினவரைப்போல் ஒரு மண்டபத்தில் தங்கியிருக்கக் கண்டு சேந்தனார் அவரைப் பணிந்து தம் குடிலுக்கு அழைத்துச் சென்று அமுது செய்வித்தனர். அவரும் அதனை உண்டு சேடத்தை முன்றானையில் முடிந்து திருவம்பலம் புகுந்து அங்குள்ள தேவர்க்கு அதன் சுவையை எடுத்துக் கூறிச் சேடப் பிரசாதமளித்து வீற்றிருந்தனர். சேந்தனாரும் தம் குடும்பத்தோடு சேட வமுதுண்டு யோகநித்திரையிலமர்ந்தார் இங்கு இங்ஙனம் நிகழ, செல்வச் சோழன்

சேந்தனார் களி நிவேதனம்

நாடோறும் கேட்பதுபோல் பூசைமுடிவில் மணி யோசை கேளாமல் மனங்கலங்கி உணவின்றித் தரை யிற் கிடந்து துயின்றான். அவன் கனவில் திருச் சிற்றம்பலமுடையார் சென்று தாம் சேந்தனார் நிவே தித்த களியமுதுண்ணச் சென்றிருந்தமையால் அவன் பூஜைக்கு வரத் தடைப்பட்டதென்றார். அவன் விழித் தெழுந்து விடிந்தவுடனே ஸ்நானாதிகள்செய்து கோயி லுக்கு வந்தான். அங்குத் திருமுற்றமுழுதும் தெய்வ மணம் வீசிக் களியமுது உதிர்ந்து கிடத்தலைத் தில்லைவா ழந்தணரும் அடியார்களும் தானும் கண்டு அவர் பக்தியைத் துதிக்க, எல்லாரும் சேந்தனாரைக் காண விரும்பினர். அப்போது மார்கழித் திருவா திரை யுற்சவம் நடந்துகொண்டிருந்தது. முன் நாள் மழையால் தேர் விழா நடத்தற்குக் கூடாமல் அன்று மழை நின்றதால் தேர் விழா ஆரம்பித்தனர். தேர் நடக்கவில்லை. யாவரும் வருந்தினர். 'சேந்த, தேர் நடக்க நம்மைப் பல்லாண்டு பாடுக' என்று ஓர் அசரீரி யுண்டாயிற்று. சேந்தனாரும் மனங்குழைந்து திருப் பல்லாண்டு பாடினர். தேரும் நடந்து வீதி வலம் வந்து நிலை சேர்ந்தது. பின்னர்ச் சேந்தனார் திரு விசைப்பாப் பாடிக் குருவருளால் தம் குடும்பத்தோடு முத்தியடைந்தனர்.

சீகாழி சென்ற பிள்ளையார் திருக்கழுமல மும் மணிக்கோவை பாடி, அங்கு நின்றும் சிதம்பரத்துக்கு எழுந்தருளிக் கோயினான்மணிமாலை பாடி ஆனந்த வெள்ளத்துட் படிந்திருந்து, பின் பசியெழலும் 'பன்னக வாடகப் பொற்பாதம்' என்னும் பாட்டைச் சொல்ல, சிவகாமி யம்மையார் உச்சி நிவேதனப்

பிரசாதத்தினைக் கொண்டுவந்து கொடுக்க உண்டு பசி யாறிப் பின் வந்தவர் அம்மையார் என்றுணர்ந்து,

ஓடுமெடுத்தத ளாடையுஞ் சுற்றி யுலாவிமெள்ள
வீடுகடோறும் பலிவாங்கி பேலிதி யற்றவர்போ
லாடு மருட்கொண்டிங் கம்பலத் தேசிற்கு மாண்டி தன்னைத்
தேடுங் கணக்கென்ன காண்சிவ காம சவுந்தரியே

என்று துதித்துச் சிவயோகத்தி லிருந்தார். அங்ஙன மிருப்பவர்

சோறிடு நாடு துணிதருங் குப்பைதொண் டன்பரைக்கண்
டேறிடு கைகளிறங்கிடுந் தீவினை எப்பொழுதும்
நீறிடு மேனியர் சிற்றம் பலவர் நிருத்தங்கண்டால்
ஊறிடுங் கண்கள் உருகிடு நெஞ்சமென் உள்ளமுமே

என்ற பாடலைப் பாடிக் காலங்கடோறுஞ் சென்று சிற்சபைத் திருநடங் கும்பிட்டு 'நினைமின் மனனே' என்பது முதலிய அனேக திருப்பாடல்களை யருளிச் செய்து பலநாள் கழிய, அவருக்குச் சிவபெருமான் 'திருவொற்றியூர்க்கு வருக' என்ற ஞாபகம் வந்தது. அப்பொழுதே அவர் 'பாற்கடல் கடைய' என்னும் அடைக்கலத் திருவகவல்பாடிச் சபாநாயகரிடத்து விடைகொண்டு புறம்போந்து, திருத்தினைநகர், திருப் பாதிரிப்புலியூர், திருவண்ணாமலை முதலிய தலங்களைத் தரிசித்துக் காஞ்சீபுர மடைந்தார். அங்கிருந்த காலத் துத் திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவே கம்பமாலை, கச்சித்திருவகவல் முதலிய பாடல்களை அருளிச்செய்து கச்சிக்காரோணத்தருகில் வீற்றிருந் தார். ஒருநாள் பசிநோய் மிகவருத்த ஆற்றாராய்,

அத்தி முதலெறும்பீ றானவுயி ரத்தனைக்குஞ்
சித்த மகிழ்ந்தளிக்குந் தேசிகா—மெத்தப்
பசிக்குதையா பாவியேன் பாழ்வயிற்றைப் பற்றி
இசிக்குதையா காரோண ரே

என்று பாட, காமாக்ஷியம்மையார் ஓர் அந்தண மாதருவாய் வந்து அமுதளித்து அவர் பசியை யாற்றினார்.

அடிகள் திருவொற்றியூர்க்குச் செல்லுதல்

பின்னர் அடிகள் புறப்பட்டு இடையிலுள்ள பல தலங்களையும் வணங்கித் திருக்காளத்தியை யடைந்து அங்குப் பல பாடல்களை அருளிச்செய்து விடைபெற்றுத் திருவொற்றியூரை நாடிச் சென்றார். சென்றடையு முன்னரே,

கண்டம் கரியதாங் கண்மூன் றுடையதாம்
அண்டத்தைப் போல அழகிதாம்—தொண்டர்
உடலுருகத் தித்திக்கும் ஓங்குபுகழ் ஒற்றிக்
கடலருகே நிற்குங் கரும்பு

என்னும் வெண்பாவைப் பாடி, கண்ட சராசர முழுவதும் குருலிங்க சங்கமங்களாகக் கண்டு ஆராமை மிக அன்பு பெருக,

வாவியெல்லாந் தீர்த்தம் மணலெல்லாம் வெண்ணீறு
காவனங்க ளெல்லாங் கணநாதர்—பூவுலகில்
ஈது சிவலோகம் என்றென்றே மெய்த்தவத்தோர்
ஓதுந் திருவொற்றி யூர்

என்று துதித்து, பலதரமும் பணிந்தெழுந்து, ஒற்றியூர் எல்லையைக் குறுகி வணங்கி உட்புகுந்து திருவீதியடைதலும் தம்மையறியா தெழுந்தோங்கிய காதலால்,

ஒடுவிழுந்து சீப்பாயும் ஒன்பதுவாய்ப் புண்ணுக்
கிடமருந்தை யான்அறிந்து கொண்டேன்—கடுஅருந்தும்
தேவாதி தேவன் திருவொற்றி யூர்த்தெருவிற்
போவார் அடியிற் பொடி

என்ற வெண்பாவையும்,

சுடப்படு வாரறி யார்புர மூன்றையுஞ் சுட்டபிரான்
றிடப்படு மாமதிற் றென்னொற்றி யூரன் றெருப்பரப்பில்
நடப்பவர் பொற்பதம் நந்தலை மேற்பட நன்குருண்டு
கிடப்பது காண்மன மேவிதி யேட்டைக் கிழிப்பதுவே

என்ற கட்டளைக் கலித்துறையையும் அருளிச்செய்து அத் திருவீதியை அங்கப் பிரதக்ஷிணஞ்செய்து சந்நிதி யடைந்து உடல்குழைய என்பு நெக்குவிட்டுருகக் கரைந்து கரைந்து கண்ணீரும் கம்பலையுமாய்க் கைகள் உச்சிமேலேறத் திருவொற்றியூர்த்தொகைபாடித் துதித்துத் தம்வசமிழந்து பரவசமுற்றுப் பின் தெளிந்து பிரியா விடைகொண்டு புறம்போந்தனர் போந்தவர் அவ்வூரிலேயே பசுமேய்க்குஞ் சிறுவரோடு கூடி ஆடியும் பாடியும் பல திருவிளையாடல் புரிந்திருக்கும் நாளில் உலகமறிந்து பிழைக்கவும் உடன் ஆடுஞ் சிறுவர் களிக்கவுமாக, முதல்வன் முறையீடு, அருட்புலம்பல், இறந்தகாலத்திரங்கல், நெஞ்சோடு புலம்பல், பூரண மாலை, நெஞ்சோடு மகிழ்தல், உடற்கூற்று வண்ணம் என்றிவற்றை அருளிச்செய்தார். அச்சிறுவர்களோடு ஆடிக்கொண்டிருப்பவர், தம் தூல வுடம்பு மந்திர சரீரமாகத் திரிந்து முத்தி யடையும் அவசரம் அடுத்தபடியால், அச் சிறுவர்களை நோக்கி, 'சிறுவர்காள், உங்களுக்குச் சில விநோதம் காட்டுவேன். என்னை ஒரு குழியிற் புதையுங்கள்' என அவர்கள் அவ்வாறே செய்தனர். அப்பொழுது அடிகள் அவர்களுக்கு ஆச்சரியம் உண்டாகும்படி வெளிப்பட்டு மற்றோர் மணற்குன்றின் மேல் நின்றனர். அது கண்டு அவர்கள் மகிழ்ந்து மீட்டும் மீட்டும் புதைக்க வெளிப்பட்டு நின்று பார்க்குக் காட்டி அப்பால் ஒருவிசை

புதைக்க வெளிப்படாமல் சிவலிங்க வடிவமாக முளைத்து நின்றார். சிறுவர்கள் வியப்பும் அச்சமும் அடைந்து ஓடி, நடந்தவற்றை ஊரார்க்குத் தெரிவிக்க, அவர்களெல்லாம் திரண்டுவந்து அவ் வற்புதத்தைத் தரிசித்துக் கண்படைத்த பயனைப் பெற்றார்கள்.

அடிகள் முத்தியடைதல்

# புலவர் புராணம்

இந்திரன் முதலாய திக்குப்பாலகர்கள் எத்தனையோ பேர் பூமியில் வந்து பிறந்து தவஞ்செய்து முத்தி யடைந்தனர். சிவபெருமானுக்கு நண்பர் என்னும் புகழோடு ஒருகால் வடதிசை காவலராயிருந்த குபேரப்பதவியாள ரொருவர் முத்தியை விரும்பினார். விரும்பினவர் கைலாசத்தில் சிலகாலமிருந்து தியான செபங்கள் செய்தமையால் பூலோகத்தில் சிறந்த காவிரியாறு சங்கமமாகும் காவிரிப்பூம்பட்டினத்தில் பெருஞ் செல்வனாகிய ஒரு வணிகனுக்குப் புத்திரராய்ப் பிறந்து வளர்ந்து வந்தார். தாம் பிறந்த மரபினர்க்கு அடுத்த வாணிகமே தாமும் முயன்று அளவற்ற பொருளீட்டினார். கப்பல் வியாபாரஞ் செய்யும் வணிகரனைவரும் இவரையே தங்களுள் தலைவரென்னுஞ் சிறப்போடு வாழ்ந்தார். சிலர் இப் பெரியரைப் பட்டினத்தடிகள் என்பர்; வேறு சிலர் இவர் பெயர் வெண்காடர் என்பர். இவருடைய தந்தையார் இவர் யௌவனமடைதற்கு முன்னமே சுவர்க்கத்திற்குச் சென்றார். தாயொருத்தியே இவருக்குத் துணையாயிருந்தாள். வணிகர் தலைவரென விளங்கிய இவர் மணமுடித்துத் திருப்தியுமடைந்தார்.

*அடிகள் பிறப்பு வளர்ப்பு*

அக்காலத்திலே, பாணர்குலத்தின ரொருவர் தையல்தொழில் புரிபவர் உண்மை ஞானமடைந்தும் இல்லத்திலேயே மனைவியோடு வாழ்ந்து வந்தார். பட்டினத்தடிகள் அவரோடு சினேகஞ்செய்து அண்ண

னென முறைபாராட்டிப் பந்திபோஜன முதலியப செய்தலில் பாதகமில்லையென் மதித்து நடந்தார். அவ

அடிகள் உபதேசம்பெறுதல்

ராலே ஸ்ரீ பஞ்சாக்ஷரம் உபதேசிக்கப்பெற்று மெய்யுணர் வடைந்தும் உலோபத்தை விடாராய், பொன்னையே பொருளென மதித்து, சம்பாதித்தது அமையுமென்று திருப்தியடையாது மேலும் மேலும் சம்பாதித்தலிலேயே நோக்கமாயிருந்தார். அதனாலே அவர் துன்பங்களும் அநுபவித்தார். செல்வம் மலைபோல வளர்ந்தது. 'இவ்வளவு செல்வம் படைத்தும் என்? புத்திரனில்லையே' என்று ஒரு சமயம் அவர் மனம் புழுங்கியதுண்டு. அவர் மனைவியாரோ சதா அதே கவலையாயிருந்தார்.

இங்கு இவ்வாறு நிகழத் திருவிடைமருதூரில் ஆதிசைவர் ஒருவர்முன் அவர் பிரார்த்தனைக் கிரங்கிச் சிவபெருமான் பிள்ளையுருவமாகி வந்து, 'என்னை வேண்டியவர்கட்கு விற்றுப் பொருளை யடைந்து பூசை புரிக' என்னலும், அவர் சிறிது மயங்கிப் பின் அப் பிள்ளையை யுடன்கொண்டு இப் பட்டினத்துட் புகுந்து, இங்குப் பெருஞ்செல்வமும் புத்திரனின்மையும் கலந்திருப்பது அடிகள் கிருகத்திலென்று அறிந்து, ஆங்குச் சென்று பிள்ளை வேண்டுமாயின் தனங் கொடுத்துப் பெறலாமென்றனர். அடிகள் இப் பிள்ளை என்ன தொழில் செய்யவல்லான் என,

சிவபெருமான் பிள்ளையாய்வருதல்

பிராமணர் சொல்லுமுன் அவரே 'எனக்குச் செய்யலாகாத தொழிலில்லை' என்ன, அடிகள் உவகையோடு ஒரு மணியை அவர் கையிற்கொடுத்து மதிக்கச் சொல்லினர். அவரும் 'இரத்தினப்பரீக்ஷை' யின்

இரகசியங்களை எடுத்துக் கூற அடிகள் மகிழ்ந்து அப் பிள்ளையைத் தம் மனைவிக்குக் காட்டவும, இருவரு மாகச் சம்மதித்து அப் பிராமணருக்கு வேண்டிய தனங்கொடுத்துப் பிள்ளையைப் பெற்றனர். பிள்ளைப் பெருமானும் செல்வமாக வளர்ந்து பன்னிரண்டாண்டு கழிதலும் வர்த்தகத் துறையி லிறங்கி அபார லாபத்தைச் சம்பாதித்துக் காட்டினர். சிறிது காலம் அவ்வாறு செய்து பொருளைக் கணக்கின்றிக் குவித்துப் பின் அடிகளுக்கு உண்மை ஞான முண்டாகும்படி மாறுன ஆடல் செய்யலுற்றார். ஒரு துறைமுகத்துக்குச் சென்று தான் கொண்டுபோன பொருளை யெல்லாம் போக்கினதோ டமையாமல் பிறரிடத்து ஏராளமாகக் கடன்வாங்கித் திரும்பியபொழுது மிகப் பயந்தவர்போல் நடித்தார். அவர் முன் ஈட்டித் தந்ததை யெல்லாம் சிறிதும் மனத்தில் நினையாது அடிகள் மிகக் கோபித்து அவரை ஓரறையில் தள்ளிப் பூட்டிட்டுக் காவலும வைத்தார். இதனை அடிகளின் மனைவியார் கேட்டு மனம்வருந்தி அறைப்பக்கஞ் சென்று பூட்டைத்தொட்டார். அஃது உடனே திறந்தது அங்குத் தம் பிள்ளையைக் காணுது சிவபெருமான் உமையம்மையாரோடு விடை மேற்கொண்டிருக்குங் காட்சியைக் கண்டார். அவர் சந்தோஷம் மிக்குத் தம் கணவனை விளித்தலும், அவரும் வந்து அக் காட்சியைக் கண்டு ஆனந்தமடைந்தார். அப்பொழுதே அக காட்சியும மறைந்தது. இவ்வாறு சிவபெருமானை நேரில் கண்டும் அடிகளுக்கு மோக்ஷ இச்சை யுண்டாகவில்லை. பிள்ளையையிழந்த அவ் வம்மையாரோ இரவும் பகலும் இதே கவலையாயிருந்து சிறிதுகாலஞ் செல்லலும் கைலாயஞ்சென்று சேர்ந்தார். இபபடிப்பட்ட பிள்ளை

யையும் மனைவியையும் இழந்தும் அடிகளுக்குச் செல் வத்தினிடத்து மயக்கம் ஒழியவில்லை. அவருடைய தாயாரும் அவர் தமக்கையாரும் உள்ளால் உவகை யடைந்தனர். தாம் அடைந்த பொருள்கொண்டு திருப்தியடையாத அடிகள் தம் மைந்தர்போலத் தாமும் கடலிற் கலமேறிச் சென்று லாபஞ் சிறிது மின்றிப் பெரு நஷ்டமடைந்து மீண்டார்.

அவர் ஊரில் இல்லாதபொழுது அவர்க்கு அருந்துணையாயிருந்த பாணபத்தர் சிவபதமடைதலை விரும்பினார். அவருடைய மனைவி, 'நமக்கு எவ்வளவோ பொன் சடன் கொடுத்துள்ளாரே பட்டினத் துப் பிள்ளையார்! அவர்க்கு என்னசொல்லச் சொல்லு கிறீர்?' என, அவளைக் கவலைப்படவேண்டா என்று தேற்றி, ஒரு பட்டுத்துணியை யெடுத்துப் பரப்பி அதில் தன் கையிலுள்ள காதற்ற ஊசிகளையெல்லாங் கொட்டி, 'போங்கால் இவை கூட வாரா' என்றொரு சீட்டெழுதி வைத்து எல்லாவற்றையும் இறுக்கித் தைத்து அவளிடம் கொடுத்து, 'இதனை அவருக்குக் கொடுத்தாயானால் அப்புறம உனக்குத் துன்பமில்லை' யென்று அவள் மீது அருள் நோக்கம் வைத்து அகண்டத்தில் கலந்தார். அரசன் கோமேசுவரர்கள் தம் மனைமீது கோடிக்கொரு பொற்கலசம் வைததுக்கொள்ளுமபடியாக உத்தரவு செய்தான். இவ்விரண்டு விசேஷ சம்பவங் களும் நடந்த வுடனேதான் அடிகள் தம் ஊர்வந்து சேர்ந்தது. முன்பு தம் பிள்ளையாக வந்த சிவபிரானை அடைத்துவைத்ததுபோலத் நம்மையும் இப்பொழுது அடைக்கத்தகும் என மனம் நொந்து அவர் தம் தாய்

அடிகளுக்கு உபதேசித்த குரு முத்தியடைதல்

தமக்கை முதலியோர் தேற்றத் தேறி ஊரில் தாம் இல்லாத காலத்து என்ன விசேஷ சம்பவங்கள் நிகழ்ந்தன என்று வினவி இரண்டையும் தெரிந்துகொண்டார். மறுநாள் அவர் தமயிடத்துள்ள மணிக்குவையி லொன்றைக் கொண்டுபோய் அரசனிடத்துக் காட்டி அவனைப் பிரமிக்கச்செய்தார். 'இன்று என் பொருள் இத்தனை கோடியென்று கணக்கிடலாகாதே சொல் லின் அப்படியே வீட்டின்மேல் பொற்சிகரம் சூட்டு கிறேன்' என்றார். அதனைக் கேட்ட அரசன் நாணிச் சிறிது கோபமடைந்து, 'சரி, சொல்லுகிறோம் போம்' என்றான். இதற்கு அர்த்தம் என்னவாகலா மென்று சிந்தித்துக்கொண்டே அடிகள் போய்ப் பாணரான தம் குருவின் மனைவியைக் கண்டு, 'அண்ணன் என்ன சொல்லிப் போயினர்? சொல்லும்' என்றார். அந்தக் கிழவி தன்னிடத்திருந்த முடிச்சைக் கொடுத்தாள். அடிகள் அதனை உற்றுப்பார்த்து அவிழ்த்து அதனு ளிருந்த சீட்டை வாசித்தார். பூலோக ஆசை அவர் மனத்தைவிட்டுப் பறந்துபோயிற்று. சிவபெருமான் இடபாரூடராய் வந்து காட்சி கொடுத்த பொழுதும் உண்டாகாத ஞானம குரு கொடுத்த முடிச்சால் உண் டாயிற்று. உடனே அடிகள் சென்று தம பொருளை யெல்லாம ஊர் கொள்ளும்படி வாரி யிறைத்து,

அடிகள் துறவு

ஸ்ரீ பஞ்சாக்ஷரமே துணையாக நடுத் தெருவில் வந்தார். பலா இவர்க் குப் பித்தம தலைக்கேறிற்று என்றிகழ்ந்தனர், சிலர் இவர்க்கு ஞானம் உதித்திருக்கிறது என்று புகழ்ந் தனர். அடிகளோ ஒன்றையும் கவனியாமல் வீடு களிற் சென்று இரந்துண்டு தெருத்திண்ணைகளில் கிடந்தார். இப்படித் துறவிகளுக்கு அரசரான அடி

களைச் சோழன் வந்து கண்டு, 'இஃதென்ன வம்பு செய்தீர்! இதனால் உமக்கு என்ன பயன் கிடைத்தது?' என, அவர் 'முன்பு நீர் இருந்தால் யான் நிற்கும் முறை பிறழ்ந்து போகக் கண்டேன். இனி என்ன பயன் எம்பெருமான் கொடுப்பாரோ!' என்றார். அரசன் அங்கு நின்றும் அவர் வீட்டுக்குச் சென்று பார்த்தபொழுது அது சத்திரம்போ லிருந்தது. அடிகளுடைய தாயார் விம்மி விம்மி யழுதுகொண்டிருந்தார். அங்குள்ளார் தத்தமக்கு வேண்டிய பொருளை அப்படி யப்படியே அடக்கிக்கொண்டார்கள் என்று கேள்விப்பட்ட அரசன் சேந்தனாரை வரவழைத்து அடிகளுடைய திரவியத்துக்குக் கணக்குக் கேட்ப அவர் தெரியாதென்றார். அரசன் சினந்து அவரை விலங்கிடுவித்துச் சிறையிலிட்டுத் தன் அரண்மனை சென்றிருந்தான். அடிகள் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை இடையறாது செபித்துச் சிவனே தாம் என்னும்படி யாயினார். இப் பெருமையை அறியாத உலகர் அவரைப் பார்த்து, 'யாவரும் மதிக்க வாழ்ந்த நீர் வீடு தோறுஞ் சென்று இரந்துண்டு அவரவர் கூறும் வசைமொழியைக் கேட்டுக்கொண்டு அலைவதென்ன?' என வினவும் பொழுதெல்லாம் 'குடியிருந்த வீட்டிற் கொள்ளிவைப்பதைக் குறித்துளேன்' என்று விடை கூறினார். ஜாதிமானம் விட்டு இரந்துண்ணும் அடிகளது தமக்கை அதனைச் சகிக்கமுடியாதவளாய் அடையொன்று விஷங்கலந்து செய்து அவரை வரவழைத்து அன்புடன் உபசரித்து அவர் கையில் கொடுத்தாள். அதனைத் தின்னுமுன் அதில் விஷமுண்டென்று திருவருளா லறிந்த அடிகள் அதனைப் பிட்டு, 'தன் வினை தன்னைச் சுடும் பிறவினை காலைச் சுற்றும். என்னைக்.

கொல்ல நீ இட்ட ஒட்டபபம வீட்டைச் சுடும்' என்று துண்டுகளை அவனிருநத வீட்டினமேல் எறிநதார. வீடு எரிநது விழுநதது. அது முதலாகத திருவருட் செயல பல அவரிடததுா நிகழவதை எலலாருங கண டாாகள். இனிய தமிழப பாடலகளும பல அவா வாககினின்றும வெளிபபட்டன

அவா தாய் இறநதவுடனே ஊரார பிணததைச சுடுகாட்டிறகு எடுததுச சென்றனா அவா அஙகுச சென்று மூட்டததைப பிரிததெறிநது தம அனனை யாரை எடுதது வைததுககொணடு அழுது விழுநது சில கவிகளுஞ சொலலி, எலலாரும தீபபகை யெனறு சொலலும வாழை யென றும விறகை அடுககி,

அடிகள தாயாரககு அநதியேடடி செயதல

முனனை யிட்டதீ முபபுரததிலே
பினனை யிட்டதீ தெனனிலஙகையில
அனனை யிட்டதீ அடிவயிறறிலே
யானு மிட்டதீ மூளக மூளகவே

எனனுங கவியைச சொலலி, அனனையாா வெநதபின் ஜலததில சாமபலைக கரைதது, மாடடு மேயபபா ராயத தபமைச சூழநது நிறபவாசளை நோககி, 'நீவிா சலிபபினறிக கொஞசநேரம எனனைபபோற செயவீ ராயின் கூலி தருவேன' எனறு சொலலி, மாாபில அடிககடியடிததுககொணடு, 'தாயாரே! தாயாரே!' என்று அலறிக குதிதது விழுநதாா அதுபோலவே அவாகளும செயதாாகள அடிகள மண எருமுட்டை முதலியவைகளைச சுண்டல முதலிய நலல சுவை யுடைய பக்ஷணங்க ளாககி அவாகளுக்குக கொடுத தாா அநத நாள் முதல எவரை யாா சாககக கொடுபபி

னும் அப்படிச் செய்யும் வழக்கம் தமிழ்மக்களுள் ஆசாரத்திற்கு வந்தது.

இது நடந்த சில நாட்குப் பின் அடிகள் ஓர் அம்பலத்தில் தனித்திருந்த பொழுது சேந்தனாருடைய பிள்ளை தாய் சொன்னதைக் கேட்டு அவர் அருகில் வந்து வணங்கினான். தம்மைக் கண்டு அஞ்சாமல் ஒரு குழந்தை அருகில் வந்ததைக் கண்டு அடிகள் கருணை மிக்கு அவனை ஆதரித்து அருகி லிருத்தி விபூதி யணிந்து, 'நீ யார்? உனக்கு என்ன குறை?' என்று வினவினார். அப் பிள்ளையும், 'என் தந்தையார் உங்களிடத்தில் கணக்கெழுதிய சேந்தனார் என்பவராம். நான் அவரை அறியேன். அவரை அரசன் விலங்கிடுவித்துச் சிறைச்சாலையி லிட்டுள்ளான் என்று சொல்லுகின்றனர். என் தாயோ கந்தையைக் கட்டிக் கொண்டு நெற்குத்தி வயிறுவளர்த்து என்னையும் காப்பாற்றுகின்றாள். பயப்படாமல் தங்களிடத்தில் போகும்படியாக அவள் சொன்னதால் நான் வந்தேன்' என்றான். அது கேட்டவுடனே அடிகளுக்குக் கோபம் பொங்கிற்று. அவர் அக் குழந்தையோடு சிறைக்கள

அடிகள் சேந்தனாரைச் சிறைமீட்டல்

வாயிலுக்குச் சென்று 'மத்தளை தயிர்' என்னும் பாட்டைச் சொல்ல, சேந்தனார் கையிலிருந்த விலங்கு சுக்கல் சுக்கலாகப் போயிற்று. இதனைக் கண்ட அரசன் அஞ்சி அவரைச் சிறைவிடுத்தான். சேந்தனார் விரைந்து வந்து அடிகள் பாதத்தில் வீழ்ந்திறைஞ்சினார். அப்பொழுது அடிகள் பிள்ளையைத் தந்தையிடத்தில் ஒப்பித்து இது முன்வினைப் பயன் என்று அவர்க்கு உண்மை யுணர்த்தி, 'உனக்குப் பிரியமான வரத்தைக் கேள்' என்று ஆஞ்ஞாபித்தனர்.

சேந்தனர் 'தேவரும் வியந்த பெருஞ் செல்வத்தை விட்டு மாந்தரிகழும்படி எதற்காகத் தேவரீர் உலவு கின்றீரோ அதனைப் பெறவே யான் விரும்பினேன்' என்றார். அடிகள் அவருக்குப் பஞ்சாக்ஷரோபதேசஞ் செய்து மனோலயமாகும வழியையும் உரைத்தார்.

அதன் பின் அடிகள் அரசனிடத்துக் கோபங் கொள்ளாது அங்கு நின்றும் போந்து பல பல சிவ ஸ்தலங்களை வணங்கித் தமிழ்ப் பாடல் மொழிந்தார். அக்காலத்தில் அவர்க்குத் தாம் மோக்ஷ மடையும் ஸ்தல மெதுவோ என்று ஒரு சிந்தை யுண்டாயிற்று. சிவபெருமானும் ஓர் ஆசாரிய னுருக்கொண்டு முன் வந்து பேய்க்கரும் பொன்றை அவர் கையிற் கொடுத்து, 'இது எந்தத் தலத்தில் தித்திக்குமோ அந்தத் தலமே உனக்கு இறப்பும் பிறப்பு மில்லாச் சிவகதியை அளிக்கும் தலம்' என்று சொல்லிப் பொருக்கென மறைந்தார். அது அடிகள் கையிலிருந்தது வாடவேயில்லை, பூமியில் வைத்தால் எப்படிப் பச்சென்று தழைத்திருக்குமோ அப்படி யிருந்தது. அடிகட்கு இது பெரும் பயத்தைச் செய்தது. இவ்வுலகில் இன்னும் பிறக்கவேண்டுங் கொல்லோ என்று தவித்தார். அதனால் இக் கரும்பின் சுவைகொண்டே முத்தி யடையுந் தலத்தை யறிந்துகொள்வோம் என்னும் துணிவின்றிச் சிவோபாசனையை முன்னினும் அதிகமாகச் செய்து தமிழ்ப் பாடல்களால் சிவனை ஸ்துதித்தார். சிதம்பர முதலிய ஸ்தலங்களில் சிற் சில நாள் தங்கி நாகைக் காரோணத்திற்குச் சென்றவர் ஓரிரவு உண வகப்படாமல் பசி மிக்கு, 'அத்திமுதல்'

சிவபெருமான் அடிகளுக்குப் பேய்க் கரும்பு கொடுத்தல்

என்னும் பாட்டைச் சொல்லி ஓரிடத்தில் உறங்கிக் கிடந்தபொழுது, அம்பிகை ஆலயத்துள்ள பொற் பாத்திரத்தில் அன்னங் கொண்டுவந்து அவர்க்குக் கொடுக்க உண்டார். விடியற்காலையில் ஆலயத்தினர் பொற்பாத்திரம் வெளிப்பட்ட சங்கதியை அரசனுக் குத் தெரிவித்தார்கள். அரசனும் சேவகரை யேவ, அவர்கள் அடிகளைப் பாத்திரத்தோடு முன் கொண்டுவந்து நிறுத்தினர். அடிகள் ஆலயச் சொத்திற்கு ஆசைப்பட்டா ரென்று தப்பபிப்பிராயங் கொண்ட அரசன் அவரைக் கழுவேற்றுமாறு கட்டளையிட்டான். கொலையாளர் அவரைக் கழுமுன் கொண்டுபோய் நிறுத்தியபொழுது அவர் 'என்செயலாவது' என்னும் பாட்டை யுரைக்க, அருட்கனலால் அக் கழுமரம் பற்றி யெரிந்து சாம்பலாயிற்று. அரசனும் உண்மை யிதுவென்று அம்பிகை யுணர்த்த உணர்ந்து திரு வருளை வாழ்த்தினன்.

அடிகள் கழுமரம் பற்றச் செய்தல்

அன்றே அடிகள் அவ்வூரை விட்டு வழியில் அநேக தலங்களைத் தரிசித்து மதுரை சேர்ந்து அங்குச் சிலநாள் வசித்திருந்தார். ஓர் உத்தமி இவர் பெருமை யுணர்ந்து இவர் போனபொழுதெல்லாம் நல்ல உணவு கொடுத்தாள். இவரும் ஆசையோ டருந்தினர். ஒரு நாள் இரவில் பசிதோன்றாமல் பொய்ம்மந்தமாயிருந்த தோடு இருளுஞ் சேர்தலாலே அடிகள் பிக்ஷைக்குப் போகாமல் திருக்கோயி லருகிலுள்ள ஒரு மண்ட பத்தில் இருந்தார். நடுநிசியில் பசி மிகவும் வருத்த அவர் தீயில் விழுந்த புழுவெனத் துடித்து, 'கடுவாயி னுங் கொடிய வயிறே உனக்கு இன்று யார் அன்போடு சோறிடுவார்கள்' என்று ஒரு கவி சொல்லியும் தீராத

பசியோடு அவ்வுத்தமி மனைக்குச் சென்று பிக்ஷை வேண்டுமென்ன, அவளும் விரைவில் எழுந்து வீட்டி லிருந்த சோறனைத்தையுங் கொண்டுவந்து அடிகள் மொக்கும்படி யிட்டாள். அப்பொழுது அவர் 'விடப் படுமோ' என்னும் பாட்டைப் பாடிவிட்டு, கரும்பின் சுவை நாடிப் பிற தலங்கட்குச் சென்றார். ஆங்காங்குப் பசியினால் சில வீடுகளிற் புகுந்து சோற்றுப்பானையை யுருட்டுதலால் அவரை மாதர் நிந்தித்தனர், ஆடவர் அடித்தனர். அடிப்பவர்களை நோக்கி 'என் வயிற்றி லடியுங்கள்' என்பாராம். அக்காலத்தேதான் 'பூணும் பணிக்கல்ல' என்னும் பாட்டைச் சொல்லினரென்பர். ஓட்டினையும் பழங் கந்தையையும் திண்ணையையும் திரு நீற்றையும் முத்தி தரும் பஞ்சாக்ஷரத்தையும் வியந்து பல பல பாடல்கள் பகர்ந்து, நான்மணிமாலை முதலிய சிலநூல்களுஞ் செய்து, உடற்கூற்று வண்ண மும பாடி யருளினார். காமாதி யறுபகைகளை யிகழ்ந்து பல கவிகள் சொலலி, சாமானியர்க்கு அறிதற்கரிய பெருமையையுடைய பத்திரகிரிமன்னர் வந்து இவர்க் கடிமைப்பட, அவரை ஆண்டு அவர் முத்தியடையு மட்டும் திருவிடைமருதூரிலேயே வாழ்ந்திருந்தார். அங்கு வாழ்ந்தபோது ஓர் இரவு தாக மிகுதியால் வருந்தி 'மென்று விழுங்கி' என்னும் பாட்டைச் சொல்ல, மருதப்பர் அவரைப் போலவே துறவிவேடம் பூண்டு வந்து வேண்டுவதென் என வினவி, 'யான் இரந்துண்ணும் ஓட்டில் நீர் உளது, உனக்குச் சரிப் படுமோ' என்றுரைக்க, அடிகள் 'அஃது ஆகாச கங்கையினும் உயர்ந்த' தென்று அதனை வாங்கிக் குடித்து நோக்கியபொழுது அத் துறவியைக் காணு ராயினர். உடனே 'ஏன் இன்னும் கதி நல்காமல்

என்னை அலைக்கின்றாய்?' என்று மனம் வருந்தி அங்கு நின்றும் புறப்பட்டு வடதிசை நோக்கினர். போகும் வழியில் ஒரு காட்டில் உண்ணுதற்கு ஒன்றுமின்றி வெயிலில் தடிதது, 'எங்கொழிந்தானோ சிவன்? செத்தானே போலும்' என்று வைதுவிட்டுப் போய்க் கொண்டிருக்கும்பொழுது, அங்கு ஒரு வீடும் அதன் முன் பந்தரும் கண்டார். அவ் வீட்டினு ளிருந்த தம்பதிகள் இவரை உபசரித்து 'இங்கு ஒரு நாள் தங்கிப் போகலாமே' யென்று சொல்லி இவர்க்கு உணவாதி கொடுத்தனர். இவரும் திருப்தியாக உண்டதும் மயக்கமுற்று ரகதிரை போயினர். வெயில் தாழ்ந்த பொழுது நித்திரை தெளிந்தது. அங்கு வீடுமில்லை பந்தரு மில்லை. தம்பதிகளும் மறைந்துவிட்டனர். அடிகள் இது சிவபெருமானது திருவிளையாடலே யென்றுணர்ந்தார்.

**அடிகள் திருவொற்றியூரில் முத்தியடைதல்**

பின்னர் அடிகள் திருவொற்றியூ ரடைந்து சிவபெருமானை யேத்தித் துதித்தார். மற்றைத் தலங்களிற் பார்த்ததுபோலவே தம் கையி லிருந்த கரும்பைருசி பார்த்தபொழுது அது தேவாமிர்தமெனத் தித்தித்தது. அடிகள் மனமுருகி, 'கண்டங் கரியதாம்' என்னும் பாட்டைச் சொல்லி, 'ஒடுவிழுந்து' என்னும் பாட்டால் அந்தத் தலத்துத் தெருவில் திரிவார்பாதத்திலிருந்து உதிரும்பொடியையும் துதித்தார். அவ்வூரிலேயே களிப்புடன் தங்கின அடிகள் மாடுமேய்க்கும் சிறுவரையே தம் தோழர்களாகக் கொண்டு கடற்கரையில் மணல்தோண்டி உடலைப் புதைக்கும் விளையாடலை ஒவ்வொரு சமயம் செய்து கடைசியில் ஒரு நாள் கழுத்தளவும் தம்மைப்

புதைக்கச் சொல்லி, 'வேறொருவர் பாராமல் மட்சால் கொண்டு மூடிவிட்டுப் போய் நாளை வாருங்கள்' என்றார். அவர்களும் அவ்வாறே செய்துவிட்டு ஊருக்குட் சென்று தாம் செய்தவாற்றை எல்லார்க்கும் சொன்னார்கள். பொழுது விடிந்ததும் ஊரா ரெல்லாம் திரண்டு அங்குப் போய்ப் பார்த்தபொழுது பட்டினத்தடிகள் சிவலிங்கமாய் மாறியிருத்தலைக் கண்டு வியந்தனர்.

## ஆராய்ச்சி

பட்டினத்துப் பிள்ளையார் சரித்திர முரைக்கும் நூல்கள் மேற்காட்டியவற்றை யன்றி வேறில்லை. இவற்றுள் ஒரோவொன்றைத் தழுவி யெழுதிய சரித்திரச் சுருக்கங்கள் பலவுள ; அவற்றைப்பற்றி உரைத்தல் இங்கு அநாவசியகம்.

இனி, இச் சரித்திரங்களின் உண்மை பொய்ம்மைகளை ஆராய்வோமாயின், உண்மை சிறிதே யுளதென்றும் கற்பனைகளே பெரும்பான்மை யென்றும் ஏற்படும்.

பட்டினத்துப்பிள்ளையார் புராணமுடையார் தாம் பெரியாரிடத்துக் கேட்டபடி சரித்திரத்தைக் கூறினார். அவர் காட்டும் முதற் குறிப்பையுடைய பாட்டுக்களிற் பல மறைந்தொழிந்தன. அவர் புராணமெழுதிய காலத்து அவை வழக்கிலிருந்திருத்தல் வேண்டும். சரித்திரமும் அதிகமாக விஸ்தரிக்கப்படாமல் சங்கிரகமாகவே கூறப்பட்டது.

திருவெண்காட்டடிகள் சரித்திரம் அதற்கு மிகப் பின் இக்காலத்துப் புலவரால் எழுதப்பட்டதாகலின் புராணவொழுங்கை யநுசரித்து அலங்காரங்களமைத்துச் சுவையுற எழுதப்பட்டுள்ளது : பட்டினத்துப் பிள்ளையார் புராணத்துட் காணும் சரிதங்களை விரித்தும் பெரியார் உரைக்கும் சரிதங்களைப் பெய்தும் விரிவாக எழுதப்பட்டுள்ளது. பட்டினத்தடிகள் அருளிச் செய்த பிரபந்தங்களும் தனிப்பாட்டுக்களும் இன்

னின்ன சந்தர்ப்பத்தில் பாடப்பட்டன என்று விளக்குவது. கூறிய சந்தர்ப்பங்களிற் பல பொருந்தா என்பது சில விடங்களில் வெளிப்படையாயும் சில விடங்களிற் சிறிது ஆராயின் விளங்குவதாயும் இருக்கும்.

புலவர் புராணச் சரித்திரம் இவ்விரண்டிற்கும் பின் எழுதப்பட்டதாகலின், இவற்றுள் காணும் சரித்திரங்களையும் பிறவற்றையும் சங்கிரகமாக உரைக்க எழுந்தது.

இம் மூன்றனுள்ளும் காணப்படாத ஒரு விஷயம் உண்டு. அது புலவர் புராணத்து வேறிடத்தும், திருவெண்காட்டடிகள் சரித்திரத்தில் முகவுரையிலும் சுட்டப்பட்டது. அருணகிரிநாதர் பட்டினத்தடிகளுக்குப் புத்திரராய் அவதரித்தவர் என்பதே அது. பட்டினத்தடிகள் காலத்துக்கு ஐந்நூறாண்டு பின் இருந்தவராக எண்ணப்படும் அருணகிரிநாதர் அவர்க்குப் புத்திராய் அவதரித்தார் என்கை எங்ஙனம் பொருந்தும்!

இனி, இம் மூன்று சரித்திரங்களும் கூறும் வரலாறுகளை ஒருவகையான் ஒழுங்கு படுத்தி நோக்கின் அவை அவதார முதலிய தலைப்பின் கீழ்வைத்து ஆராயத்தகும் பான்மையு என்றேற்படும். பட்டினத்தடிகள் குபேரனார் அவதாரமென்பதே முதல் ஆராயத்தகுவது. பட்டினத்துப் பிள்ளையார் புராணமுடையார் அவர் பெருநிதி படைத்த வைசியர் திலகமென்றே சொல்லினர். நிதி அளவின்றிப் பெற்றுரை இன்றும் உலகவழக்கில் குபேரன் என்று உபசாரமாகச் சொல்லுவதுண்டு. மற்று, அவர் பூவுலகிற் பிறக்குமுன் குபேரனைச் சிவ

அவதாரம்

பிரானுக்கு நண்பராயிருந்தார் முதலிய கதைகள் கற்பனை யென்றே சொல்லும் பான்மையன.

பிறப்பு வளர்ப்பு

பட்டினத்தடிகள் சிவநேசர்க்கும் ஞானகலை யம்மைக்கும் புத்திரராய்ப் பிறந்ததும், சிவநேசர் சிவபதமடைந்த பின் அவர் தம் தாயாராலேயே வளர்க்கப்பெற்றதும், இளமையிலேயே நல்லறிவு நல்லொழுக்கத்தோடு அவர் கலைகளைப் பயின்று வஸ்து விசாரஞ் செய்யத் தொடங்கியதும் திருவெண்காட்டடிகள் சரித்திரத்தில் மாத்திரமே காணப்படும்.

பூஜை பெறுதல்

அவர் சிறு வயதிலேயே பூர்வபுண்ணிய பரிபாகத்தால் உலக நிலையாமை யுணர்ந்து சிவ வழிபாடு செய்ய வுன்னிக் சற்குருவை நாடி நேரத்தில் ஊணுறக்கமுதலின்றிக் கவலைகொண்டு உறங்கிக்கிடந்த காலத்தில் சிவபெருமான் அவர் கனவில் வந்து அனுக்கிரகித்து அவரைத் திருவெண்காட்டுக்குப் போய்ப் பூஜை பெற்றுக்கொள்ளச் சொன்னதும், அவர் அக் கனவி னிலைமையைத் தாயார்க் குரைத்து அத் தாயார் துணையாகத் திருவெண்காடு சென்று அங்குப் பூஜைபெற்றதும், பின் மகேசுவர பூஜைக்குப் பொருளின்றி வருந்திய காலத்துச் சிவானுக்கிரகத்தால் வற்றாத நிதியம் பெற்றதும் அச் சரித்திரத்தில் மாத்திரமே காணப்படும்.

மணம்

இவைபோலவே, அவர் சிவசிதம்பரச் செட்டியார் புத்திரி சிவகலையம்மையை மணம் புரிந்த வரலாறும் அதில் மாத்திரமே காணப்படுவது. அவ்வொரு சரித்திரத்திலேயே காணும் இவ் வரலாறுகள் உண்மையானவை என்று துணிந்துரைத்தற் கில்லை. இவற்றை அச்

சரித்திரமுடையாரே கட்டி யுரைத்தாரென்று சொல்வதும் தவறாகும். அவர், வடமொழிப் பவிஷ்யோத்தர புராணத்துள் திருவிடைமருதூர் மாஹாத்ம்யத்தில் அடிகள் புராணம் ஸாங்கமாக உரைக்கப்பட்டுள்ளது, அது தமக்கு ஓர் ஆதாரமென்றனர். கி. பி. பத்தாம் நூற்றாண்டில் தமிழ்நாட்டிலிருந்த அடிகள் வரலாற்றை வடமொழிப் புராணமுரைப்பதும், அப் புராணமும் நைமிசாரணியத்தில் பண்டைக்காலத் திருந்த முனிவரர் தமக்குள் இவ் வரலாற்றைக் குறித்துச் சர்ச்சை செய்வதாக விரிப்பதும் இக்காலத்துச் சரித்திர வுணர்வுடையார் ஒப்புக்கொள்ளத் தக்கனவல்ல.

சிவசருமர் வரலாறு

இனி, பட்டினத்தடிகள் தம் குலம் விளக்க ஒரு பிள்ளையின்றி வருந்திய வரலாறு மூன்று சரித்திரங்களும் உரைத்ததே. ஆயினும் சிவசருமர் வரலாறு உரைக்கும் விஷயத்தில் அவற்றுள் பேதங் காணப்படும். பட்டினத்துப்பிள்ளையார் புராணம் சிவசருமர் மனைவி யிழந்தவரென்று கூற, திருவெண்காடர் சரித்திரம் அவர் பெரிய குடும்பி யென்னும். முன்னது மருதப்பிரான் பாலனுருவாய் வந்திருந்தாரென்ன, பின்னது அவர் வில்வமரத்தடியிற் குழவியாய்க் கிடந்தாரென்றும் சிவசருமர் சென்று குழவியை யெடுத்துப் போற்றினரென்றும் உரைக்கும். அடிகள் பிள்ளையைச் சிவசருமரிடத்துப் பெறும் வகையைப் பற்றியும் பேதம் உண்டு.

மருதப்பிரான் காளையுருவாய்ப் பட்டினத்தடிகளிடத்துச் சிறிதுகாலந் தங்கியிருந்தாரென்பது மூன்றுக்கும் ஒத்ததே. எனினும் ஸாக்ஷாத் சிவபெருமானே பிள்ளையாக வந்து அடிகளோடு வசித்திருந்

தார் என்னும் வரலாறு சாமானிய அறிவுகொண்டு ஆராய வொண்ணுதது. கடவுளே மானிடவுருக் கொடு வந்தாரென் பதை ஏற்றுக்கொண்டு நோக்கு வோமாயின் அவர் கடலின்மீதும் அடிகள் கிருகத்தி லும் நிகழ்த்திய திருவிளையாடல்கள் சாதாரண மென்றே தோன்றும்.

மருதப்பிரான் வரவு

பட்டினத்தடிகள் உபதேசம் பெற்ற வரலா றுரைப்பதில் புலவர் புராணம் பேதப்படுவது முன்னரே அறியக் கிடந்தது. திருவெண்காடர் சரித்திர முடையார் வேறு வரலா றுண்டென்று குறித்த வர லாற்றினும் வேறுயுள்ளது இது. சிவபெருமானே மருதப்பிரானுய் வந்து உடனிருந்து உபதேசஞ் செய் தும் தெளிவடையாத பட்டினத்தடிகள் தையல்கார நண்பரின் உபதேச மொழியால் துறவடைந்தாராம். ஆயின் காதற்ற வூசி வரலாறு மருதப் பிரானிடத் திருந்து அந் நண்பருக்கு மாற்றப்பட்டது. அடிகளின் பிரபந்தங்களை நோக்குவமாயின், 'பட்டைக் கிழித்து' என்று தொடங்கும் பாட்டு, சிவனே ஊசி வைத்துச் சுருட்டிய கிழியை அடிகளுடைய மனைவி கையிற் கொடுத்துவிட்டு மீண்டார் என்று தெளிவாக உரைப்ப தைக் காண்போம். அதனை யடுத்துவரும் 'சூதற்ற' என்னும் பாட்டு, 'தீதற்ற மன்னவன் சிந்தையினின்று தெளிவதற்கோ காதற்ற வூசியைத் தந்துவிட்டான் என்றன் கைதனிலே' என்றுரைத்தது. அதனை யடுத்து வரும் பாட்டு உலகில் சிவபிரான் பதத்தை யன்றி வேறு பொருள்கள் சதமல்ல வென்றுணர்த்தி, 'காதற்ற வூசியும் வாராது காணுங் கடைவழிக்கே'

அடிகள் உபதேசம் பெறுதல்

என்று முடிந்தது. 'அண்ணாமலையர் மலர்ப்பதத்தை' என்றுரைத்தலால் இப் பாட்டுத் திருவண்ணாமலையிற் சொல்லியது போலும். அடிகள் துறக்குங் காலத்து இதனைச் சொல்லினர் என்பது பொருந்தாது. இதனை யடுத்த பாட்டும் இப்படியே முடிகின்றது; இதில் 'வேதத்தி னுட்பொருள் மண்ணாசை மங்கையை விட்டு விடப் போதித்த வன்மொழி கேட்டிலையோ' என்பதால் அடிகள் தமக்கு உபதேசமானதைக் குறித்துள்ளார். இவ்வாதாரங்களெல்லாம் சிவபிரான் அடிகளுக்கு உபதேசஞ் செய்தன ரென்பதையே உறுதிப்படுத்தும். முருகதாசர் அடிகளைத் தையல்காரப் பெரியாரிடத்து உபதேசம் பெறச் செய்ததோ டமையாது சிவபெருமானே நேரில் மருதப்பிரானாக வந்தும் நிகழாதுபோனது அப் பெரியார் வாக்கால் நிகழ்ந்த தென்றும் உரைத்தார். குரு கடவுளினும் பெரியார் என்று கூறுவார் மதம்பற்றியே முருகதாசர் அங்ஙனம் உரைத்தாராயினும் அது பொருந்தா உரையாகும். கடவுட் பிரசாதம் பெற்றுக் கடவுள் ஏவலாலேயே குரு உபதேசிக்கப் புகுவர் ஆதலால் கடவுள் செய்யலாகாததைக் குரு செய்தாரென்றல் கடவுள் பெருமையை அறியாமையே. மற்று, ஆன்மாவுக்கு இருவினை யொப்பு மலபரிபாக மென்பதுண்டு அது தோன்றுங் காலத்துத்தான் ஞானசித்தி யுண்டாம், அப் பரிபாகம் அடிகளுக்குப் பின்னர் நிகழ்ந்த தென்றல் ஒருவாறு பொருந்தும்.

மருதப்பிரான் மறைதல்

மருதப்பிரான் தோற்றம் எவ்வளவு அதிசயமோ அவ்வளவு அதிசயமே அவர் மறைவும், சிவபிரான் ஆன்மாக்களை ஆட்கொள்ளும் பொருட்டு மானிடவுருக் கொள்ளி

னும் ஒரு தாய் வயிற்றிற் பிறத்தலும் உலகினர்போ லிறத்தலுமில்லை யென்பது சைவ சமயிகள் கொள்கை. பின் பட்டினத்தடிகளுக்கு ஆங்காங்கே ஊர்காவல னாகவும் பரதேசியாகவும் சிவபிரான் காட்சி கொடுத்த தற்கும் இஃது ஒக்கும்.

அடிகள் துறவு

பட்டினத்தடிகள் சரித்திரத்தில் எப் பகுதி ஐய முடைத்தாயினும் அவர் பெருஞ் செல்வத்தைத் துறந்த பெரியார் என்பது எல்லாரும் ஒப்பிய உண்மை. 'அறந்தானியற் றும் அவனிலுங் கோடி யதிகம் இல்லந் துறந்தான்' என்னும் அவர் வாக்கு இல்லறத்திலிருந்து பல தரு மங்களைச் செய்தலினும் துறவறத்தை மேற்கொள்ளு தல் மேலானதென்று தெளிவாகக் காட்டியது. இன் னும், இதனை யடுத்து 'அவனிற் சதகோடி உள்ளத் துறவுடையோன்' என்றுரைத்தலால், வீட்டிலிருந்தே மனத்துறவடையலாம் புளியம்பழமும் தோடும்போல் சம்சாரத்திற் பற்றின்றி யிருந்தாற் போதும் என்னும் கொள்கை அவர்க்குச் சம்மதமன்று என்று ஊகிக்க வேண்டி யிருக்கின்றது. மற்று, பட்டினத் தடிகள் துறவு கடுந்துறவென்று சொல்லுந் தகையது. பெண்டு பிள்ளை சுற்றம் என்னும் தொடர்பு மாத்திரம் விட்டா லமையுமென்று ஒரிடத்திற் புகுந்து ஊணுறக்கங் குறை வின்றி உலகர் போலவே யொழுகும் துறவு வேட முடையார்க்கும் அவர்க்கும் நெடுந் தூரம்.

> உடைகோ வணமுண் டுறங்கப் புறந்திண்ணை யுண்டுணவிங்
> கடைகா யிலையுண் டருந்தத்தண் ணீருண்டு

என்றும்,

> விமலர்தந்த
> ஓடு நமக்குண்டு வற்றாத பாத்திரம்

என்றும்,

ஆறுண்டு தோப்புண் டணிவீதி யம்பலந் தானுமுண்டு
நீறுண்டு கந்தை நெடுங்கோ வணமுமுண்டு நித்தநித்தம்
மாறீண் டுலாவி மயங்குநெஞ் சேமனை தோறுஞ்சென்று
சோறுண்டு தூங்கிப்பின் சும்மா விருக்கச் சுகமுமுண்டே

என்றும்,

மாடுண்டு கன்றுண்டு மக்களுண் டென்று மகிழ்வதெல்லாம்
கேடுண் டெனும்படி கேட்டுவிட் டோமினிக் கேள்மனமே
ஓடுண்டு கந்தையுண் டுள்ளே எழுத்தைந்தும் ஓதவுண்டு
தோடுண்ட கண்ட னடியார் நமக்குத் துணையுமுண்டே

என்றும்,

கறையற்ற பல்லுங் கரித்துணி யாடையுங் கள்ளமின்றிப்
பொறையுற்ற நெஞ்சமும் பொல்லாத வூணும் புறந்திண்ணை
தரையிற் கிடப்பும் இரந்துண்ணு மோடும் சகமறியக் [யும்
குறைவற்ற செல்வமென் றேகோல மாமறை கூப்பிடுமே

என்றும் உரைத்த அவதூத வேந்தர் பட்டினத்தடிகள். ஸர்வஸங்க பரித்தியாகம் என்றும் ஸந்நியாசம் என்றும் சொல்லத்தகுவது அந் நிலையேயாகும்.

எந்தச் சாதியிலும் [யே
இரக்கத் துணிந்துகொண் டேன்குறை வேதுமெனக்கில்லை

என்பதையும் நோக்குக. துறந்து சிறிது காலஞ் சென்ற பின் இரப்பாளி வேடங்கொண்டு வந்த சிவபெருமானை அவர் ஓடும் நாயுமாகிய பெருஞ் சம்சாரத்தையுடைய பத்திரகிரியா ரிடத்துப் போக்கின வரலாறு 'ஓடு நமக்குண்டு' என்னும் நிலைக்கும் அப்பாற்பட்டதா யிருக்கின்றது. 'இருக்கு மிடந் தேடி' என்னும் வெண்பா அதற்கும் மேற்பட்ட நிலையைக் குறித்தது. இவ் வெண்பாவை அடிகள் கொங்கு நாட்டில் ஒரு மூர்க்கன் தம்மைப் புடைத்த பொழுது பாடியதாகத் திருவெண்காடர் சரித்திரம் கூறிற்று.

பசியினால் வருந்தி இரக்கச் சென்றும் உணவு கிட்டா தாக இவ் வெண்பாவை அடிகள் சொல்லினரென்றும், அதன்மேல் சிவகாமித் தாயார் பாற்சோறு வெள்ளிக் கிண்ணியில் கொண்டுவந்து அருத்தின ரென்றும் உரைப்பதுமுண்டு. ஆயினும் அவ்வாறு இரக்கச் செல் லாமல் ஓரிடத்தில் இருந்து அங்குப் பிறர் கொண்டு வந்ததைப் புசித்தல் உயர்ந்த வொழுக்க மென்பது சாஸ்திர சம்மதமானது.

சேந்தனார்

திருவிசைப்பாவில் ஒரு பகுதியும் திருப்பல்லா ண்டும் அருளிச்செய்த சேந்தனார் அடிகளது முதற் சீடரென்று சரித் திரங்கள் உரைத்தன. சேந்தனார் இயற்றியனவும் வேறு எண்மர் இயற்றியனவுமே அச்சிட்டு வழங்கும் திரு முறைப் பதிப்புக்களுள் திருவிசைப்பா என்று வகுக் கப்பட்டுள்ளன. பட்டினத்துப் பிள்ளையார் புராண முடையார் அடிகள் செய்தன வற்றையும் 'திரு விசைப்பா' என்றே ஓதினர். திருவெண்காடர் சரித்திர காரர் 'பூதமும் கரணமும்,' 'யாவரே யிருந்தும்,' 'உண் டதே யுண்டும்' என்னும் மூன்றையும் திருவெண் காட்டுத் திருவிசைப்பா வென்று குறித்தனர். திரு. வெண்காட்டுத் தலபுராணம் 'கோடியமனத்தால்' என்னும் நான்காவதொரு பாட்டையும் அத் தலத்துத் திருவிசைப்பா என்று காட்டியது. இவை நம்பி யாண்டார் நம்பிகள் தொகுத்த திருவிசைப்பாத் திரு முறையுள் ஏறுததற்குக் காரணம் புலப்படவில்லை. திருமுறை கண்ட புராணம் செய்த உமாபதி சிவா சாரியர் 'மோகமெறி திருவிசைப்பா மாலை முறை. யொன்று' என்று சொன்னாரே யன்றி ஒன்பதின்மர் செய்தாரென்றும் அவருள் பட்டினத்தடிகள் ஒருவ

ராகார் என்றும் காட்டினரல்லர். சைவ சமய நெறி உரைகாரர் தம் உரையுள்,

சீரார்பா ளிகைத்தேவர் கருவூர்த்தேவர்
  திகழ்நம்பி கண்டரா தித்த தேவர்
பாராள்வே ணாட்டடிக டிருவாலி யமுதர்
  பரவுபுரு டோத்தமர்பண புடைசேதி ராயர்
ஏராரு மிளம்பெருமா னடிகள் சேந்த
  ரெண்ணிலதி ராவடிக ளிவர்க ளோடும்
பாராளுங் கல்லாடர் பட்டினத்துப் பிள்ளை
  பரவுதிரு விசைப்பாவைப் பாடினாரே

எனத் திருவிசைப்பாச் செய்தார்கள் பெயரைக் குறிக்கும் ஒரு செய்யுளை மேற்கோளாகக் காட்டியிருக்கின்றார். இச் செய்யுளைப் பிரமாணமாகக் கொள்ளின், இப்பொழுது பதினோராந் திருமுறையில் காணப்படும் இளம்பெருமானடிகள் அதிராவடிகள் கல்லாடனார் பட்டினத்துப் பிள்ளையார் பிரபந்தங்களைத் திருவிசைப்பாவில் புகுத்தவேண்டும். மற்று, சேந்தனாரைச் சிறையினின்றும் விடுவிக்க அடிகள் 'மத்தளை தயிருண்டானும்' என்னும் பாட்டைப் பாடினா ரென்பது எல்லாரும் உரைத்த வரலாறே. பாட்டுங் கதையைத் தெளிவுபடுத்தியது. ஆயினும் சேந்தனார் சிறையிலிருந்து வெளிப்பட்ட விதம் அஃது அற்புத காரியங்களோடு சேரத்தக்கதென்று காட்டும சேந்தனார் கதையில் வரும் களி வரலாற்றுக்கும் இது பொருந்தும். கடவுள் அருள்கொண்டு பெரியார் நிகழ்த்தும் அற்புத காரியங்களைச் சாமானிய அறிவுகொண்டு அளத்தல் கூடாது. மற்று, சேந்தனார் களி நிவேதனத்தைக் குறித்து நம்பியாண்டார் நம்பிகள் தமது கோயிற் றிருப்பண்ணியர் விருத்தத்தில்,

பூந்தண் பொழில்சூழ் புலியூர்ப் பொலிசெம்பொ னம்பலத்து
வேந்தன் றனக்கன்றி யாட்செய்வ தென்னே விரிதுணிமே
லார்ந்தண் பழைய வவிழையன் பாகிய பண்டைப்பஞ்றச்
சேந்தன் கொடுக்க அதுவுந் திருவமிர் தாகியதே

என்றுரைத்தது இங்கு ஆராயத்தக்கது. இங்குப் பழைய அவிழென்றது பழஞ்சோற்றைக் குறிக்கும். ஆயினும் சம்பிரதாயத்தில் அது களியைக் குறிப்ப தாய்த் திருவாதிரை நாளில் நடேசப்பெருமானுக்குச் செய்யும் களி நிவேதனத்துக்கு உற்பத்தி காட்டுவ தாயிற்று.

அவிழ்ந்த துணியில் அவிழ்ந்த அமுதை
அவிழ்ந்த மனத்தோ டளித்த—தவிழ்ந்தசடை
வேந்தனார்க் கின்னமுத மாயிற்றே மெய்ப்பத்தி
சேந்தனார் செய்த திறம்.

என்னும் உமாபதி சிவாசாரியர் அருளியதாக வழங்கும் வெண்பாவையும் நோக்குக. களி நிவேதனஞ் செய்த சேந்தனாரும் திருவெண்காடரிடத்து உத்தியோகம் வகித்திருந்து பின் அவர் சிஷ்யரான சேந்தனாரும் ஒருவரேயாம் என்பது ஐயத்தின்பாற் படும். நம்பியாண்டார் நம்பிகள் பறைச் சேந்தனார் என்று தெளிவாகக் குறித்தலால் களி நிவேதனஞ் செய்தவர் நந்தனாரைப் போன்ற பறைக்குலத் தடியாராவர். திருவெண்காடரோடு சம்பந்த முடையாரை அக் குலத்தவரென்று சொல்லல் இயையாது. இன்னும், 'பண்டைப் பறைச் சேந்தன்' என்று நம்பியாண்டார் நம்பிகள் சொல்லுவதால் அச் சேந்தனார் அவர் காலத்துக்குச் சற்று முன்னேயிருந்த திருவிசைப்பாச் செய்தாரின் வேறுவரோ என்றும் ஊகித்தற் கிடமுண்டு. திருவெண்காடரோடு சம்பந்தமுடைய சேந்தனாரே

திருவிசைப்பா திருப்பல்லாண்டு அருளிச் செய்த சேந்தனார் என்று கொள்ளுதலில் பாதக மிருப்பதாகத் தெரியவில்லை.

ஸ்தலயாத்திரை

துறந்த பின் பட்டினத்தடிகள் சிவ ஸ்தலங்கள் தோறுஞ்சென்று தரிசித்துப் பாட்டுக்கள் பாடினரென்பது அவரது பிரபந்தங்களால் விளங்குவதே. நூல்கள் போக அவரியற்றிய தனிப்பாடல்கள் காஞ்சி, சிதம்பரம், திருச்செங்காடு, திருவொற்றியூர், திருவிடைமருதூர், திருக்கழுக்குன்றம், திருக்காளத்தி, கைலாயம், மதுரை, திருவாரூர், கச்சிக்காரோணம், திருவிருப்பையூர், திருவையாறு, குற்றாலம் என்னும் தலங்களில் அடிகள் சென்றிருந்தா ரென்பதை நிச்சயமாகக் காட்டும். மற்றைச் சிவ ஸ்தலங்களுக்கும் அவர் போயிருக்கக் கூடும், அவர் பாடியதாகப் பாட்டுக்கள் கிடைத்தில.

தாயார் தகனம்

அடிகள் அவர் தாயாருக்குத் தகனகிரியை செய்தவரலாற்றுக்கு அவர்பாடியனவாக வழங்கும் பாட்டுக்களே ஆதாரம். அச் சமயத்தில் அவர் தாய்பாற் காட்டிய அன்புக்குத் தாய்க்குப் பிள்ளையிடத்துள்ள அன்பையே ஈடாகச் சொல்லலாம். பாட்டுக்கள் அடிகள் தீமூட்டுதலையும் வாய்க்கரிசி யிடுதலையும் சரீரம் வெந்தபின் துக்கித்தலையும் பால்தெளிக்கப் பிறரை யழைத்தலையும் குறிக்கின்றன. எருமுட்டையைப் பிரித்தெறிந்து பிரேதத்தை வாழைப்பட்டையின்மேல் வைத்துத் தகனஞ் செய்தார் என்பதற்குப் பாட்டுக்களில் ஆதாரமில்லை.

பட்டினத்தடிகள் வடநாட்டுக்குச் சென்றிருந்தபொழுது பத்திரகிரியா ரென்னும் அரசரால் கழுவேற்றுந் தண்டனை விதிக்கப்பட்டா ரென்றும், அவர்

'என்செயலாவது' என்னும் பாட்டைச் சொல்லலும் கழுமரம் பற்றியெரிந்தமை கேட்ட அரசர் வியந்து அவர்க்குச் சீடராணுரென்றும், பின் அவரே திருவிடைமருதூரில் வந்து தங்கி அடிகள் அருளால் அரச குமாரியான நாயை முத்தியடைவித்துத் தாமும் முத்தி யடைந்தார் என்றும் உரைக்கும் வரலாறு பிரசித்த மானதே. பத்திரகிரியார் மெய்ஞ்ஞானப் புலம்பல் என்றொரு பிரபந்தம் அப் பெரியார் செய்ததாக வழங்குகின்றது. அதனுள் அடிகள் பிரபந்தங்களுள் காணப்படும் சொற்றொடர்கள் ஆங்காங்கே காணப்படுகின்றன. மற்று, பத்திரகிரியார் வடநாட்டு உச்சயினி யரசராயின் அவர் இப் புலம்பல் பாடுதற்கு வேண்டிய தமிழ் ஞானத்தை எங்ஙனம் பெற்றார்? தமிழ்நாட்டில் வந்து வசிப்போர் தமிழ் ஞானம் பெறுதல் சகசமேயாயினும் அடிகளிடத்து உபதேசம் பெற்று அவரோ டிருக்கையை விரும்பித் திருவிடைமருதூர்க்கு வந்தவர் இரந்துண்டற்குப் புறத்துச் செல்லும் நேரம் போக மற்றை நேரத்தில் சமாதி பழகிக்கொண் டிருந்திருப்பார், புறத்துச் செல்லும் நேரத்திலும் உலகரோடு வீண்வார்த்தையாடி யிருக்க மாட்டார், அவருக்குத் தமிழ்ச்சொற்களை அவ்வளவு நன்றாக வழங்கும் திறமை எங்கிருந்து வந்தது? இன்னும், இப் பத்திரகிரியாரை விக்கிரமாதித்தியன் தமையனும் வடமொழியில் சதகத்திரயங்களை யாக்கியோனுமாகிய பர்த்ருஹரியென்று சிலர் சொல்லுவர். விக்கிரமாதித்தியன் காலம் கி. மு. முதல் நூற்றாண்டென்றும், கி.பி. ஆறாம் நூற்றாண்டென்றும் கொள்கை பேதப்படுகின்றது. சீன யாத்ரிகர் ஒருவர் பர்த்ரு

பத்திரகிரியார் வரலாறு

ஹரியென்னும் ஸம்ஸ்க்ருத பண்டிதர் கி. பி. 650-ல் உயிர் துறந்தனரென் றுரைத்தார். பட்டினத்தடிகள் காலம் இதற்குப் பன்னூற்றாண்டுகள் பிந்தியதாகலின், அவர் சீடரும் வேறு பர்த்ருஹரியும் வேறு என்பது நிச்சயம்.

திருவொற்றியூரில் முத்தி

சிவஸ்தலங்களை யெல்லாம் தரிசித்துக் கடைசியில் திருவொற்றியூர்க்கு வந்த பட்டினத்துப் பிள்ளையார் அத் தலத்திலேயே முத்திபெற்றார் என்பதற்கு அவ்வூரில் கடற்கரையை யடுத்துள்ள அவர் சமாதியே சான்று பகரும். திருவொற்றியூர்க்குச் சுவாமி தரிசனத்துக்காகச் செல்பவர் பட்டினத்தார் சமாதியைப் பாராது மீள்வதில்லை. ஆயினும், 'இவ்வாலயம் இக்காலத்தார் கட்டிக்கொண்டது, உண்மைச் சமாதியைக் கடல்கொண்டது, இப்பொழுதும் பூர்ணிமையன்று அவ்விடத்துக் கருடன் வந்து வட்டமிடுதலைக் காணலாம்' என்று சிலர் உரைப்பர். உண்மை விளங்கவில்லை. மற்று, அடிகள் பேய்க்கரும்பைக் கொண்டு தம் முத்தித்தலத்தை யறிந்து ஒற்றியூ ரடைந்தாரென்று புலவர் புராணமுரைத்தற் கேற்ப, பட்டினத்தடிகள் திருவுருவப் படங்களில அவர் கையிற் கரும்பு காணப்படுகின்றது. எனினும, அக் கதை 'கண்டங் கரியதாம்...கடலருகே நிற்கும் கரும்பு' என்ற வெண்பாவிற் கேற்பக் கட்டபபட்டதோ என ஓர் ஐயம் ஜனிக்கின்றது. அவ் வெண்பா சிவபெருமானையே குறிக்குமென்பதும் அவரைக் கரும்பாக உருவகித்ததென்பதும் வெளிப்படை. இனி, அடிகள் சிவலிங்கமாக மாறினாரென்று சரித்திரங்களெல்லாம் உரைத்தனவன்றோ. அஃது ஒருவகை முத்தி. முத்தியிலும்

தேகம் மூவகைச் சித்திபெறுமென்றும், அவை உருவச் சித்தி அருவச்சித்தி உருவருவச் சித்தியென்றும், சுந்தரமூர்த்தி நாயனாரும் சேரமான் பெருமாணாயனாரும் திருமேனியோடு கைலைக்குச் சென்றதுபோல்வன உருவச் சித்தியென்றும், திருவாதவூரடிகள் திருமேனி சிற்சபையிலே பரமாகாசமாகக் கலந்து நின்றதுபோல்வன அருவச் சித்தியென்றும், ஆளுடைய பிள்ளையார் சோதியுட் கலந்ததும் திருநாவுக்கரசு நாயனார் சிவலிங்கத்துட் கலந்ததும் பட்டினத்தடிகள் தம்மேனியையே சிவலிங்கமாக நிறுத்தியதும் போல்வன அருவுருவச் சித்தியென்றும் உரைத்தனர் தொழுவூர் வேலாயுத முதலியார். உலகர்போல் மண்மேல் சரீரத்தை விடுத்தல் உண்மை முத்தியாகாது என்பது அவர் கொள்கை. மாணிக்கவாசகர், அருணகிரிநாதர், தாயுமானார், குமாரதேவர் முதலிய பெரியோர்களும் இக் கொள்கையை ஆதரித்தனர்.

மேல் ஆராயப்பட்டவை பட்டினத்தடிகள சரித்திரத்தில் முக்கியமான அம்சங்கள். முக்கியமல்லாத பல அம்சங்கள் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ளத் தகாதன என்றொழிக்கப்பட்டன. பாட்டுக்களை வைத்துக்கொண்டு கட்டிய கதைகள் அவற்றுட் சில.

பட்டினத்தடிகள் காலம்

இனி, பட்டினத்தடிகள் இருந்த காலம் எதுவென்று ஆராய்பவர் எளிதில் ஒரு முடிவிற்கு வருதற்கேற்ற சாதனம் அவர் நூலொன்றில் காணப்படுகின்றது. திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில்,

வித்தகப் பாடல் முத்திறத் தடியருந்
திருந்திய அன்பிற் பெருந்துறைப் பிள்ளையும்

என்னும் வாக்கியமே அது. 'பெருந்துறைப் பிள்ளை'

மாணிக்கவாசகரையும், 'முத்திறத்தடியர்' தேவார முடையார் மூவர் பெருமக்களையும் குறித்தன. இஃ தன்றியும், திருஞானசம்பந்த சுவாமிகள் வரலாறு திருக்கழுமல மும்மணிக் கோவையில் தெளிவாக உரைக்கப்பட்டது:

தாதையொடு வந்த வேதியச சிறுவன்
தளர்நடைப் பருவத்து வளர்பசி வருந்த
அன்னா யோவென் றழைப்ப முன்னின்று
ஞானபோ னகத்தரு ளட்டிக் குழைத்த
ஆனாத் திரளை அவன்வயி னருள
அந்தணன் முனிந்து தந்தார் யாரென
அவனைக் காட்டுவன் அப்ப வானார்
தோடு டைய செவிய னென்றும்
பீடு டைய பெம்மா னென்றும்
கையிற் சுட்டிக் காட்ட
ஐயநீ வெளிப்பட் டருளினை ஆங்கே.

திருவெண்காட்டுத் திருவிசைப்பாவில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் வரலாறு உரைக்கப்பட்டது. திருஞான சம்பந்த சுவாமிகள் காலமும் அவர்காலத்து முதியரா யிருந்த திருநாவுக்கரசு சுவாமிகள் காலமும் கி. பி. ஏழாம் நூற்றாண்டின் இடைக்கால மென்பது சிலா சாஸநங்கள் கொண்டு வரையறுக்கப் பட்டுள்ளது. இவர்களுக்குப் பின் சுந்தரமூர்த்தி சுவாமிகள் இருந் தனரென்பது எல்லாரும் ஒப்புக்கொண்ட உண்மை யே மாணிக்கவாசகர் காலம் சுந்தரமூர்த்தி சுவாமி கள் காலத்துக்குப் பிற்பட்டதென்பதும் பலரும் ஒப்பியதே. பட்டினத்தடிகள் பிரபந்தங்களைப் பதி னோராந் திருமுறையுள் சேர்த்தருளிய நம்பியாண்டார் நம்பிகள் காலம் பதினோராம் நூற்றாண்டின் முற்பகுதி யென்பது சிலாசாஸநங் கொண்டு நிச்சயிக்கப்பட்

டுள்ளது. ஆதலால் பட்டினத்தடிகள் கி. பி. ஏழாம் நூற்றுண்டுக்கு முன்னுதல் கி. பி. பதினொராம் நூற்றுண்டுக்குப் பின்னுதல் இருந்தாரெனல் பொருந்தாது. சேரமான் பெருமாணுயனுரோடிருந்த சுந்தரமூர்த்தி சுவாமிகள் காலம் கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டின் முற்பகுதி யென்று ஒருவாறு முடிவு செய்யப்பட்டுளது. ஆதலால் அடிகள் காலம் அதற்குப் பிற்பட்டதே யாகும். சுந்தரமூர்த்தி சுவாமிகள் காலம் ஐயமற வரையறுக்கப்பட்டதன்று, மாணிக்கவாசகர் காலமும் அத்தகையதே யென்று சிலர் சொல்லுவர். ஆயினும் முன் காட்டிய திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில் அடிகள் நால்வர் சமயகுரவரையும் சொல்லிச் சிவவாக்கியரைத் துதித்துப் பின் வரகுண தேவர் செய்த அருட் செயல்களை எடுத்தோதினர். வரகுண பாண்டியன் காலம் கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டாகும். அப் பாண்டியன் காலத்துக்குப் பின்னும் நம்பியாண்டார் நம்பிகள் காலத்துக்கு முன்னும் இருந்த பட்டினத்தடிகள் கி. பி. பத்தாம் நூற்றுண்டில் இருந்தவ ராவர்.

பட்டினத்தடிகள் அருளிசசெயல்கள்

சரித்திரங்களில் பட்டினத்தடிகள் அருளிச்செய்தனரெனப் பாட்டுக்களின் முதற் குறிப்புக்களும், பாட்டுக்களும், பிரபந்தங்களின் பெயர்களும் காட்டப்பட்டன. முதற் குறிப்புக் காட்டிய பாட்டுக்களில் சில அகப்படவில்லை. பட்டினத்துப் பிள்ளையார் புராணத்தில் காட்டப்பட்ட 'தங்களைக் கேட்டுப் பிறந்

மறைந்தவை

திலம்,' 'அருள் கூர்', 'வையமுய்ய', 'பன்னுக வாடகப் பொற்பாதம்' 'வான்தேடுமறையேயோ' என்னும் முதற் குறிப்புக்

களை யுடைய பாட்டுக்கள் அவை. 'மெய்நாட்டோர்' என்னும் முதற் குறிப்பையுடைய பாட்டை முதலாகக் கொண்ட மாலையும் மறைந்த தாகல்வேண்டும்.

அடிகள் அருளிச்செய்தனவாகப் பதினோராந் திருமுறையுட் காணும் பிரபந்தங்கள் ஐந்து. அவை கோயி னான்மணிமாலை, திருக்கழுமல மும்மணிக் கோவை, திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, திரு வேகம்ப முடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபா வொருபது என்பன. இந்நூல்க ளனைத்தும் சொல்லழகும் பொருட்பொலிவும் அமைந்தனவாய்ப் பத்திச்சுவை நிறைந்து புலவரும் முனிவரும் ஒப்பப் போற்றுந் தன்மையனவா யுள்ளன.

கோயி னான்மணிமாலை சிதம்பரத்தின் மேற் பாடிய பிரபந்தம். இதனுள், இரண்டாம் பாட்டிலே 'பார்த்திவராவதில்...கடைகொண்ட பிச்சைகொண் டுண்டிருக்கு வாழ்தல் களிப்புடைத்தே' என்று அடிகள் சொல்லியது அவர் பெருந்துறவிற் கேற்றதே. நான் காம் பாட்டிலே சிவனுக்குத் தசாங்கம் உரைத்தார். ஆறும் பாட்டிலே 'அடியொன்று பாதல மேழிற்கு மப் புறம் பட்டது' என்றது 'பாதாளமேழினுக் கப்பால்' என்னுந் திருவாசகத்தை நினைப்பூட்டுகின்றது. எட் டாம் பாட்டிலே 'எண்டோள் வீசி' என்றது திருநாவுக் கரசுகள் தேவாரத்தை நினைப்பூட்டுகின்றது. பதினாறும் பாட்டில் சரீரத்தைக் கலமாக உருவகித்தது மிக அழகிது. இருபத்து நான்காம் பாட்டில் 'தாளினேவல் தலையினியற்றி' என்பது பிரசித்தமாகிய பழமொழி. முப்பத்தாறும் பாட்டில் அடிகள் தமக்கு வேண்டுதல் வேண்டாமை யென்னும் இரண்டு குணங்களும் ஒழிந்த நிலை வந்தமையை நன்றாகக் குறிப்பிட்டார். நாற்ப

அடிகள் பழமொழிகள் பல உபயோகித்த லால் அவர் உலகஞானம் நிரம்பி யிருந்தவரென்பது தெளிவாகின்றது. பத்தொன்பதாம் பாட்டில்

ஆயிரங் கிரணத் தலர்கதிர் முன்னம்
பாயிருள் கெடுமெனப் பகர்பழ மொழி

என்பதையும், இருபத்திரண்டாம் பாட்டில்

புறவார் பசும்புற் கறவாக் கற்பசு
வாயிடைச் செருகித் தூயநீ ருதவி
அருஞ்சுவைப் பால்கொளப் பெருஞ்சுரை வருடும்
பேதையர் போலவும் ஓதுநஞ் சமரும்
எட்டியை விரும்பி மட்டுநீர் தேக்கி
ஈநுழை கல்லா மேல்நிமிர் வேலி
யுறம்படி யமைத்து நறுங்கனி கொள்ளக்
கருதி முயலுந் திருவிலி போலவும்
இலவுகா வரிசி உலைபெய எண்ணி
வெற்றுமி குற்றும் பற்றிலர் போலவும்
அருநில முழுத்தில் எருமிகப் பெய்து
வித்திட் டாங்கே விளைபயன் கொள்ளச்
சித்தந் துன்னும் மத்தர் போலவும்
வாழ்நா ளனைத்தும் வீழ்நா ளாக்கி
இம்மையு மறுமையுஞ் செம்மையிற் பொருந்தா
திடருறு மாந்தர் புடவியிற் பலரால்

என்பதையும் நோக்குக. இருபத்தைந்தாம் பாட் டில் சிவபெருமானை வேந்தனாக உருவகித்து அவர் உயிர்களை யாட்கொள்ளும் முறையினைப் பயிர்த் தொழிலின் மேல் வைத்துக் கூறி இறுதியில் உயிர்கள் தத்தம் வினைப்பயனை யடையச் சிலவற்றை மாத்திரம் அவர் தம் திருவடி வீட்டிற் சேர்க்கும் திறத்தை

அரசுகொள் கடமை யாறிலொன் றென்னும்
புரைதீர் முறைமை புதுக்கினை போலும்

என்று அரசன் ஆறிலொரு கடமை கொள்வதோடு

பொருத்திக் காட்டினர். இருபத்தெட்டாம் பாட்டில்

பயந்ததஞ் சேயவர் சொல்லுமொழி
குழலினும் யாழினும் அழகிதாய்

என்றது 'குழலினிது' என்னும் திருக்குறளை நினைப் பூட்டும். இதில் அடிகள் இந்திரன் வாழ்வும் பிரமன் வாழ்வும் விஷ்ணு வாழ்வும்

அழியா இன்பமென் றெழியா துரைப்பினும்
கற்றவர் கருத்தி னுற்று நோக்குழி
இந்திர சால முந்துநீள் கனவு
வெண்டேர் போல உண்டெனத் தோன்றி
இலவாம் ஆதலின் நலமல ஆங்கவை
நிலையே றுடையது நின்னருட் செல்வம்
அன்னதே பெறுதற் குன்னினன் தமியேன்

என்று தம் விரக்தி வளத்தை வெளிப்படுத்தினர்.

திருவிடைமருதூர் மும்மணிக்கோவை திருவிடை மருதூர் மேற் பாடிய பிரபந்தம். பட்டினத்தடிகள் முதற்பாட்டில் அர்த்தநாரீசுவர மூர்த்தத்தை மிக அழகாக வர்ணித்திருக்கின்றார். யாம் காணவல்லேம் என்று கர்வத்தோடு தேடுவார்க்குப் புலப்படாத சிவ பெருமான்

பத்தியடியவர் பச்சிலை யிடினும்
முத்தி கொடுத்து முன்னின் றருளுவர்

என்று குறித்தார். நான்காம் பாட்டில் பிறவித் துன் பத்தையும் அதனை யொழிக்கும் நெறியையும்

தோற்றும் பொழுதின் ஈற்றுத் துன்பத்
தியாயுறு துயரமும் யானுறு துயரமும்
இறக்கும் பொழுதின் அறப்பெருந் துன்பமும்
நீயல தறிகுநர் யாரே அதனல்
யான் இனிப் பிறத்த லாற்றேன் அஃதான்
றுற்பவந் துண்டத்தல் நிற்பிடித் தல்லது

பிறிதொரு நெறியி னில்லைஅந் நெறிக்கு
வேண்டலும் வெறுத்தலும் மாண்டொன் றிற் படரா
உள்ளமொன் றுடைமை வேண்டும் அஃதன்றி
ஐம்புல னேவ லாணைவழி நின்று
தானல தொன்றைத் தானென நினையு
மிதுவென துள்ள மாதலின் இதுசொடு
நின்னை நினைப்ப தெங்ஙனம்

என்று விரித்தனர். ஏழாம் பாட்டில் 'எய்ப்பில் வைப்பெனவுதவும்' என்றது திருவாசகத்தை நினைப் பூட்டுவது. 'எய்ப்பினில் வைப்பு' என்பது பழ மொழியுமாம். (பழமொழி. 37) அப் பாட்டில் அடி கள்,

முத்தித் தாள மூவா முதல்வநின்
திருவடி பிடித்து வெருவரல் விட்டு
மக்களும் மனைவியும் ஒக்கலுந் திருவும்
பொருளென நினையா துன்னரு ளினைநினை நி
திந்திரச் செல்வமும் எட்டுச் சித்தியும்
வந்துழி வந்துழி மறுத்தன ரொதுங்கிச்
சின்னச் சீரை துன்னற் கோவணம்
அறுதற் கீளொடு பெறுவது புனைந்து
சிதவ லோடொன் றுதவுழி எடுத்தாங்
கிடுவோ ருளரெனின் நிலையினின் றயின்று
படுதரைப் பாயலிற் பள்ளி மேவி ஓவாத்
தகவெனும் அரிவையைத் தழீஇ மகவெனப்
பல்லுயி ரனைத்தையும் ஒக்கப் பார்க்குமின்
செல்வக் கடவுட் டொண்டர் வாழ்வு

என அடியார் வாழ்க்கையை விவரித் துரைப்பவர் உலகர் வாழ்க்கையை அதனோடுவமைகூறல் குளப்படி நீரை அளப்பருந் தன்மைப் பிரளயச் சலதியோடு உவமை கூறுதல் போலாகு மென்றனர். பத்தாம் பாட்டில் சிவபெருமானை

அறுசுவை யதனினும் உறுசுவை யுடைத்தாய்க்
காணினுங் கேட்பினும் கருதினுங் களிதருஞ்
சேணுயர் மருத மாணிக்கத் தீங்கனி

என வருணித்து, அக்கனி யுண்டாக்குதற்கு வேண்டிய சாதனங்களையும் சாங்கமாக உரைத்தார். பதின் மூன்றும் அகவலில் அடிகள் தத்துவ சோதனை செய்து பார்த்துத் தம்மைக் காணு துழன்றவர் திருவருள் கிடைத்தவுடனே ஆன்மதரிசனம் சிவதரிசன முதலியவற்றைத் தாம் பெற்றவாற்றை யுரைத்தார். பட்டினத்துப்பிள்ளையார் புராணத்துச் சிவபெருமான் காவற்கார வேடம் பூண்டுவந்து இவரை 'நீ யார்?' எனக் கேட்டபொழுது இவர் உரைத்த விடைக்கும் இப் பாட்டுக்கும் சம்பந்தமுள்ளது. கதை உண்மையன்றாயின் இப் பாட்டினின்றும் தோன்றி யிருக்கலாம். பதினாறும் பாட்டில்

மருதிடங் கொண்ட மருத வாண
நின்னது குற்ற முளதோ நின்னினைந்
தெண்ணருங் கோடி இடர்ப்பகை களைந்து
கண்ணுறு சீற்றத்துக் காலனை வதையா
இறப்பையும் பிறப்பையும் இகழ்ந்து சிறப்பொடு
தேவ ராவின் கன்றெனத் திரியாப்
பாவிகள் தமதே பாவம்

என்று சிவபெருமானை நாடாத பாவிகளின் பாவப் பெருமையைக் கூறிய அடிகள் அறுசுவை யுண்டி சமைத்து வைத்திருப்பவும் அதனைப் புசியாது ஒருவன் பசியால் வருந்துதல் அவ்வுண்டியின் குற்றமோ, நல்ல நீர் வைத்திருப்பவும் அதனைக் குடியாது ஒருவன் தாகமாயிருக்கை அந் நீரின் குற்றமோ, மரங்கள் நெருங்கி வாசனை வீசுஞ் சோலை யிருப்பவும் அதனை விட்டு ஒருவன் வெயிலில் உடலம் வேர்க்க நடந்து

செல்வானுயின் அது அச் சோலையின் குற்றமோ என்று தம் கூற்றிற்கு நியாய முரைத்தனர். பத்தொன்ப தாம் பாட்டில், உலகத்தில் பலர் முத்தியைப் பெறு தற்பொருட்டு மனைவி மக்களைத் துறந்து தவவொழுக்க மேற்கொண்டு உண்டி முதலிய சுகங்க ளனைத்தையும் வெறுத்துத் துன்புறவும் தாம் சர்வ சுகங்களையும் அநுபவித்துக்கொண்டே யிருந்தும்

மந்திர வெழுத்தைந்தும் வாயிடை மறவாது
சிந்தை நின்வழி செலுத்தலின் அந்த
முத்தியு மிழந்திலம்

என்றுரைத்த அடிகள் துறவையே பிரதானமாகக் கொண்டாரென்று துணிந்து சொல்லல் பொருந்துமா! அதற்கு நியாயஞ்சொல்லப் புகுந்தவர்

வல்லா னொருவன் கைம்முயன் றெறியினும்
மாட்டா வொருவன் வாளா எறியினும்
நிலத்தின் வழாஅக் கல்லேபோல்
நலத்தின் வழார்நின் நாமநவின் றோரே

என்றார். இருபத்தைந்தாம் பாட்டில் அடிகள்

கல்லா லெறிந்த பொல்லாப் புத்தன்
நின்னினைந் தெறிந்த வதனால்
அன்னவன் றனக்கும் அருள்பிழைத் தின்றே

என்று சாக்கிய நாயனார் கதையை யுரைத்தார். இருபத்தெட்டாம் பாட்டில்,

நின்னை வணங்கிப் பொன்னடி புகழ்ந்து
பெரும்பதம் பிழையா வரம்பல பெற்றோர்

இன்னாரின்னாரென்று கூறவந்த அடிகள் தேவருள்ளும் முனிவருள்ளும் சிறந்தார் பெயர்களைக் கூறிப் பின் தேவார முடையாரையும் திருவாசக முடையாரையுங் குறித்துச் சிவவாக்கியர் பெயரையும் சொல்லி, வரகுண பாண்டியன் அருஞ் செயல்களை விரித்துரைத்தார்.

முப்பதாம் பாட்டில் 'வெண்காடனென்னுந் தரத்தினு மாயது' என்றமை அடிகள் இயற் பெயர் திருவெண் காடர் என்பதைக் குறித்ததுபோலும்.

திருவேகம்பமுடையார் திருவந்தாதி காஞ்சிபுரத்து ஏகாம்பரநாதர்மேல் பாடிய பிரபந்தம். தொண்ணூற் றொன்பதாம் பாட்டில் 'பதிற்றுப்பத்துப் பாட்டிவைத் தார்' என்றது இந் நூல் நூறுபாட்டுக்கள் கொண்ட தென்று உணர்த்தியது. சங்கநூல்களுள் பதிற்றுப் பத்து என்றொரு தொகைநூல் உண்டு. அது வேறு. இந்நூலில் பக்திரஸமலிந்திருப்பதோடு அகப்பொருட் டுறைகள் அமைந்த பாட்டுக்கள் பல உள. ஐம்பத் தைந்தாம் பாட்டு முதற் பத்துப் பாட்டுக்களிலே 69 சிவஸ்தலங்களின் பெயர்கள் உரைக்கப்பட்டன.

திருவொற்றியூர் ஒருபா வொருபது ஒற்றியூ ருடைய சிவபிரான் மேல் அந்தாதித் தொடையில் யாக்கப்பட்ட பத்துப்பாட்டுக்கள் அடங்கிய ஒரு சிறு பிரபந்தம். முதற்பாட்டில் அடிகள் சிவபிரானுடைய சர்வ வியாபகத்துவத்தை வியந்தார். இரண்டாம் பாட்டில் பலபடக் கருதுவோர்க்கு அவ்வவ்வாறாக வெளிப்படும் சிவபிரானுருவைப் பளிங்குக்கு உவமித் தார். மூன்றாம் பாட்டில் சிவ பராக்கிரமங்களை எடுத் துக் கூறினர். நான்காம் பாட்டில் எவ்வகை உயிரின் ஒழுக்கமும் சமுத்திரத்தில் அலைபோலச் சிவபெருமா னிடத்தே தோன்றி யொடுங்கும் என்றனர். ஆறாம் பாட்டில் அடிகள்

தூமதி சடைமிசைச் சூடுதல் தூநெறி
யாமதி யானென அமைத்த வாறே
அறனுரு வாகிய ஆனே றேறுதல்
இறைவன் யானென இயற்று மாறே

அது அவள் அவனென நின்றமை யார்க்கும்
பொதுநிலை யானென உணர்த்திய பொருளே
முக்கண னென்பது முத்தீ வேள்வியில்
தொக்க தென்னிடை என்பதோர் சுருக்கே
வேத மான்மறி யேந்துதல் மற்றதன்
நாதன் நானென நவிற்று மாறே
மூவிலை யொருதாட் சூல மேந்துதல்
மூவரும் யானென மொழிந்த வாறே
எண்வகை மூர்த்தி யென்பதிவ் வுலகினில்
உண்மை யானென உணர்த்திய வாறே

எனச் சிவபெருமானது திருக்கோலத்தின் அந்தரங்க தாற்பரியத்தை வெளியிட்டனர். எட்டாம் பாட்டில் உடலாகிய பெருங்கடலுட் பட்டுத் தடுமாறும் உயிர் சிவபெருமான் பாதங்களாகிய நாவாயைக் கண்டு முத்திபெறும் என்னும் உருவகத்தை அழகாக விரித்துரைத்தார்.

இனி, பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடற்றிரட்டு என்று வழங்கும் பாடற்றொகுதியுள் பல வகைப் பாடல்கள் உள்ளன. மூன்று அகவல்கள் கோயிற்றிருவகவல்களென வழங்கிவருகின்றன. அவை கோயிலெனப்படும் சிதம்பரத்தின் மேலன. கச்சித் திருவகவல் காஞ்சிபுரத்தின் மேற்று. திருவேகம்பமாலை காஞ்சி ஏகம்பர் மீது பாடப்பட்ட நாற்பது பாடல்கொண்ட ஒரு பிரபந்தம். இதில் பல பாட்டுக்களில் அடிகள் குப்தவித்தையாகிய யோகநெறியினைச் சூசிப்பித்துள்ளார்:

மாயநட் போரையு மாயா மலமெனு மாதரையும்
வீயவிட் டோட்டி வெளியே புறப்பட்டு மெய்யருளாந்
தாயுடன் சென்றுபின் தாதையைக் கூடிப்பின் தாயைமறந்
தேயும தேகிட்டை யென்று னெழிற்கச்சி யேகம்பனே.

பூதங்க ளற்றுப் பொறியற்றுச சாரம் புலன்களற்றுப்
பேதங் குணமற்றுப் பேராசை தானற்றுப் பின்முனற்றுக்
காதங் கரணங் களுமற்ற ஆனந்தக் காட்சியிலே
ஏதங் களைந்திருப் பேன்இறை வாகச்சி யேகம்பனே.

திருவருளுடையோர்க்கு அடையாளத்தைச் சொல்ல வந்தவர்,

பொருளுடையோரைச்செயலினும்வீரரைப்போர்க்களத்தும்
தெருளுடை யோரை முகத்தினுந் தேர்ந்து தெளிவதுபோல்
அருளுடை யோரைத் தவத்திற் குணத்தில் அருளில்அன்பில்
இருளறு சொல்லினுங காணத் தகுங்கச்சி யேகம்பனே

என்றார்.

திருவேகம்ப விருத்தம் என்பது காஞ்சி ஏகம்பர்மேல் ஒரு தனிவிருத்தம். திருத்தில்லை, திருவெண்காடு, திருச்செங்காடு, திருவொற்றியூர், திருவிடைமருதூர், திருக்கழுக்குன்றம், திருக்காளத்தி, கைலாயம், மதுரை, திருவாரூர், திருக்காஞ்சி, கச்சிக்காரோணம், திருவிருப்பையூர், திருவையாறு, குற்றாலம் என்னுந் தலங்களின்மே லெல்லாம் பாட்டுக்கள் காணப்படுகின்றன.

ஓடு மெடுத்தத ளாடையுஞ் சுற்றி உலாவிமெள்ள
வீடுக டோறும் பலிவாங்கி யேவிதி யற்றவர்போல்
ஆடு மருட்கொண்டிங கம்பலத் தேநிற்கு மாண்டி நன்னைத்
தேடுங கணகென்ன காண்சிவ காம சவுந்தரியே.

ஆயும் புகழ்த்தில்லை யம்பல வாண ரருகிற்சென்றால்
பாயும்'இடபம் கடிக்கும் அரவம்பின் பற்றிச்சென்றால்
பேயுங கணமும் பெருந்தலைப் பூதமும் பின்தொடரும்
போய்என்செய் வாய்மன மேபிணக் காடவர் போமிடமே

என்பன போன்ற நகைச்சுவை மலிந்த பாட்டுக்களும் மேற்குறித்த பாடல்களுட் காணப்படும். இப் பிறப்பில் வறுமையால் வருந்துபவர் முற்பிறப்பில் தவஞ் செய்யாதவர் என்னும் உண்மையை அடிகள்

ஆற்றோடு தும்பை யணிந்தாடு மம்பல வாணர்தமைப்
போற்று தவர்க்கடை யாளமுண் டேயிந்தப் பூதலத்தில்
சோற்றுவி யற்றுச் சுகமற்றுச் சுற்றத் துணியுமற்றே
ஏற்றாலும் பிச்சை கிடையாமல் ஏக்கற் றிருப்பர்களே

என்று குறித்தார்.

காடே திரிந்தென்ன காற்றே புசித்தென்ன கந்தைசுற்றி
ஓடே எடுத்தென்ன உள்ளன் பிலாதவர் ஓங்குவிண்ணோர்
நாடே இடைமரு தீசர்க்கு மெய்யன்பர் நாரியர்பால்
வீடே யிருப்பினும் மெய்ஞ்ஞான வீட்டின்ப மேவுவரே

என்பதனால் பக்தி முக்கியமேயன்றித் துறவு முக்கிய மன்றென்பது காட்டப்பட்டது.

வாளான் மகவரிந் தூட்டவல் லேனல்லன் மாதுசொன்ன
சூளால் இளமை துறக்கவல் லேனல்லன் தொண்டுசெய்து
நாளாறில் கண்ணிடந் தப்பவல் லேனல்லன் நானினிச்சென்
றாளாவ தெப்படி யோதிருக் காளத்தி யப்பருக்கே

என்பதில் சிறுத்தொண்டர், திருநீலகண்டர், கண்ணப்பர் கதைகள் குறிப்பிக்கப்பட்டன.

மந்திக் குருளையொ் தேனில்லை நாயேன் வழக்கறிந்துஞ்
சிந்திக்கு சிந்தையை யானென்செய் வேனெனைத் தீதகற்றிப்
புந்திப் பரிவிற் குருளையை யேந்திய பூசையைப்போல் [றிப்
எந்தைக் குரியவன் காணத்த னேகயி லாயத்தனே

என்பதில் மர்க்கட நியாயத்தினும் மார்ச்சால நியாயமே மிகப் பொருத்தமான தென்று குறிப்பித்தார்.

தாயாருக்குத் தகனகிரியை செய்கையிற் பாடியன எனச் சில பாடல்கள் காணப்படுவன. அவற்றுட் சில முன்னமே காட்டப்பட்டன. பொதுவென்று அறுபத்தொரு கலித்துறைகளும் பத்தொன்பது வெண்பாக்களும் மூன்று விருத்தங்களும் காணப்படுகின்றன. அவற்றுட் சில முன்னரே கதைகளிற் காட்டப்பட்டுள்ளன. அவை பாடிய சந்தர்ப்பங்களுங் கூறப்பட்

டன. சிலவற்றிற்குச் சந்தர்ப்பம் விளங்குவதாயில்லை: உதாரணமாக,

வாசற் படிகடந்து வாராத பிச்சைக்கிங்
காசைப் பலிவதில்லை அண்ணலே—

என்னும் இதனை 'இருக்குமிடந் தேடி என்னும் வெண்பாவோடு சேர்ப்பதுண்டு. அதற்கு ஆதாரமில்லை.

மாலைப் பொழுதில்நறு மஞ்சளரைத் தேகுளித்து
வேலையினைக் கிட்டு விழித்திருந்து—சூலாகிப்
பெற்றாள் வளர்த்தாள் பெயரிட்டாள் பெற்றபிள்ளை
பித்தானா லென்செய்வாள் பின்

என்பதன் சந்தர்ப்பம் அறியக்கூடவில்லை. 'நாய் பிளக்கப் பொய்யுரைத்து' என்னும் பாட்டு மணமக்களை ஆசீர்வதிக்கப் பாடிய தென்பது நம்பக்கூடாததா யிருக்கின்றது. சாதாரணமாக உலகரைப் பார்த்துப் பாடிய அப் பாட்டு அவர்கள் மணமுடித்து மக்களைப் பெற்று வருந்தும் வகையைக் குறித்தது.

அட்டாங்க யோகமு மாதார மாறு மவத்தையைந்தும்
விட்டேறிப் போன வெளிதனி லேவியப் பொன்றுகண்டேன்
வட்டாகிச் செம்மதிப் பாலூற லுண்டு மகிழ்ந்திருக்க
எட்டாத பேரின்ப மென்னை விழுங்கி யிருக்கின்றதே.

எட்டுத் திசையும் பதினாறு கோணமும் எங்குமொன்றாய்
முட்டித் ததும்பி முளைத்தோங்கு சோதியை மூடரெல்லாம்
கட்டிச் சுருட்டித்தம் கக்கத்தில் வைப்பர் கருத்தில்வையார்
பட்டப் பகலை இரவென்று கூறிடும் பாதகரே.

வெட்டாத சக்கரம் பேசாத மந்திரம் வேறொருவர்க்
கெட்டாத புட்பம் இறையாத தீர்த்தம் இனிமுடிந்து
கட்டாத லிங்கம் கருதாத நெஞ்சம் கருத்தினுள்ளே
முட்டாத பூசையன் றோகுரு நாதன் மொழிந்ததுவே

என்பன போன்றவை குப்தவித்தையைக் குறிப்பன.

நேமங்கள் நிட்டைகள் வேதங்கள் ஆகம நீதிநெறி
ஓமங்கள் தர்ப்பணம் சந்தி செபமந்த்ர யோகநிலை
நாமங்கள் சந்தனம் வெண்ணீறு பூசி நலமுடனே
சாமங்கள் தோறும் இவர்செய்யும் பூசைகள் சர்ப்பனையே.

சொல்லிலுஞ் சொல்லின் முடிவிலும் வேதச் சுருதியிலும்
அல்லிலும் மாசற்ற ஆகாயந் தன்னிலும் ஆய்ந்துவிட்டோர்
இல்லிலும் அன்ப ரிடத்திலும் ஈசன் இருக்குமிடம்
கல்லிலுஞ் செம்பிலு மோஇருப் பானெங்கள் கண்ணுதலே

என்னும் பாட்டுக்களைப் புறச்சமயிகள் சைவத்தைப் பழித்தற்குத் தங்களுக்குப் பேராதாரமாகக் கருதுகின்றனர். அவற்றின் கருத்தை ஊன்றி நோக்கின் அவை ஆதாரமாகாமை தெளிவாம். மற்றுப் பட்டினத்துப் பிள்ளையார் பாட்டெனச் சாமானிய உலகமறிந்தது இத் திருப்பாடற்றிரட்டுப் பாட்டுக்களே. தாயுமானவர் பாடலையொப்ப இவை சாமானியரா லெல்லாம் பாடப்படுகின்றன.

இனி முதல்வன் முறையீடு, அருட் புலம்பல், இறந்த காலத் திரங்கல், நெஞ்சோடு புலம்பல், பூரண மாலை, நெஞ்சோடு மகிழ்தல் என்னும் பிரபந்தங்களும் பட்டினத்தடிகள் செய்தனவாகவே வழங்குகின்றன. உடற்கூற்றுவண்ணமென ஒரு சந்தக்குழிப்பும் அவர் பாடியதென்றே வழங்குகின்றது. முதல்வன் முறையீடு கன்னிவனநாதரை முன்னிலையாக்கிப் பாடப்பட்டிருக்கின்றது. அருட் புலம்பல் திருவருட்செயலை விரித்துரைத்தது. இறந்தகாலத்திரங்கல் இறந்தகாலத்தில் அடிகள் இருந்த மாதிரியைச் சுட்டுகின்றது. நெஞ்சோடு புலம்பல் நெஞ்சினுடைய இழிவை அதனையே முன்னிலைப்படுத்திக் கூறியது. பூரணமாலை பூர்ண வஸ்துவாகிய கடவுளை முன்னிலைப்படுத்தி யோகநெறி

ஞானநெறிகளைச் சாங்கமாக உரைப்பது. நெஞ்சோடு மகிழ்தல் நல்வழிப்பட்ட நெஞ்சின் நிலையை மெச்சி யுரைத்ததாகும். உடற்கூற்று வண்ணம் உயிரொடு சேர்ந்த மானுட சரீரம் பிறப்பு முதல் இறப்பு வரை யடையும் பல காரியங்களையும் கூறுகின்றது.

பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடற்றிரட்டு சாமானியருக்குப் பொருள்விளங்கும் எளிய நடை யில் இயற்றப்பட்டுள்ள தென்பது முன்னரே குறிக் கப்பட்டது. முதல்வன் முறையீடு முதலிய பிரபந்தங் களோ கேவலம் உலகவழக்குச் சொற்கள் மலிந் துள்ளன.

இவ்வாறு பதினோராந்திருமுறையி லுள்ள பட்டி னத்தடிகள் பிரபந்தங்களுக்கும் ஏனையவற்றிற்கும் பாஷை நடையிற் பேதங் காணப்படுதலால் அவற் றைச்செய்தாரொருவர் இவற்றைச்செய்தார் மற்றொரு வராதல்வேண்டுமென்று கொள்வார் பலர். 'மேடை', 'மனு', 'வேட்டி', 'பொம்மலாட்டம்', 'பொக்கசம்' 'தெண்டு', 'வேகுதே', 'வேலைமினக்கிட்டு', 'கலங் றண்டா', 'சலவை', 'சொருசு', 'போச்சுதடி', 'சவாது', 'வங்கிஷம்', 'மாங்கிஷம்', 'ஒப்பாரி', 'ஒய்யாரம்', 'தாவாரம்', 'மாய்கை', 'ஏகரித்து', 'பல்லர்க்கு', 'முழித்திருந்து' முதலிய பிரயோகங் கள் பதினோராந் திருமுறையிற் பிரபந்தங்கள் செய்த அடிகளே இந் நூல்களைச் செய்தவராகாரென்பதற்குப் பேராதாரமாம். மற்று, இவற்றில், 'பிதிரார்ச்சித' மென்பதற்கு 'முதுபொருள்' என்னும் பிரயோக மும், 'அப்பிரதக்ஷிண'த்திற்குப் 'பின்வல' மென்ப தும், 'அக்ஷயபாத்திர'த்திற்கு 'வற்றாத பாத்திர' மும்

இன்னும் இவைபோன்ற சில பிரயோகங்களும் அழகா யிருக்கின்றன. கருத்துக்கள் உயர்ந்த கருத்துக்க ளாயினும், யோக ஞானநெறி ரகசியங்கள் பல காணப்படினும் இந் நூல்கள் பதினோராந் திருமுறைப் பட்டினத்தடிகளாற் செய்யப்பட்டன வல்லவென்று சொல்லவேண்டி யிருக்கின்றது. பதினோராந் திரு முறைப் பிரபந்தங்களிற் காணும் சொற்றொடர்கள் இவற்றில் ஏகதேசத்திற் காணப்படுதலால் இவையும் அவற்றைச் செய்தாரே செய்தனவாகுமென்று பிற் காலத்தார் துணிந்திருக்கக்கூடும். இன்னும், பத்தாம் நூற்றாண்டி லிருந்த பட்டினத்தடிகள் பிரபந்தங்களைப் பதினோராந் திருமுறையிற் கோத்த நம்பியாண்டார் நம்பிகள் ஐந்தை மாத்திரம் கோத்துவிட்டு ஏனைய வற்றைக் கழித்தாரென்றல் எங்ஙனம் பொருந்தும்! நக்கீரனார் திருமுருகாற்றுப் படையைக் கோத்தவர் அவர் செய்தனவோ என்று புலவர் சிலர் ஐயமுறுதற் கேதுவாயுள்ள பெருந்தேவபாணி, கோபப்பிரசாத முதலியவற்றையும் கூடக் கோத்தனரன்றோ. ஆதலால் நம்பியாண்டார் நம்பிகள் காலத்துக்கு முன்னிருந்த பட்டினத்தடிகள் வேறு அவர்க்குப் பின் இருந்து திருப்பாடற்றிரட்டு முதலியவற்றைச் செய்தவர் வேறு என்று சொல்வதே நியாயமாகும். பட்டினத்துப் பிள்ளையார் சரித்திரமென்று வழங்குவ தெல்லாம் முற்காலத்தவரைச் சேருமோ பிற்காலத்தவரைச் சேருமோ என்னில், அது துணிந்துரைத்தல் கூடாது. வேறு வேறு காலத்து வாழ்ந்த மற்றைப் பெரியார் சரித்திரங்களும் இதில் வந்து கலந்துள்ளனவோ என்று ஆசங்கிக்கவேண்டி யிருக்கின்றது. ஆதலால் முற்காலத்தவர் சரித்திரங் கொஞ்சம் பிற்காலத்தவர்

சரித்திரங் கொஞ்சம் இதர சரித்திரங்கள் கொஞ்சம் எல்லாம் சேர்ந்து பட்டினத்துப் பிள்ளையார் சரித்திர மாயின என்று சொல்லுதலே ஏற்புடைத்தாகும்.

பண்டைக்காலத்துப் பெரியாருள் எவர் சரித்திரத்தை எடுத்து நோக்கினும் விஷயங்கள் இம் மாதிரி ஐயமுறுதற் கேதுவாயிருப்பது நம் நாட்டுக்குப் பெருங் குறையாயிருக்கிறது. நம் காலத்து வாழ்ந்திருந்த பெரியார்கள் சரித்திரமும் இப்படியே பொய்யும் மெய்யும் கலந்து எழுதப்படுவதனாலும், யாவரும் ஆசங்கியாவாறு உண்மைகள் மாத்திரம் தெளிவாகக் காட்டி எழுதப்படாமையாலும் நம் நாட்டினர்க்குச் சரித்திர அறிவு இன்னும் சைசவப்பருவத்திலேயே யிருக்கின்றதுபோலும்!